








சென்னைக் கந்தப்பெருமானுர் கோயில் என்னும்

# ஸ்ரீ முத்துக்குமார ஸ்வாமியார்

# ஆலய வைபவம்.

(வசனம்)

[சென்னை மாநகரம் புராதன குறிப்பும்,

தெய்வமணி மாலையும் அடங்கியுள்ளது.]





1931-ம் வருஷத்திலுள்ள
ஸ்ரீ கந்தப் பெருமாணுர் ஆலய

தர்மகர்த்தர்கள்:—

[புளியம் பாக்கம் பாபாளம்மாள்-
உண்ணுமலேயம்மாள் தர்ம
பண்டின் டிரஸ்டிகளும்]

திருவாளர்கள்:

1 தோ. ச. இராஜு செட்டியார்
2 வல்லம். மாணிக்க செட்டியார்
3 வெ. சுந்தர ராமாநுஜலு
செட்டியார்
4 ப. நடேச செட்டியார் B. A.
5 நே. செங்கல்வராய செட்டியார்

ப்ரம்மஸ்ரீ
மணியம்:—

1 அ. சந்திர சேகர ஐயர்

அர்ச்சகர்கள்:-

1 முத்துக்குமாரசுவாமி குருக்கள்
2 துரைசாமி குருக்கள் வகையரா

பக்தி செய்தால் முக்தி பெறலாம்:

ஓம்

முருகன் துணை.

# ஸ்ரீகந்தப் பெருமானுர் கோயில் என்னும் ஸ்ரீ முத்துக்குமார ஸ்வாமி ஆலய வைபவம்.

[இதில் சென்னைமா நகரத்தின் புராதனக் குறிப்பு; வடலூர் சிதம்பரம்-இராமலிங்க சுவாமிகள் அருளிச்செய்த தெய்வமணிமாலை அடங்கியுள்ளது.]

இந்நூலாசிரியன்:—

ஆயுர்வேத பண்டிதர்

**சை. ர. நமசிவாய(ராஜயோகி)செட்டியார் அவர்கள்.**

(மஹான் சாது. சை. இரத்தின செட்டியார் அவர்கள் ஜ்யேஷ்ட புத்திரன்)

சிறப்புப்பாயிரம்:—

இலக்கண-இலக்கிய-தர்க்க-வேதாந்த போதகாசிரியர்

**கோ. வடிவேலு செட்டியார் அவர்கள்.**

பிரசுரிப்போர்:—

**சை. ந. பாலசுந்தரஞ் செட்டியார் அவர்கள்.**

(சை. ந. நமசிவாய (ராஜயோகி) செட்டியாரின் ஜ்யேஷ்ட புத்திரன்)

புத்தகம் கிடைக்கு மிடம்:—

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புத்தகசாலை,

(முருகன் நூற்பதிப்புக் கழகம்)

நெ. 4/34, நயினியப்ப நாய்க்கன் தெரு,

பார்க் டவுன், (P. O.) சென்னை.

 1931 [விலை அணா 12

ஓம்

# ஸ்ரீலஸ்ரீ பாம்பன்-குமரகுருதாச சுவாமிகள்

சென்னைக் கந்த கோட்டத்து முத்துக்குமார

சுவாமியின்பேரில் அருளிச்செய்த

(இரண்டாம் பத்து)

பதின்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம் (இசை)
அடியொன்றற் கிருபத்து நான்கக்கரம்

"ஈச னெற்றிக் கணியோ ளிக்கற்றை
யேயு ருத்திட்ப மேவி மெய்ச்சத்தி யின்ன பேத
கூச துத்தத்தை யேயு ணேப்பற்ற
கோம ளப்பொற்பவேல் செ லுத் தத்த வென்னவோதி
மூச லுற்பத்தி காவ னச்சிச்செய்
மூவ ருட்பற்றோ டேயருச் சிக்கு மம்ம ரூத
ஆசின் மட்டுற்ற பாத னக்கர்த்த
ஞானி முத்துக்கு மார னிச்சித்த சென்னையீதே."

(ஸ்ரீமத்-குமாரசுவாமியம்.)

---

"அழிந்து புவன மொழிந்திடினு
மழியாத் தோணி புரத்தின்மறை
யவர்கள் குலத்தி னுதித்தானே
டம்மை தோன்றி யளித்தவள்ளச்
செழுந்தண் முலைப்பால் குடித்து
முத்தின் சிவிகை யேறி மதுரையிற்போய்ச்
செழியன் பிணியுஞ் சமண்பகையுந்
தேவி துயருந் தீர்த்தருளி
வழிந்து நறுந்தே னுகுவனபோன்
மதுரங் கனிந்து கடைதுடிக்க
வடித்துத் தெளிந்த செந்தமிழ்த்
தேவாரப் பாடல் சிவன்கேட்க
மொழிந்து சிவந்த கனிவாய்ச்
சண் முகனே முத்தந்தருகவே
முத்துக்குமார திருமலையின்
முருகா முத்தந் தருகவே."

(திருமலை முருகன் பிள்ளைத் தமிழ்)

ஓம்
செட்டிக்குமரன் துணை.

# ஸ்ரீ கந்தப் பெருமானார் கோயில் என்னும் ஸ்ரீ முத்துக்குமார சுவாமியார்

# ஆ ல ய வை ப வ ம்.

## விஷய அட்டவணை:

ஓம்

# சென்னை மா நகரம்.

## (சில புராதனக் குறிப்புகள்.)



நாம் வசித்து வரும் சேன்னப் பட்டணம் கி. பி 1639. க்கு முன், ஒருசிறு குக்கிராமமாக இருந்த தென்றும், பின்னர் ஆங்கில வர்த்தகர்கள் சந்திரகிரி ராஜாவிட மிருந்து, அதை வாங்கிக் கொண்டன ரென்றும், பள்ளிக்கூடத்து இந்து தேச சரித்திரப் புத்தகங்கள் கூறுகின்றன.

இதைப்பற்றி, சென்னை நகரசபை அங்கத்தினரும், வழக் கறிஞருமாகிய, உயர் திருவாளர், T. P. மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை M. A; B. L. அவர்கள் சொல்லும் குறிப்பாவது:—

☞ விஜய நகரத்தரசர்கள் வழியே வந்த சந்திரகிரி ராஜா என்னும் வெங்கடபதி ராஜுலு அவர்கள் அரசாக்ஷி செய் யுங்காலத்து, அவரது ஆளுகையில் சிற்றரசராயிருந்த தமரலா-வேங்கடபதி நாய்க்கர் என்பார், வடக்கே பழவேற்காட்டி லிருந்து தெற்கே திருமயிலாப்பூர் வரையுமிருந்த கடற்கரை நிலத்தை எல்லாம், தன் அதிகாரத்துக்குட்படுத்திப் பார்த்து வந்தார். அவருடைய இளைய சகோதரர் ஐயப்ப நாய்க்கர் என்பார், பூவிருந்தவல்லியிருந்து தன் அதிகாரத்துக் குட் படுத்தி வைத்திருந்தார். இவர் தான், மதராஸ் என்று சொல் லப்படும் சென்னப்பட்டிணத்தில் இங்கிலீஷ் காரர்களைத் தங்குமாறுகேட்டுக் கொண்டவர். இந்த நாயகரது தகப்பனார் சென்னப்ப நாய்க்கராதலின், தன் தகப்பனார் பெயரையே இங்கிலீஷ்காரர் தங்கிய இடத்துக்கு அமைக்கும்படி கேட்டுக் கொண்டதின்பேரில், சேன்னப் பட்டணம் என்கிற பெயர் வழங்கி வருகிறது.

**☛ இங்கிலீஷ் காரர்கள் சென்னப் பட்டணத்தில் வந்து குடியேறிய தினம் 1640ஆு பிப்ரவரிமீ 20உ என்று சொல்லப் பட்டிருக்கிறது.**

**பேத்தி நாய்க்கன் பேட்டை:**—பெத்தி நாய்க்கன் என்பவர் பெரிய காவற்காரனு (தலையாரி) யிருந்ததனுலும், அவருக்கு வீடு-மனை-நிலம் முதலிய மான்யங்கள் அநேகம்

இந்த கிராமத்திலிருந்ததனுலும், அந்த பாகத்துக்கு,தன் பெயரையே அதாவது பெத்தி நாய்க்கன் பேட்டை என்று வைக்கப்பட்டுள்ளது. இதற்கு முன் அந்த பாகத்துக்கு கோமரப்பேட்டை என்று வழங்கி வந்ததாம்.

**முத்தியாலு பேட்டை:**— முத்தியாலு நாய்க்கன் என்பவர் அந்த பாகத்துக்குத் தலையாரியாயிருந்து, அவர் பெயராலேயே முத்தியாலு பேட்டை என்று வழங்கி வந்திருக்கலாம்.

**நவ சக்தி (26-10-23)ல் ஒரு சரித்திரமாணவர் சென்னை மாநகரத்தைப்பற்றி எழுதிய குறிப்பு:—**

சென்னை மாநகரத்தைச் சுற்றியுள்ள ஊர்கள் மிகப் புராதனமானவை யென்று நினைக்க ஆதாரங்கள் பல கிடைத்திருக்கின்றன. இவற்றுள் முக்கியமானவை திருமயிலாப்பூர், திருவல்லிக்கேணி, திருவான்மியூர், பல்லாவரம் முதலியன.

இற்றைக்குச் சுமார் 2000 வருஷங்கட்கு முன், திருமயிலை என்கிற மயிலாப்பூர் பிரசித்தி அடைந்திருந்தது. கி. பி. முதல் நூற்றுண்டில் விளங்கியிருந்ததாகக் கருதப்படும் திருவள்ளுவ நாயனுர், மயிலாப்பூரில் வாழ்ந்திருந்தனர் என்பதைத் தமிழ் மாணவர் யாவரும் அறிவர். கி. பி. முதல் நூற்

ருண்டினிலேயே கிறிஸ்துவின் சிஷ்யர்களுள் ஒருவரான தாமஸ் என்னும் முநிவர், கிறிஸ்தவ மத பிரசார விஷயமாய், தென்னிந்தியா புகுந்து, இறுதியில் மயிலாப்பூரில் சமாதி அடைந்ததாகக் கிறிஸ்தவ கர்ணபரம்பரைக் கதைகள் கூறு கின்றன. இப்போது ஸான்தமி (ST. Thome) என்கிற கிறிஸ் தவ ஆலயம், இவர் விஜயத்தைக்குறிப்ப தென்று சிலர் கருது கிறார்கள்.

கி. பி. 2-ம் நூற்றுண்டில் விளங்கி யிருந்த வைஷ்ணவ ஆழ்வார்களுள் ஒருவரான பேயாழ்வார் என்பவர், மயூரபுரி என்கிற மயிலாப்பூரில் பிறந்ததாக வைஷ்ணவ குரு பரம்பரை யில் சொல்லப்பட்டிருக்கிறது.

அக்காலத்தில், மயிலாப்பூர் தொண்டை மண்டலத்தில் இருபத்து நான்கு கோட்டங்களுள் ஒன்றுன புழற் கோட் டத்தின் புழல் நாட்டின் பகுதியாயிருந்ததுபோலும்; பிற்கால த்துப் பல்லவர் காலமாகிய கி. பி. 8-ம் நூற்றுண்டுமுதல் இது பல்லவரின் இராஜதானிகளுள் ஒன்றுகக்கருதப்பட்டதென் பது நந்திக்கலம்பகம் முதலான நூல்களில், பல்லவ மன்னர் “மயிலை காவலன்” என்று அழைக்கப் படுவதால் விளங்கும். கி. பி. (8)ம் நூற்றுண்டில் விளங்கியிருந்த திருமங்கையாழ்வார் “நன்மயிலைத் திருவல்லிக்கேணி” என்று குறிப்பிடுவதால், அக்காலத்தில் திருவல்லிக்கேணியும் மயிலாப்பூரும் ஒன் றெனக் கருதப்பட்டிருத்தல் வேண்டும்.

“ திருவல்லிக்கேணி, முதலாழ்வார்களுள் பேயாழ்வாரா லும், திருமழிசை ஆழ்வாராலும் பாசுரம் பெற்றிருப்பதால், கி. பி. 2-ம் நூற்றுண்டிலேயே, இவ்வாலயம் பிரசித்தி பெற் றிருத்தல் வேண்டும். இங்குள்ள விஷ்ணு கோயிலை அமைத் தது ஒருபல்லவ மன்னன் என்பது “தென்னன் தொண்டை யர் கோன் செய்த நன் மயிலைத் திருவல்லிக்கேணி” என்பத

மற் போனதென்னலாம்; முத்தியாலுப்பேட்டை பெத்தநாய்க்கன் பேட்டை ஆகிய இரண்டு பேட்டைகளில் வசிக்கும் ஆயிரவர்களுக்குச் சொந்தமென்று சிலாசாஸனக்கல் பஹிரங்கமாக இருக்க, பெத்தநாய்க்கன் பேட்டையாருக்கே இவ்வாலயம் சொந்த மென்றார்கள் சிலர்; வேறு சிலர் ஆயிரவர்களென்று சொல்லப்படுவோர் எப்பேட்டையிலிருந்தாலும், அவர்களுக்குச்சொந்தம் மென்றார்கள்; இவ்வாறு கக்ஷிகள் இரண்டாகி, குரோதமும் மாற்சரியமும் அதிகரித்தன; கோட்சொல்லும் குண்டுணிகள் இடையில் கலகத்தை விருத்திசெய்தார்கள்; உபய வாதிகளுக்கும் மனஸ்தாபம் வளர்ந்தது. நான்கு கை வீரர்களுக்கு (வக்கீல்கள்) உபய வாதிகளும் பாதகாணிக்கை செலுத்தினார்கள். கடைசியாக 1907-ம் வருஷத்தில் சென்னை உயர்தர நீதிமன்றத்தில் (Madras High court) வியாச்சியம் ஒன்று தொடுத்தார்கள். இதனால் உபய வாதிகளுக்கு எவ்வளவு கஷ்டம்? எவ்வளவு நஷ்டம்? எவ்வளவு அலைச்சல்? எவ்வளவு மனஸ்தாபம்? எவ்வளவு பணச்செலவு? மொத்தை சோற்றுக்கு மேளம் கொட்டும் நயவஞ்சகப்புலிகள் இதுதான் சமயமென, இருகக்ஷிகளிலும் அகப்பட்டதைக் கொள்ளை யடித்ததைச் சொல்லாமலிருக்க முடியவில்லை. முடிவில், நீதிமன்றத்ததிபதிகள் உபயகக்ஷிகளின் வாக்கு மூலங்களையும் சாக்ஷிகளையும், அனுபவமான ரிகார்டுகளையும் பரிசீலனைசெய்து வந்தார்கள். இடையில் கோயில்காரியம் குறைவின்றி நடைபெறும் பொருட்டு, உயர் திருவாளர், V. மாசிலாமணிப் பிள்ளை B.A., B.L., (ஐகோர்ட் வக்கீல்,) அவர்களை தற்காலீக (Special) மாக நியமனம்செய்து, பின்னர் உயர்திருவாளர், மைப்பேடு. தங்கவேலு செட்டியார் B.A., B.L. ஐகோர்ட் வக்கீல் அவர்களை நிரந்தரமாக இன்டெரீம் (Interim) ரிஸீவராக நியமித்தார்கள்.

# சென்னை ஹைகோர்ட்டு.

## O. S. No, 117 of 1907

## ஸ்ரீ கந்தப்பெருமானுர் கோயில் என்னும் ஸ்ரீ முத்துக்குமார சுவாமி ஆலய ஸ்கீம் 1921-வருஷத்தின் திருத்திய டிக்ரீயின்

# சாராம்சம்.

“சென்னை மூத்தியாலுபேட்டை பெத்திநாய்க்கன்பேட்டை இவ்விரு பேட்டைகளில் வசிக்கும் ஸ்ரீ அபிநவ ஸ்ரீ தர்ம சிவாசாரிய ஸ்வாமிகளின் சிஷ்யகோடிகளாகிய பேரிசெட்டி வைசியமக்கள் ஐவர்கள், இந்த ஆலயத்துக்குத் தர்ம கர்த்தாக்களாக, அந்த வைசியகுல செட்டிமார்களது எலெக்ஷன் பேரில் நியமிக்கவேண்டும். இந்த தர்மகர்த்தாக்கள் இன்ஸால்வெண்ட்டில்லாதவர்களாகவும், எவ்வித கிரிமினல் குற்றங்களைச் செய்து சிக்ஷை அடையாதவர்களாகவும், பொதுஜன க்ஷேமத்தை நாடுகிறவர்களாகவும், தேவாலய கயிங்கரியத்தில் ஊக்கமுள்ளவர்களாகவும் இருத்தல் வேண்டும். இந்த ஐந்து தர்மகர்த்தாக்கள் ஒவ்வொருவரும் ஐந்துவருஷம் வேலைபார்க்க வேண்டும். ஐந்து வருஷத்துக்குமேல், மறு எலெக்ஷனில் நின்று வெற்றிபெற்றால், மீண்டும் ஐந்து வருஷம் வேலைபார்க்கலாம்.

இந்த ஐந்துபேரில் இந்தகேஸின் 1-வது பிரதிவாதியாகிய மணலி முருகப்பசெட்டியார், தன் ஆயுள் பரியந்தம் தர்மகர்த்தாவாக இருக்கலாம். இவர் உயிரோடுள்ளவரையும் இவரே சீனியர் தர்மகர்த்தாவாகவும் இருப்பார்.

பாலன் சபைகளைக் குறிப்பதிலிருந்து, இச்சபைகள் திருவொற்றியூர் நகரசபையின் ஆதிக்கத்திலிருந்து வந்தனவென்று ஊகிக்கலாம். மணலி என்கிற ஊர் சிங்க விஷ்ணு சதுர் வேதி மங்கலம் என்று சில சோழ சாஸனங்களில் குறிப்பிடப் பட்டிருப்பதால், சிங்க விஷ்ணு என்கிற (6)ம் நூற்றுண்டில் விளங்கியிருந்த பல்லவ மன்னனுல் அமைக்கப் பட்டதென்று கருதப்படலாம்.

இனி, பல்லாவரம் என்பதும் ஒரு புராதன நகரமாயிருந்திருத்தல் கூடும் என்று, சிலா சாஸன ஆராய்ச்சிக்காரர் கருதுவார்கள். இங்கே கி. பி. 7-ம் நூற்றுண்டில் விளங்கியிருந்த மஹேந்திர வர்மன் என்கிற பல்லவ மன்னன் அமைத்த கல்லில் தோண்டிய குகை ஆலயம் கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. இதன் சுவர்களில் மஹேந்திர விக்ரம வர்மனின் பிருதுக்கள் வெட்டப்பட்டிருக்கின்றன. இது பல்லவபுரம் என்கிற புராதன பல்லவநகர் என்று சிலர் கருதுகின்றனர். ஆனுல், இங்கே கல்லில் குடைந்த குகைக் கோயிலைத் தவிர புராதன கட்டிடப் பகுதிகள் கிடைத்தில. எனவே, இதைப் பல்லவ நகரமென நிச்சயமாகக் கருதக்கூடவில்லை.

மேற்கூறியவற்றுல் சென்னை மாநகரைச்சுற்றியுள்ள பிரதேசங்கள் மிகவும் புராதனமானவை யென்று நன்கு விளங்கும்.



(மூத்திபெற அறியா திருக்கின்றே னேனல்) ६.

“புத்தியை வாங்கிநின் பாதாம் புயத்திற் புகட்டியன்பாய்
முத்தியை வாங்க வறிகின்றிலேன்; முதுசூர் நடுங்கச்
சத்தியை வாங்கத் தரமோ? குவடுத விடுபடக்
குத்திய காங்கேயனே! வினையேற் கென்குறித்தனையே”

(கந்தர் அலங்காரம்)

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

(இலக்கண, இலக்கிய, தருக்க, வேதாந்த போதாகாசிரியரும், சென்னை ஹிந்து தியலாஜிகல் உயர்தரகலாசாலைத்தலைமைத் தமிழ்ப்புலவருமான ஆசிரியர், கோ. வடிவேலுசெட்டியார் அவர்கள் எழுதியது.)

சென்னை - முத்தியாலுபேட்டை-தம்புசெட்டி வீதியின்கண், இற்றைக்கு முப்பத்தொரு வருஷத்திற்குமுன், தத்துவவித்தாயும், வேதாந்த சாஸ்திரார்த்த சம்பந்நராயும், அன்பர்கட்குக் கைம்மாறு கருதாது கருணைசெய்பவராயும் எழுந்தருளியிருந்த மகான் சாது சை. இரத்தினசெட்டியார் அவர்களது ஸ்ரீமந்த புத்திரராகிய ஸ்ரீமத் சை - ர - நமசிவாய (ராஜயோகி) செட்டியாரவர்கள் இயற்றிய, சென்னைக் கந்தப் பெருமானூர் கோயில் என்னும் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமியார் ஆலயவைபவம் என்னும் புத்தகம் ஒன்று, அவர் வாயிலாக எனக்குக் கிடைத்தது. இப்புத்தகத்தை முற்றும் படித்துப்பார்த்தேன். இப்புத்தகத்தின் கண் அரிய பெரிய நீதிகளும், வேதாந்த தத்துவ ஆராய்ச்சிகளும், மிக விளக்கமாக மேற்கோள்களுடன் எழுதப்பட்டிருக்கின்றன; சென்னை-பெத்துநாய்க்கன்பேட்டை இராசப்பசெட்டி வீதியின்கண் உள்ள கந்தகோட்டத்தின் உற்பத்தியும் வளர்ச்சியும்தெளிவாக எழுதப்பட்டிருக்கின்றன. இக்கந்த கோட்டத்தின் ஆதி ஸ்தாபகராகிய வேளூர் - மாரி

செட்டியரவர்களுடைய அன்பின் பெருக்கும், அவரது பத்தினியாகிய ஆதிலக்ஷ்மி அம்மையாருடைய தானச் சிறப்பும், ஷெ செட்டியாரவர்கட்குப் பெருந்துணைவராயிருந்த பஞ்சானம் கந்தப்பாச்சாரி அவர்களது பக்தி மாட்சிமையும், அளவிறந்தன என்பது இப்புத்தகத்தினுல் நன்கு விளங்குகின்றன. வைசியர்களது வரலாறு, தசாங்கம், அவர்கள் தம் குலதெய்வமாகிய கந்தவேளிடத்துக் கொண்டுள்ள பக்தி, அவர்களது கைம்மாறு கருதாத உதவி முதலியன இப்புத்தகத்தைப் படிப்போர்க்கு மிகத் தெளிவாக விளங்குவனவாம். ஆயிரவருள் ஒருவராகிய ஸ்ரீமத் - செட்டியாரவர்கள், ஆயிரவருள் ஒருவராய்ச் செட்டிக் குமரனென்னும் சிறப்புப்பெயர் வகித்து விளகும் கந்தவேளிடத்துக் கொண்டுள்ள அன்பின் காரணமாக அக்கந்தவேளினது ஆலய வைபவத்தைப் பன்னுல் ஆராய்ச்சி செய்து, மிகத் தெளிவாக எழுதிய இப்புத்தகத்தை ஆயிரவருள் ஒருவனுகிய நான் மிக்க ஆர்வமுடனேற்று அங்கீகாரம் செய்கின்றேன். ஷெ கந்தகோட்டம் திருவருட் பிரகாசவள்ளலார் என வழங்கப்படும் வடலூர்-சிதம்பரம்-ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள் அருள்வாக்கினைப் பெற்ற பிறகே, மிகச்சீரும் சிறப்பும்பெற்று ஓங்கிவருகின்ற தென்பது இங்கு மிகவும் கவனித்தற் பாலதாம்.

வேதாந்த சங்கம்,
சிந்தாதிரிப்பேட்டை,
சென்னை.
1-11-31.

இங்ஙனம்,
கோ. வடிவேலு செட்டியார்.

ஓம்
சர்வம் சக்தி மயம்.

# சமர்ப்பணம்.

உலகமுதற்பொருளாய், உம்பர்க்குணர்வரிதாம் பொருளாய், வேதாகமத்தினுச்சியினுட் பொருளாய், பலகலையும் தெரிந்துணர்ந்தோர் பரவிய வான் பொருளாய், நித்ய - நிர்க்குண-நிட்கள - நிராமய-துரிய - துரியாதீத-பர - பரதத்வ-பரப்பிர்ம்மமாய், விளங்கும், சர்வ சாக்ஷியினிடத்து அபின்னமாகத் தோன்றி, உலகத்தை ஆட்டுவிக்கும் சத்து சித்து ஆனந்த சுயஞ்சோதி சொரூபிணியாய், ஆதிசக்தி, மஹாசக்தி, சிற்சக்தியெனப் பல பெயர் புனைந்து, நவரத்ந கசித பொன் ஊஞ்சலில், ப்ரம்ம விஷ்ணு ருத்திர மஹேஸ்வரர்களை ஊஞ்சற் கால்களாகவும், சதாசிவத்தைப் படுக்கையாகவும் அமைத்து, அதிலமர்ந்து,சர்வாத்மாக்களையும் அடிமையாக்கி, ஞான யோகிகளின் உள்ளத்தில் மாசற்று விளங்கி, அடியேனது உபாசன மூர்த்தியாயும் ஆத்ம தேவதையும் பிரகாசிக்கும்

ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி அம்பாளது
திருவடிப் பொற்றாமரைகளில்
பக்தி விநயத்துடன்
இந்நூலைச் சமர்ப்பிக்கின்றேன்.

அடியார்க்கடிமை,
நமசிவாயன்.
(இந்நூலாசிரியன்)

ஓம்

ஸ்ரீ கந்தப் பெருமானுர் கோயில் என்னும்

## ஸ்ரீ முத்துக்குமார ஸ்வாமி தேவஸ்தானம்

O. S. NO: 117 of 1907. ஸ்கீம் சூட்டின்படி

1910 ஞூ முதல் 1931 வரையில்

வக்குவ மகரிஷியின் பரம்பரையினரும் ஸ்ரீ அபிநவதர்ம சிவாசாரிய சுவாமிகளின் சிஷ்ய கோடிகளும், வணிக வைசிய குல பேரிசெட்டிமார் ஆயிரவர்களுமாகிய, சென்னை முத்தியாலுப் பேட்டை, பெத்து நாய்க்கன் பேட்டையிலுள்ளவர்கள்

### தர்மகர்த்தர்கள்.

(புளியம் பாக்கம்-பாபாளம்மாள்-உண்ணுமுலை அம்மாள் தர்ம பண்டின் டிரஸ்டிகளும்)

| | | | சீனியர் ஸ்தானம் |
|---|---|---|---|
| 1 | திருவாளர் | மணலி-முருகப்ப செட்டியார் | 1 |
| 2 | ,, | தி. தி. ஏகப்ப செட்டியார் | 2 |
| 3 | ,, | தி. தி. ஏகப்ப செட்டியார் | |
| 4 | ,, | அ. வி. முனிசாமி செட்டியார் | 2 |
| 5 | ,, | அ. வி. முனிசாமி செட்டியார் | |
| 6 | ,, | சை. சிவசங்கர செட்டியார் B. A. B. L. அட்வோகேட் (ரிப்பன் பிரஸ்-ரிப்பன் புத்தகசாலை) | |
| 7 | ,, | மோ. து. வேலு செட்டியார் | |
| 8 | ,, | அ. இராகவ செட்டியார் | 1 |
| 9 | ,, | ப. சுப்பராய செட்டியார் | |
| 10 | ,, | ப. இரத்தின சபாபதி செட்டியார் | |
| 11 | ,, | ந. ச. சதாசிவ செட்டியார் | |
| 12 | ,, | தோ. ச. இராஜு செட்டியார் | 2 |
| 13 | ,, | தோ. ச. இராஜு செட்டியார் | |
| 14 | ,, | பூ. அ. நாகப்ப செட்டியார் | 2 |
| 15 | ,, | பூ. அ. நாகப்ப செட்டியார் | |
| 16 | ,, | வே. சு. முருகேச செட்டியார் | |
| 17 | ,, | பொ. வெங்கடசுப்பையய செட்டியார் | |
| 18 | ,, | ப. நடராஜ செட்டியார் | |
| 19 | ,, | ப. இராகவ செட்டியார் | |
| 20 | ,, | அ. அண்ணுமலை செட்டியார் | 1 |
| 21 | ,, | வ. மாணிக்க செட்டியார் | |
| 22 | ,, | வெ. சுந்தர ராமானுஜலு செட்டியார் | |
| 23 | ,, | பரங்கிமலை. நடேச செட்டியார், B A. | |
| 24 | ,, | நேமம். செங்கல்வராய செட்டியார் | |

ஓம்

சரஹணபவாய நம:

# நூன்முகம்.



"மங்கலில் கங்கையு மப்பொறி தன்னை
வண்ணமுறுஞ் சரவணமிசை வைப்பப்
பொங்கெழிலை யிருதிக்கினு மான்முற் புங்
கவர்நின்று புரந்தனரப்போ
தங்கதி லாறு முகத்தொடு மீரா றத்தமொ
டுங் கம லத்தி னிடத்திற்
சங்கரனேமுரு கேச னெனச்சீர் தங்க
விருந்திட வண்டர்கள் கண்டார்"

(கந்தப் புராணச் சுருக்கம்.)

அகண்ட பரிபூரண, சச்சிதாநந்த, சுயம்பிரகாச, சாக்ஷாத்கார, சிதாகாச, சோரூப, சச்சிதானந்த சின்மய சோதி சொரூபமாகிய பரமசிவம், மனுஷ்யகோடிகள் கர்மம் பக்தி-ஞானம்-யோகமாதி மார்க்கங்களை அநுஷ்டித்து, தர்மார்த்த காம்ய மோக்ஷங்களை அடைந்து, பிறவிப் பிணியினின்றும் நீங்கி, கிருதார்த்தர்களாகும் பொருட்டு, வேதாகம புராணேதிகாசங்களை அநுக்கிரகித்தார். தவிர, ஜீவகோடிகள் பகவத்பக்தி செய்து முத்தியடைவான்வேண்டி, ஆயிரத்தெட்டு சிவக்ஷேத்திரங்களில் உத்பவமாய், காக்ஷிதந்து வருகின்றார். அவ்வாறே, கருணையங் கடவுளாகிய கலியுக வரதர் கந்தப்பெருமான், சென்னைவாசிகளாகியநம்மனோரை அநுக்கிரகிக்கும்பொருட்டு, தவராஜ சிங்கங்களாகிய வேளூர் மாரிசெட்டியார், பஞ்சானம்

கந்தப்பண்டார மென்று வழங்கும் கந்தப்பாசாரி ஆகிய இவர்களைத் துணையாகக்கொண்டு, திருப்போரூரினின்றும் சென்னையம்பதிக் கெழுந்தருளினர். அந்நாள் தொடங்கி சென்னப்ப நாய்க்கன் குப்பம், அஷ்டலக்ஷுமிகள் வாசஞ்செய்யும் சென்னை மாநகரமாகி, குபேர சம்பத்தை அடைந்திருக்கிறது.

இவ்வாலயம் சென்னைமாநகரம் இராசப்பசெட்டிவீதியில், ஸ்ரீவள்ளி தேவசேனபதி சமேதராய் அமர்ந்துள்ள காக்ஷி, சென்னையம்பதிக்கு ஓர் நடுநாயக இரத்தினமாய் விளங்குகின்றது என்னலாம். தவிர, ஆயிரவர்களென்றுசொல்லும் வக்குவ மஹரிஷியின் மரபிற்றோன்றிய வணிக வைசிய மக்களது பரிபாலனத்துக்குள்ளடங்கி, தினே தினே பூர்வபக்க சந்திரன் போல், அபிவிருத்தியடைந்து வருகிறது.

ஆதியில் இவ்வாலய விருத்தாந்தம், அவ்வாலயத்தில், பூஜை செய்து வந்த சோமாஸ் குருக்களது தகப்பனர், தமது மனைவி சுந்தராம்பிகைக்குச் சொன்னர். அருகிருந்து கவனித்து வந்த சபாபதி குருக்கள், அந்த விருத்தாந்தத்தை பத்து விருத்தங்களாக எழுதினர் அந்த விருத்தங்களின் வரலாற்றை, சபாபதி குருக்கள் பேரன் சோமாஸ்கந்த குருக்கள், தனது பாட்டனர் வேதகிரி குருக்கள் மூலமாகச் சங்கை யறக் கேட்டுத் தெளிந்து, தனது மாணக்கன் குமாரந்தை மஹரிஷி கோத்திரம், குளத்தூர் வரகவி-கோவில் கிருஷ்ணப்ப செட்டியாருக்குப் போதித்தார். அவர் கந்தப்பெருமான் அருளால் புராணமாகப் பாடினர். அவ்வேட்டுப் பிரதியை அவர் குமாரர் பாதிரி செட்டியார் ஆயச்சேரி முநிசாமி செட்டியாரிடம் கொடுத்தார். அது 1910 - ம் ௵த்தில் அச்சு விமானமேறி வெளிவந்தது. சாதாரண வருஷம், வைகாசி௴ 9௳ அதாவது இற்றைக்கு 22 - வருஷத்துக்குமுன், இவ்வாலயத்தில்

நடந்த மஹா கும்பாபிஷேக காலத்தில், சென்னை வணிக வைசிய ஆயிரவர்களுள் திருவாளர்கள்:—ஆ. பார்த்தசாரதிசெட்டியார், பு. சிங்காரவேலுசெட்டியார் இவ்விருவர்களும் கந்தர் மான்மியம் என ஓர் சிறு புத்தகம், வசன நடையாக எழுதி அச்சிட்டு விநியோகம் செய்தார்கள்.

## தேவஸ்தானத்தில் மூலஸ்தான கீழண்டைவாசற் படியின்மேலுள்ள சிலாஸாஸனம்.

சுவஸ்திஸ்ரீ விஜயார்ப்புத கலியுகாதிவூ 4774க்குச் சாலிவாஹன சகாப்தவூ 1595-க்குமேல் செல்லாநின்ற பிரமாதீசவூ மார்கழிமீ 13உ சுக்கிரவாரம்-உரோகணி நக்ஷத்திரம்-திரியோதசி திதியில், ஆயிரவர்களில் ஒருவராகிய வேளூர் மாரிசெட்டியாரும், பஞ்சானம் கந்தப்பண்டாரமும் இவர்களிருவரும், திருப்போரூருக்குக் கிருத்திகை தவறாமல் நடக்கும்போது, மேற்சொல்லிய மார்கழிமீ கிருத்திகையில் வரும்போது, செங்கண்மாலீசுரன் கோயிலுக்குத்தெற்கு கம்மாளன் சாவடிக்கு வடக்கு வள்ளியம்மை மஞ்ச ஓடைக்கு அருகாமையி லிருக்கப்பட்ட தடாகக் கரையில், இவர்களிரண்டுபேரும் நடந்து வந்த இளைப்பினால், ஷெ குளக்கரையில் நித்திரை பண்ணும்போது, சாக்ஷாத் சடாக்ஷரப்பொருளாகிய சிவ சுப்பிரமணியக்கடவுள், "நீங்களேன் வருத்தப்பட்டுக்கொண்டு வருகிறீர்கள். இதோ உங்களுக்கு அருகே யிருக்கிற புத்துக்குள் ளிருக்கிற என்னை எடுத்துக்கொண்டுபோய் நீங்கள் வாசஞ்செய்யும் சென்னப்பட்டிணத்தில் கொண்டுபோய்ப் பிரதிஷ்டைசெய்து பூஜை பண்ணுங்கள்," என்று முருகக்கடவுள் இந்த இரண்டுபேருக்கும் சொப்பனம் சாதித்தார். அந்தப்படியே புத்துக்குள்ளிருக்கிற சுவாமியை

ஏளப்பண்ணிக்கொண்டு வந்தவுடனே, உபாயமாய்ச் செங்கல்லினலே ஆலயம் ஏற்படுத்திப் பிரதிஷ்டை செய்தார். அப்போது நகரத்தார் ஆயிரவர்கள் வெகுஜனத்துக்கு மேற்சொல்லிய மாரிசெட்டியார், "நான் பிரதிஷ்டைசெய்துவைத்த சுப்பிரமணியக்கடவுளுக்கு எப்போதும் பூஜைமுதலாகியதும் நடத்திக்கொண்டு வரவேண்டியது," என்று உத்தரவு செய்தார்; அந்தப்படியே நடத்திக்கொண்டு வரும்போது, மேற்சொல்லிய செங்கல் திருப்பணிவேலே கிலமாயிருந்தது. அதை ஆயிரவாள் வெகுஜனமும் ஆலோசித்துக் கருங்கல்லினலே திருப்பணிவேலே செய்கிறதென்று நிச்சயித்தார்கள். அது கலியுகாதிஹு 4959க்குச்சாலிவாஹனசகாப்தஹு 1780க்கு மேல் செல்லாநின்ற காளயுக்திஹு மாசிமீ ீத்தில் கடைக்கால் ஆரம்பம். அதுமுதல் குரோதனஹு பங்குனிமீ 30உ வரைக்கும் கர்ப்பக்கிருஹம், அந்தராளம், மஹாமண்டபம் வரைக்கும் நூதனமாய்க் கடைக்கால் முதல் ஸ்தூபிவரையில் வேலே முடிந்தது. தர்மகர்த்தர், மளிகைக்கடை பதினெட்டு வகுப்புக்கடைக்காரர்.

### இதற்கு ஸ்தபதி மயிலாப்பூரிலிருக்கும் கு. குப்புலிங்காசாரி.

மேற்படி சிலாசாஸனப்படி இவ்வாலய மூர்த்தி ஆதியில் பிரதிஷ்டையானது, இற்றைக்குச்சுமார் 259-வருஷமாச்சுது; கருங்கல் கட்டடம் கட்டிமுடிந்தது 85-வருஷத்துக்கு முன்னென்றேற்படுகிறது. அதுமுதல் இந்நிமிஷம் வரையும் இவ்வாலயம் ஆயிரவர்களாகிய வக்குவ மஹரிஷி மரபினராய வணிக வைசிய புத்திரர்களால் சிறப்பாகப் பரிபாலிக்கப்பெற்று வளருகிறது.

இத்தலம் சமயகுரவர்களாகிய அப்பர் - சுந்தர் - சம்பந்தர்-மாணிக்கவாசகர்களால் பாடல் பெற்றதா யிராவிட்டாலும், இத்தலத்துக்கு வடக்கில் ஆறுமயில் தூரத்தில் திருவொற்றியூர் மஹாக்ஷேத்திரமும், தெற்கில் நான்கு மயில் தூரத்தில் திருமயிலை க்ஷேத்திரமும், சமய குரவர்களால் பாடல் பெற்றிருப்பதால், இதனடுவே யுள்ள க்ஷேத்திரங்கள் யாவும் மஹிமையுடையனவென்று பெரியோர் கூறுவர். தவிர, கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் இவற்றைக் கிரமமாக அநுஷ்டித்து, அருட்பெருஞ் சித்தராய் அமர்ந்த, திருவருட்பிரகாச வள்ளலார் என்னும் வடலூர்-சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள் திருவருட் பாசுரங்களுள், தெய்வமணிமாலை 31-பாசுர மஹிமையால், இத்தலம் அஷ்டலக்ஷ்மிகளது வாசஸ்தலமாய் விளங்குகின்றதென்று சொல்லுதல் பொருந்தும்.

திருப்போரூரில் எழுந்தருளியிருந்த கந்தப்பெருமான், வேளூர் - மாரிசெட்டியாரை அடிமையாகக்கொண்டு, சென்னை மாநகருக்கு எழுந்தருளியது, சென்னையம்பதியில் வாழும் ஜீவகோடிகளது பெருந்தவப்பயனேயாகும்; மேற்படி மாரிசெட்டியாரது கற்பிற்சிறந்த மனைவி ஆதிலக்ஷ்மியம்மாள், கந்தாலயம் அமைக்க, தான் அணிந்திருந்த ஆபரணங்களைக்கழற்றித் தன்புருஷனிடம் கொடுத்து கட்டடம் அமைக்கச் செய்தது, அம்மாது சிரோன்மணியின் பக்திவைராக்கியமும், கடவுளிடத்து அன்பும், தன் புருஷனிடத்துப் பக்தியும் காரணமென்று நினைக்கவேண்டும். முற்காலத்து நமது ஸ்திரீகள் கணவனையே தெய்வமாகக்கொண்டு விளங்கினார்களென்பதற்கு இது போந்த சாக்ஷியாகும்.

முற்காலத்தில், நம்மவருள் ஒவ்வொரு ஜாதியாரும், தத்தம் ஜாதிக்குள் கல்விகேள்விகளிற் சிறந்து, நடுநிலைமையைக் கவனிப்பார் ஒருவரை, எஜமானனாக (Head man) நியமித்துக் கொண்டு, தங்களுக்குள் நேரும் வம்பு வழக்குகள், குடும்பசச்சரவுகள் முதலியவற்றை, அவர் மூலமாகத் தீர்த்துக்கொண்டும், தத்தம் வீட்டுச் சுபாசுப காரியங்களில், அப்பெரியார் யோசனையைக்கேட்டு நடந்தும், கவுரவமாயும் க்ஷேமமாயும் வாழ்ந்து வந்தார்கள். அவ்வாறே, வக்குவமரபினர் ஆயிரகோத்திரர்களாகிய வணிக வைசிய மரபினர்களுக்குள் தருமமே உருவாயமைந்த வேளூர் மாரிசெட்டியாரும், அவர் இனஜன பந்துக்களும், தான் திருப்போரூரினின்றும் கொண்டுவந்த முருகப் பெருமானை, தாங்களே பிரதிஷ்டைசெய்ய யோக்கியதை பெற்றிருந்தும், முன்னோர்கள் அநுஷ்டித்து வந்ததற்கு மாறுதலின்றி, தம் ஜாதிக்குரிய எஜமானரிடம் விண்ணப்பித்தார். அவர் வெகுஜனக்கூட்டம் கூட்டுவித்து, கந்தராலய பரிபாலனத்தை ஆயிரவர்களிடம் ஒப்புவித்தார்: அதனாலே, வெகுஜன ஆதரவோடு, இவ்வாலயம் சூரிய சந்திரர் உள்ளவரையும் அழியாதிருக்கு மென்பதிற் றடையில்லை. இவ்வாலயம் வணிக வைசிய மக்கள் ஆயிரவர்களுக்கும் சொந்தமென்பதற்கும், அவ்வாயிரவர்களது எஜமானர் அதிகாரத்துக்குட்பட்டதென்பதற்கும் கர்ணபரம்பரையாகக் கேட்டகதையை இங்கு ஒருவாறு சுருக்கிக்கூறுவோம்:—இவ்வாலய பிர்ம்மோற்சவம் 11-ம் தினத்தில், கந்தப்பெருமான் முத்தியாலுப்பேட்டையில் ஆயிரவர்களாகிய வைசிய மரபினர்களுக்கு எஜமான ஸ்தானம் பெற்ற, உயர் திருவாளர் தம்பு செட்டியாருக்குச் சொந்தமான கச்சபேஸ்வரர் ஆலயத் திருக்குளத்தில் தெப்போற்சவம் நடந்து, நான்கு வீதி உலா வந்து, கோயில் போய்ச் சேருவது வழக்கம். அதற்குமாறாக, ஓர் வருஷத்தில் தெப்போற்

சவத்தை, கந்தராலய திருக்குளத்திலேயே நடத்துவதாக, உற்சவக்காரரும் தர்மகருத்தாவும் யோசித்து, அன்றையதினம் கந்தப்பெருமான் முத்தியாலுப்பேட்டைக்கு எழுந்தருளவில்லை. ஈதறிந்த எஜமானர், பெரிய கிராம கணக்கப்பிள்ளையைக் கொண்டு, கந்தஸ்வாமியைக் கோயிலை விட்டு எழுந்தருளச்செய்து, கச்சபேஸ்வரர் ஆலயத்துக்குத் தருவித்தார். இச்செய்தி அறிந்த தர்மகர்த்தரும் உற்சவக்காரரும் கூட்டமாய் பெரியதனக்காரர் வீட்டுக்கு வந்து, தாங்கள் செய்த பிசகை மன்னிக்கப் பிரார்த்தித்தார்கள். பெரியதனக்காரர், கூட்டத்தவர்களைப்பார்த்து, "பிரபுக்களே! காலமல்லாக் காலத்தில் நாம் இங்கு கூடியிருக்கிறோம்; காலதாமத மில்லாமல் விஷயத்தை இரண்டொரு வார்த்தைகளினால் முடித்துவிடுவோம்; நமது முன்னோர்கள், பின் சந்ததியாராகிய நமது நன்மைக்காகவே தீர்க்காலோசனையோடு ஒவ்வொரு காரியத்தையும் ஏற்பாடுசெய்து வைத்திருக்கிறார்கள். அதற்கு மாறாக, நாம் நடத்தல் தற்போது சுகமாய்த் தோன்றினாலும், பின்னர் கஷ்டத்தை விளைவிக்கு மென்பதை நாம் ஒவ்வொருவரும் மனத்தில் வைத்துக்கொள்ளல்வேண்டும்; இதுவே என்னுடையமுடிவு" என்றார்; அச்சபையிலுள்ளோர் அனைவரும் ஏகோபித்து "தங்கள் அபிப்பிராயப்படி நடக்கச் சித்தம்" என்றார்கள். உடனே, பெரியகிராம எஜமான்செட்டியார்உங்கள் அபிப்பிராயம் சாலவும் பெருந்தன்மை உடைத்து; நீங்கள் செய்துவிட்ட பிசகுக்குப் பரிஹாரம், தாங்கள் திரு உலா நடத்தும் விமானம் ரொம்ப கிலமாயிருக்கிறது; அதைப்புதுப்பித்து, கந்தபிரானை அதில்ஆரோகணித்து உங்கள் விழாவை நடாத்துவது பெருமை என்றார். எல்லோரும் பெரியதனச் செட்டியாரது வேண்டுகோளை அங்கீகரித்து, வழக்கம்போல்

கச்சபேஸ்வரர் ஆலயத் திருக்குளத்தில் தெப்போற்சவம் நடத்தினர்கள்.

அன்பர்களே! இந்த விஷயம் எனது 20-ம் வயதில் அதாவது 45-வருஷத்துக்குமுன், வயதிற் பெரியாரும் அறிவிற் சிறந்தாரும், சத்தியந் தவறுதவருமாகிய முதியார் ஒருவர் மூலமாகக்கேட்டேன்; $ இக்கால நாகரீகத்தவர்களுக்கு இது நம்பிக்கை யில்லாமலிருக்கலாம்; பொய்க்கதை என்னலாம்; எவ்வாருயினும்ஆகுக; இந்த விருத்தாந்தத்திஞல் நாம் அறிய வேண்டிய முக்கியவிஷயம் என்னெனில், இந்த கந்தப்பெருமாஞலயம், வக்குவமரபினர்களாகிய வணிக வைசிய ஆயிரவர்கள் எல்லோருக்கும் சொந்தமென்றும், அவ்வாயிரவர்கள் யாவரும் தங்களது எஜமானராயுள்ள ஒருவருக்குக் கட்டுப்பட்டு, அவர் சொற்படி நடந்து, ஒற்றுமையாய் வாழ்பவர்க ளென்றும் ஏற்படுகிறது.

இக்கந்தப்பெருமான் ஆலயம் **வடலூர்—ஸ்ரீஇராமலிங்க சுவாமிகள்** திருவாய் மலர்ந்தருளிய திருவருட்பாசுரங்களுள், **தெய்வமணிமாலை** என்னும் 31-திருப்பாசுரங்களால் அரிய பெரிய மஹிமைகள் அபிவிருத்தி அடைந்து வருகிறதாக,வெகு ஜன பக்தகோடிகளது அபிப்பிராயம். அப்படிக்கிருக்க,சுமார்

$ இக்கால நாகரீகத்தவர் என்று சொல்லப் படுபவர்கள். ஆழ்ந்த யோசனையும், கூரியபுத்தியு மில்லாமல், கண்டேதே காக்ஷி கொண்டதே கோலம் என்று கூறி, சாஸ்திரமேது? சமயமேது? ஜாதி என்ன? ஆசார அநுஷ்டானங்கள் எல்லாம் கட்டுக்கதை! நம்மை எல்லாம் ஏமாற்றிப் பொருள் பறிக்கப் பெரியோர்களெனச் சொல்லப் படுவோர், பெரிய மூட்டையான பொய்க்கூற்றுக்களை அமைத்து வைத்திருக்கிருர்கள். வேதம், ஆகமம், புராணம், இதிகாசம் என்று எழுதி வைத்திருப்பவை சுத்த பொய்க்கதையாகும். ஆத்தாள் மதப்பட்டாள் - அப்பன் எதிர்ப்பட்டான் - நான் வெளிப்பட்டேன் என்று விதண்டாவாதம் பேசிக்கழிக்கிறவர்கள்.

30-வருஷத்துக்கு முன்னர், ஆயிரவர்கட்குள் சிலர் ஈழநாட்டுக் கல்விமான் ஒருவராகிய கதிரைவேற் பிள்ளையைக்கொண்டு, திருக்கோயில் வசந்த மண்டபத்தில், (பங்காளா) கந்தப்புராண படனம் வைத்தார்கள். அப்புராணப் பிரசங்கியார் கந்தப் புராணபடன பிரசங்கத்தை விடுத்து, ஸ்ரீ இராமலிங்கசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திருஅருட்பாவை மருட்பாவென்றும், சுவாமிகள்மீது வசைபுராணம் பாடியும் வந்தார். அதைக் கேட்டுக் கொண்டிருந்த சில அறிவாளர்கள் மனம் வருந்தி, இந்த ஆலயத்துக்கு ஏதோ கலகமும் குழப்பமும் நேரிடப் போகின்றதென்று அஞ்சி, அங்கிருந்து நீங்கினுர்கள்.

அப்பக்திமான்கள் நினைப்புக்கேற்ப, 1900-ஞூ இவ்வால யத்தில் குழப்பம் உண்டாயிற்று. குழப்பத்திற்குக் காரணம்; வக்குவ மரபினர் வணிக வைசியகுல ஆயிரகோத்திரர் பதி னெட்டு வகுப்பிற்கு எஜமான (தலைவர்) ஸ்தானம் பெற்றிருந்த உயர்திருவாளர்கள் தம்பு செட்டியார், இலிங்க செட்டியார் பரம்பரையினர் மூலமாக ஏற்பட்ட வெகுஜனக்கூட்டத்தில் * வழக்கம்போல் ஏற்படுத்திய தர்மகர்த்தர்களை அங்கீகரியா

---

* வக்குவ மஹரிஷி பரம்பரையினராகிய வணிக வைசிய ஆயிரம் கோத்திரத்தவர்கள் பதினெட்டு வகுப்பினை யுடையவர்கள். இவர் களுக்குப் பெரியதனக்காரராய் விளங்கினவர்கள் தம்புசெட்டியார் என்றும் இலிங்க செட்டியார் என்றும் இருவர்; இவ்விருவர்களும் முத்தியாலுப்பேட்டையில் வசிப்பவர்கள். இவ்விருவர்களது பெருங் குணத்தையும் அந்தஸ்தையும் மதித்து, தம்புசெட்டி வீதியென்றும், இலிங்கி செட்டி வீதி என்றும் நாளைக்கும் வழங்கி வருகிறது. தம்பு செட்டியாருக்கு தசாங்க விருதுகளு முண்டு; அரண்மணைக்காரத் தெருவில் கச்ச பேஸ்வரர் ஆலயமும் அதனைச்சார்ந்த அக்கிராஹார மும் சொந்தம். கச்சபேஸ்வரர் அக்கிரஹாரம் பிராம்மணுளுக்குத் தானம் கொடுத்து, அவர்களைக் குடியேறச் செய்த இடம்; கிராம பெரியதனக்காரராகிய இவ்விருவரும் வெகு ஜனக்கூட்டம் கூட்டி கூட்டத்தினர் அபிப்பிராயத்திற்கிணங்க கந்தாலய தர்மகர்த்தாக் களை நியமிப்பது வழக்கம்.

ஞல் விளங்கும். இவ்வூர் கி. பி. 8-ம் நூற்றுண்டிலிருந்த தன்மையைப் பின்வரும் ஆழ்வார்களின் பாசுரம் உணர்த்தும்.

"ஒப்பவரில்லா மாதர் வாழும்
மாடமா மயிலைத் திருவல்லிக்கேணி"

"குரவமே கமழும் குளிர் பொழிலூடு
குயிலொடு மயில்கள் நின்றால
இரவியின் கதிர்கள் நுழைதல் செய்யறியாத்
திருவல்லிக்கேணி"

"தேனமர் சோலை மாமயிலைத்
திருவல்லிக்கேணி"

"மன்னுதன் பொழிலும் வாவியு மதிளும்
மாடமாளிகையும் மண்டபமும்
தென்னன் தொண்டையர் கோன் செய்த
நன்மயிலைத் திருவல்லிக் கேணி."

இவ்வூர்க் கோயில் கர்ப்பக் கிருகத்தில், சில வருஷங்களுக்கு முன், நந்திவர்ம பல்லவன் காலத்திய தமிழ் கல்வெட்டொன்று கண்டு பிடிக்கப்பட்டது. இக்கோயில் பன்முறை செப்பனிடப் பட்டிருப்பதால், புராதனக் கல்வெட்டுகள் பல அழிந்து போயின போலும். எனினும், சோழ பாண்டவ விஜய நகர மன்னரின் கல்வெட்டுகளின் பகுதிகள் பல, இக்கோயிலின் பிரகாரச் சுவர்களில் பல இடங்களில் காணலாம். இவற்றுள, முதலாவது குலோத்துங்கன் கல்வெட்டொன்று, புலியூர் நாட்டிலுள்ள "எழுமூரை"க்குறிக்கின்றது. இஃது இப்போது எழும்பூர் (Egmore) என மருவி வழங்கி வருகிறது. திருவாலங்காட்டில் கண்டுபிடிக்கப்பட்ட இராஜேந்திர சோழன் செப்பேடுகளில் நுங்கம் பாக்கம் குறிக்கப் பட்டிருக்கிறது. பாண்டியன் மாரவர்மன் குல சேகரன் காலத்திய கல்வெட் டொன்றில்,

எழுமூர் என்கிற எழும்பூரில் தேள்ளிய சிங்க நாயனுர் கோயில் இருந்ததாகக் குறிக்கப் பட்டிருக்கிறது; இஃது, இப்போது எங்கே யிருக்கிற தென்பது தெரிய வில்லை. திருவல்லிக்கேணியிலுள்ள இதர கல் வெட்டுகள் விஜய நகரத்து சாஸனப்பகுதிகள் புதுப்பாக்கம், வேப்பேரி, வியாசர் பாடி முதலிய இடங்களைக் குறிப்பிடுகின்றன.

நிற்க, சென்னைக்கு 6-மயிலுக் கப்பாலுள்ள திருவொற்றியூர் என்கிற புராதன சிவஸ்தலத்தைப் பற்றி, பல கல் வெட்டுகள் கிடைத்திருக்கின்றன. இவை, பெரும்பாலும் பிற்காலத்திய பல்லவர், சோழர், பாண்டியர் காலத்தைச் சேர்ந்தனவாய் இருக்கின்றன. எனினும், மஹேந்திர வர்மன் காலத்திய அப்பர் சுவாமிகள்:—

"மன மெனும் தோணி பற்றி
மதி யெனுங் கோலை யூன்றிச்
சின மெனுஞ் சரக்கை யேற்றிச்
செறி கடலோடும் போது
மத னெனும் பாறை தாக்கி
மறியும் போ தறிய வொண்ணு
துனை யுனு முணர்வை நல்கா
யொற்றியூ ருடைய கோவே."

என்று கூறியிருப்பதால், கி. பி. 7-ம் நூற்றுண்டிலேயே திருவொற்றியூர் ஒரு சிறந்த சிவ ஸ்தலமா யிருந்ததாக அறியப்படுகிறது. இங்குள்ள ஆதி புரீஸ்வரர் கோயில் எத்தனையோ முறை செப்பனிட்ட படியால், புராதனக் கல் வெட்டுகள் அழிந்திருக்கலாம். எனினும், 9-ம் நூற்றுண்டின் பிற் பகுதியில் விளங்கியிருந்த அபராஜித வர்மன் என்கிற பல்லவ மன்னனின் கல் வெட்டுகள் பல, இங்கே காணப்படுகின்றன. இவை, அடிக்கடி மணலி, அதம்பாக்கம் என்கிற இரண்டு நகர பரி

ஐந்து தர்ம தர்மகர்த்தாக்கள் பதவியேற்ற பிறகு, இடையில், இன்சால் வெண்டானாலும், கிரிமினல் குற்றவாளியானாலும் அவரை விலக்கி, வேறு தர்மகர்த்தாவை நியமிக்க வேண்டும்.

எலெக்ஷன் காலத்தில் சீனியர் தர்மகர்த்தாவும், பெரிய கிராமத்துப் பேரிசெட்டி குலத்துக்கு எஜமானர் இஷ்டமிருந்தால்; அவரும் இருந்து, எலெக்ஷன் நடத்த வேண்டும். சென்னை முநிஸிபல் சபையின் ஓட்டர் ஜாப்தாவில் பதிவுசெய்யப் பட்டவர்களே ஓட்டர்களாக இருத்தல் வேண்டும்.

இந்த ஐந்து தர்மகர்த்தாக்களும் கோயில் காரியங்களைச் சரிவர நடத்தி, கோயிலுக்குச் சொந்தமான ஸ்தாவர ஜங்கம சொத்துக்களைக் கணக்கு எடுத்து, வரவு செலவு கணக்கினைக் கவர்ன்மெண்ட் ஆடிட்டரைக் கொண்டு பரிசோதித்து, வருஷத்துக்கோர் முறை, தமிழில் அச்சிட்டு வெளிப்படுத்த வேண்டும்.''

''எல்லாம் நமது நன்மைக்கே'' என்று முதியோர் வாக்கின்படி, இந்த தீர்மானம் பக்தகோடிகளது மனதுக்குச் சந்தோஷத்தை உண்டு பண்ணிற்று என்றாலும், கோயிற் சொத்துக்களைக் கொண்டானடித்து, பழம் பெருச்சாளிகள் போல் தின்று ஏப்பமிட்டுக் கொண்டிருந்த கடவுள் துரோகிகளுக்குத் திண்டாட்டமாய் முடிந்தது என்று சொல்லாமலிருக்க முடியவில்லை. ஆனால், இந்த வியாஜ்யத்தில் தேவஸ்தான பணம் ரூ. 3,548—8—0 வீணாகச் செலவழிந்தது வருந்தத்தக்க விஷயமே யாகும்.

சென்னை ஹைகோர்ட்டார் தீர்மானித்தபடி, இவ்வாலய ரிஸீவர் வேலை பார்த்த மைப்பேடு தங்கவேலு செட்டி அவர்கள் காலமான படியால், **உயர் திருவாளர், V.** மாசிலாமணி

பிள்ளை B.A., B.L. ஐகோர்ட் வக்கீல் அவர்கள் 7-3-1910-ல் எலெக்ஷன் நடத்தி (1) மணலி. முருகப்பசெட்டியார் (ஏற்கனவே யிருந்த தர்மகர்த்தர்), (2) தீ. தீ. ஏகப்பசெட்டியார் (இரும்பு வியாபாரம்), (3) அ. வி. முநிசாமி செட்டியார் (இரும்பு வியாபாரம்), (4) சை. சிவசங்கர செட்டியார் B. A. B. L. அட்வோகேட், (ரிப்பன் பிரஸ் & ரிப்பன் புத்தகசாலை), ஆக இவர்களை தர்மகர்த்தாக்களாக நியமித்தார்கள். இவர்கள் கந்தப்பெருமான் ஆலய பரிபாலனத்தை ஒப்புக்கொண்ட தேதி-15-3-1910-யாகும்.

தர்மகர்த்தாக்கள் நாலவரும் கந்தப்பெருமான் ஆலய பரிபாலனத்தை ஒப்புக்கொண்ட வுடனே, சாதாரணஸு வைகாசிமீ 9உ கந்தப்பெருமானுக்கு மஹா கும்பாபிஷேகம் செய்ய வேண்டுமென்று பிரயத்தனம் செய்து, சென்னை கன தனவான்களிடம் சுமார் ரூ. 13,709-4-0 நன்கொடையாக வசூலித்து, ரூ. 11,660-7-8 செலவுசெய்து வேதாகம விதிப்படி ஆதி சைவர்களைக்கொண்டு மஹா கும்பாபிஷேக காரியத்தை, அதி சிறப்பாகவும் மிக விமரிசையாகவும் மந்திரலோப கிரியாலோப மின்றிச்செய்து முடித்தார்கள். அன்று பஞ்சமூர்த்திகள் அடியார்கள் புடைசூழ விசேஷ பெரிய வீதி உற்சவம் மிக விமரிசையாக நடந்தது. இந்த கும்பாபிஷேகத்தையும் உற்சவத்தையும் தரிசித்த மஹா ஜனங்கள் இதைப்போன்ற கும்பாபிஷேகம், தென்னாட்டில் எங்கும் நடக்கக் கண்டிலோமென்று ஆச்சரியமுற்றார்கள். இந்த * கும்பாபிஷேக வரு

* இக் கும்பாபிஷேகத்துக்கு 63-வருடங்கட்கு முன்னர்,அதாவது சுக்கிலஸு தை மாதத்தில் மஹா கும்பாபிஷேகம் ஒன்று நடைபெற்றது. அப்போது. சென்னை தெய்வக் கந்தர் பேரில் கும்பாபிஷேகச்சிந்து, தரு, திருவிழாச்சிந்து தோத்திரச் சிந்து, கீர்த்தனைகள்,பதங்கள்,தோத்திர விருத்தங்கள் அடங்கிய சிறுநூல், இரும்புகிடங்கு புளியம்பாக்கம உயர் திருவாளர்,ஆநந்தசெட்டியார் குமாரர் பொன்னுசாமி செட்டியார் கேட்டுக் கொண்டபடி, திருவல்லிக்கேணிக்கடுத்த சேப்பாக்கம் சின்னப்பாவு செட்டியாரால் இயற்றப்பட்டு, புரசை அஷ்டாவதானம் சபாபதி முதலியாரால் பார்வையிடப்பட்டு அச்சிட்டு வெளிவந்தது.

மானத்தில் மிச்சம் ரூ. **2,048-12-4**-ம் தேவஸ்தான கணக்கில், ஆதாய வரவு வைத்தார்கள். இது தான் சத்புத்திரர்களின் லக்ஷணமாகும்.

புதிய தர்மகர்த்தாக்கள் வந்தது முதல், தேவஸ்தான நித்திய நைமித்திகாதி பூஜைகள் கிரமமாய் நடைபெற்றன. தேவஸ்தானத்துக்குச்சொந்தமான ஸ்தாவர ஜங்கமசொத்துக்களையும், பிரார்த்தனைக்காரர்களால் செலுத்தப்பட்ட பொன் வெள்ளி உருப்படிகளையும், பரிசோதித்துக் கணக்கெடுத்தார்கள். தேவஸ்தானத்தார்வசமுள்ளவற்றையும் உற்சவக் காரர்கள்வசம் இருப்பவற்றையும், தனித்தனியாய் கணக்கிட்டார்கள்; கோயில்மானேஜ் மெண்டுக்குட்பட்ட தர்ம சொத்துக்களின் சிலா ஸாஸனங்களையும், தானம் செய்தவர்களுடைய சந்ததியார் மூலமாகப்பரிபாலிக்கப்பட்ட சிலாஸாஸனங்களையும்,* புளியம்பாக்கம்பாபாளம்மாள் உண்ணாமுலை அம்மாள் தர்ம பண்டைச்சேர்ந்து, ஷை தர்மபண்டின்டிரஸ்டிகளின் மானேஜ்மெண்டுக்குட்பட்ட தர்ம சொத்துக்களின் சிலா ஸாஸனங்களையும் பரிசோதித்தார்கள். தேவஸ்தானத்துக்காக; சில சொத்துக்களைத் தானம் செய்து, உயில் சாஸனங்கள் செய்தவற்றையும் வெளியிட்டார்கள். கோயில்வருமானங்களையும் செலவுகளையும் பரிசோதித்தார்கள்.

---

* சென்னையில் காலஞ்சென்ற ஆயிரவர்களுள் புளியம்பாக்கம் மானுதி மஹரிஷிகோத்திரம் உயர்திருவாளர் சுப்பிரமண்ய செட்டியார் பாரியாள் உண்ணுமலையம்மாள், தருமபரிபாலன சம்பந்தமாக, சிவில்சூட் நெம் 341. of 1890 (Hon Mr. Justice Wilkinson) ஜட்ஜ்மெண்ட்காப்பி உட்படகோயம்பேடு குறுங்காலீஸ்வரர் தேவஸ்தான இரண்டாவது தர்மகர்த்தர் திருவாளர், பொன்னேரி-முனியப்ப செட்டியார் அவர்கள் ஓர் புத்தகம் 1892ஷ ஜூலை5௳ சென்னை ஞானப்பிரகாசம் பிரஸில் அச்சிட்டிருக்கிறது.

உயர் திருவாளர், ஆயச்சேரி வையாபுரி செட்டியார் அவர்கள் சுவாமிக்குச் சமர்ப்பித்த 66, 000 ரூபாவிற்கு கவர்மெண்டு பத்திரம் தர்ம பண்டாகவைத்து அதன்வட்டி வரும்படியைக் கொண்டு தேவஸ்தான காரியங்கள் நடைபெறுகின்றதையும் குறிப்பிட்டார்கள்.இவற்றையெல்லாம் கவர்ன்மெண்ட் பரிசோதகர்களால் பரிசோதிக்கப்பட்டு,வருஷாந்தர ரிபோர்ட்டாக அச்சிட்டு வெளியிட்டார்கள். இம்மட்டோ?கோயிலுக்குச் சொந்தமான தர்மவீடுகளையும் கடைகளையும் குடிக்கூலிக் காரர்களுக்குச் சவுகரியமாக ரிபேர்செய்து கொடுத்து, அதிக வருமானத்தை உண்டாக்கினுர்கள். இதனுல் பின்வரும் தர்மகர்த்தர்களுக்கு வேலை சுலபமானதோடு, கோயில் காரியங்களை அவர்கள் மனச் சந்தோஷத்தோடு செய்வதற்கு இடமுண்டாச்சுது.

இதன் பிறகு எலக்ஷனில் 1931-வரை வரையில் தர்மகர்த்தர்களாக வந்தவர்கள், தேவஸ்தான காரியங்களை மிகவும் ஊக்கத்துடனும் ஆதாயத்துடனும் வணிகவைசிய ஆயிரவர்களின் மனம் திருப்தியாகும் வண்ணம் நடத்தி வந்தனர்-வருகின்றனர்;சுமார்12-வருஷகாலமாக மணியக்காரர் பிரம்மஸ்ரீ அ. சந்திரசேகரஐயர் அவர்கள் கோயில்கணக்குகளையும் மற்றைய காரியங்களையும் ஊக்கத்துடன் கவனித்து வருகின்றனர். அர்ச்சகர் பிரம்மஸ்ரீ முத்துக்குமார ஸ்வாமி குருக்கள், துரைசாமி குருக்கள் வகையராக்கள், காலா காலங்களில் சுவாமிக்கு பூஜைகளை மந்த்ரலோப கிரியாலோப மின்றி நடத்திவருகின்றுர்கள்.

பக்தகோடிகள் அநேகர், இந்த ஆலய நித்திய நைமித்திகாதி பூஜைக்காக ஆயிரக்கணக்கான திரவியத்தைச் சேமநிதி

யாக வைத்திருக்கிருர்கள். அநேகர் குடிக்கூலி வரும்படியான வீடுகளையும் கடைகளையும் தானம்செய்து, சிலாஸாஸனம்செய் திருக்கிருர்கள். வேறுபலர் தீபக்கட்டளை யென்றும், அபிஷேகக்கட்டளை யென்றும், தேசாந்திரிப் பிரசாதக்கட்டளை யென்றும் ஏற்படுத்தி, நாளதுவரையும் குறைவில்லாமல் நடத்தி வருகிருர்கள். உற்சவக்காரர்கள் தாங்கள் செய்யும் வியாபார மூலமாகவரும் லாபத்தில் இவ்வாலயத்துக்கு ஓர்பாகம்தருமஉண்டியாகச்சேமித்து, உற்சவாதிகளைச் சிறப்பாக நடத்திவருகிருர்கள்.சென்னை-நயினப்ப நாய்க்கன் வீதி,1/31நெம்பருள்ள, (இந்த ஆலயத்தைச் சேர்ந்தாப்போல் தென்புறம்) வசந்தோற்சவம் நடக்கும் மண்டபம் பங்களா (Bungalow) ஒன்றிருக்கிறது. சுமார் 50-வருஷங்கட்கு முன்னர் அக்கம்மாள்பேட்டை கோவிந்தசெட்டியார்-நாராயணசெட்டியார் என்பவர்கள் அழகாகக்கட்டி விடுத்தார்கள். அதைச்சார்ந்த அநேக கடைகளிருக்கின்றன. அக்கடைகளில் வரும் குடிக்கூலி வருமானத்தைக்கொண்டு, உற்சவ கயிங்கரியங்கள் விசேஷமாய் நடைபெறுகின்றது. இதனைப் பரிபாலிப்பவர்கள் 18-கடை ஜவுளி வர்த்தகர்களாவர்.

தவிர-ஆலயத்துக்கு முன்புறம் திருவாளர், காளி - இரத்தினசெட்டியார் அவர்கள், ஐந்துநிலை கோபுரம் லக்ஷக்கணக்காண பணம் செலவுசெய்து, விசித்திர வேலைப்பாடுடன் செய் திருக்கிருர். நவரத்ன ஆபரணங்கள் பல சுவாமிக்கு அளித் திருக்கின்றனர்; அவர் பரம்பரையார் மேற்படி கோபுரத்துக்கு விளக்கேற்றும் தர்மத்தை நடத்தி வருகிருர். இதோடு தேவஸ்தானத்திற்குப் பல தர்மங்கள் அவர்களாற் நடைபெறுகின்றன.

திருவாளர், கும்மிடி பூண்டி—ஏழுமலைசெட்டியார் (இரும்புபெட்டி வியாபாரம்) அவர்கள், துவிஜ ஸ்தம்பத்துக்குமேல் கண்டாமணியும், அதற்குரிய சிறிய கோபுரமும் விசித்திர

வேலைப்பாடுடன் அமைத்திருக்கிறார். அதனோடு, ஆயிரக் கணக்கான பணம் செலவு செய்து, சுவாமிக்குப் பள்ளியறை அலங்கரிப்பு விசித்திர வேலைப் பாடுகளுடன் மிக அழகாகச் செய்திருக்கிறார்.

☞ மாஜி தர்மகர்த்தா. திருவாளர்—அ. அண்ணாமலை செட்டியார் அவர்கள், கந்தசாமி டயரியும், கந்தர் நாமாவளியும் Prayer to Siva Kumar God Sree Kandaswamy (இங்கிலீஷ்,) ஆகிய மூன்று புத்தகங்கள் அச்சிட்டு விநியோகித்தார்.

தவிர, பிரதி, தினங்களில் நூற்றுக்கணக்கான பக்த சிரோன்மணிகள் தரிசனார்த்தமாக வந்து, அவரவர் இஷ்ட காம்யார்த்தத்தை முருகனிடம் முறையிட்டு, அஷ்டோத்தர-சகஸ்ர நாமங்களால் அர்ச்சனைகள் செய்கின்றனர். கிருத்திகை தோறும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் சரவணப் பொய்கையில் ஸ்நானம் செய்து, கோயிலை வலம் வந்து, அங்கப் பிரதக்ஷிணம் செய்து, கந்தப் பெருமானுக்கு அஷ்டோத்தர-சகஸ்ர நாமாதி அர்ச்சனைகள் செய்தும் போகிறார்கள். பிரார்த்தனை உண்டியில் பொன் வெள்ளி உருப்படிகள் கிருத்திகை தோறும் ஏராளமாய்ச் சேருகின்றன. பாற்காவடிகளும் சர்க்கரை காவடிகளும் பிரார்த்தனைக்காரர்கள் செலுத்தித் தத்தம் காரியங்கள் சித்திபெற்றுச் சந்தோஷிக்கிறார்கள். சுருக்கமாகக் கூறுமிடத்து, இவ்வாலய மஹிமையை ஆயிரம்பண முடிதரித்த ஆதிசேஷனாலும் சொல்லமுடியா தென்றால், இச்சிறு புத்தகம் ஏற்றத இடந்தராதென விடுத்தனம்.

அற்புதச்செய்கை:— ஓர் காலத்தில் இரதோற்சவ தினத்தன்று, இரதம் பாதிவழியில் அச்சுமுறிந்து நின்றுவிட்டபோது; மனுஷ்ய யத்தனத்தால் பலவகை செய்தும், தேர் அசையவில்லை, யாம். பக்தகோடிகள் கந்தப் பெருமானைத்தியானித்த வளவில், இரதம் தாராளமாய் நிலைவந்து சேர்ந்ததாம். தவிர, பனைவெட்டு

வியாபாரம் செய்யும் இராசப்ப செட்டியார், தான்கொண்ட ஏராளமாக சரக்குகள் விலையாகாமலிருக்க வருந்தி, கந்தப்பெருமானைத்தொழுது, வருகிற லாபத்தில் ஓர்பாகம் கந்த ஸ்வாமிக்கே கொடுக்கிறேனென்று சொன்ன அளவில், தன்னிடமிருந்த பனைவெட்டுச் சரக்குகள் யாவும் நல்ல விலையாக விற்றுப் பணமாக்கப்பட்டது. ஷை இராசப்ப செட்டியார் கந்தனுக்குக் கொடுப்பதாகச் சொன்ன பாகத்தை மறந்தார். அந்த வருஷம் நடந்த துவிஜாரோகண தினத்தன்று, அந்த இராசப்ப செட்டியார், தரிசனத்துக்குத் தெய்வீகமாய் வந்தார். அங்கு ஒருவர்மீது ஆவேசம்தோன்றி, இராசப்ப செட்டியாரைப்பிடித்து, என் பாகம் எங்கே? கொண்டுவா? என்னலும், அங்கு கூடியிருந்த ஜனங்கள், விஷயத்தின் உண்மை அறியாது ஆச்சரியமுற்று மயங்கி நிற்க, இராசப்ப செட்டியார் வாக்குதத்தம் செய்த விஷயத்தை ஒளியாமல் சொல்லி, அந்த லாபத்துக்கீடாக, பொன்உத்தர சஞ்சம் ஒன்று ஸ்வாமிக்குக் கொடுத்ததாகப் பிரஸ்தாபம். அவ்வாறே, இன்றைக்கும் யாதாமொருவர் அவ்வாலயத்துக்காகப் பிரார்த்தனை செய்துகொண்டு செலுத்தத் தவறினலும், இவ்வாலயத்துக்கேற்பட்டுள்ள சொத்துக்களைத் துர் எண்ணத்தோடு விநியோகம் செய்தாலும், அவர்கள் அநேகா கதிக்காளாகிறுர்கள் என்பது பிரத்தியக்ஷ அநுபவம்.

சுமார் 3-4-வருஷ காலமாக ஐப்பசி மாதம் வரும் கந்த சஷ்டி மஹோற்சவகாலம் ஏழுநாளில் பக்தஜனங்கள் பலர் கூடி, கந்தப்பெருமானுக்கு இலக்ஷார்ச்சனை செய்து, பலவித பக்ஷ்ய பலாதிகளோடும் சித்திரான்னத்தோடு நைவேத்தியாதிகளும் பிராம்மணசந்தர்ப்பணையும்செய்துவருகிறுர்கள். இதற்காகசுமார் 1500 ரூபாய் வரையும் வசூலித்துச் செலவழிக்கிறுர்கள். தவிர, ஆயிரவர்களாகிய வைசியர்கள் வீட்டில் நடக்கும் சுபாசுப காலத்தில் கந்தப்பெருமானுக்கு நன்கொடை அளிக்கிறுர்

கள். இது பக்த ஜனங்கள் கந்தப் பெருமானிடத்துக்கொண்ட பக்திவைராக்கியம் சாலப் புகழத் தக்கதாகும்.

சுமார் இருநூற்று அறுபது ஆண்டுகளுக்கு முன்னர் சென்னைவாசிகளுக்கு அருள்புரியத் திருவுளங்கொண்டு, திருப் போரூரினின்றும் வலிய வந்தெழுந்தருளி யிராநின்ற இந்தக் கந்தப்பெருமான், சர்வான்மக்களுக்கும் வேண்டிய வேண் டிய வண்ணம் அருண்முகத்தோடு, சுத்த ஷாட்குண்யங்கள் ஆறினையும் ஆறு திருமுகங்களாகக்கொண்டு, இச்சாசத்தி கிரியாசத்தி ஞானசத்தி ஆகிய முச்சத்திகள் மூன்று பத்திரங்க ளாக அமைந்த வேலாயுதந் தாங்கி, சிற்சத்தி பராசத்தியரே வள்ளி தெய்வயானையாக விளங்க, மயூரவாகனத்தின்மீதிவர்ந் துள்ள ஸ்ரீ ஷண்முகக் கடவுளை மனமொழி மெய்களால் சதா வழிபட்டு, அவருக்குச் சதா திருப்பணிகள் புரிந்து, அவ ரது விழாக்களைக் கண்குளிரத்தரிசித்து, பிரணவப்பொருளா கிய அப்பரமாத்ம மூர்த்தியின் திருவருட் பிரசாதத்துக்கு யாம் எல்லவரும் பாத்திரராதற்பொருட்டு, இச்சிறு புத்தகம், அவரது அருட்கிருபா நோக்கத்தை ஆதாரவாக்கொண்டு எழு தும்படி நேரிட்டது. இஃதுடன் 1897ஸு உயர்திரு, நாகலா புரம் தங்கவேலுசெட்டியார் அச்சிட்ட முத்துக்குமரக் கடவுள் ஸ்தோத்திரமும், 1904ஸு ஸ்தாபிக்கப்பெற்ற சைவசமய பக்தஜன சபையின் வரலாறும், வடலூர் சிதம்பரம் ஸ்ரீ இராம லிங்கசுவாமிகள் அருள்வாக்கினல் பாடிய தெய்வமணிமாலை 31-செய்யுளும், 1910ஸு முதல் 1931ஸு அக்டோபர்மாதம் 25உ வரையில் எலக்ஷனில்வந்த தர்மக்கர்த்தாக்களின் பெயர் களும், சென்னைமா நகரத்தின் புராதனக்குறிப்பும், பஞ்சபருவ உற்சவம், சஷ்டி உற்சவம், நூதனமாக கோடைகால மெத்தை

உற்சவம், ஆடிப்பூர உற்சவம், சஷ்டி லக்ஷார்ச்சனை, பிரம்ம உற்சவம்,வசந்த உற்சவங்களின் விபரமும் சேர்க்கப்பட்டிருக்கிறது. இப்புத்தகம் வெளிவருவதற்குக் காரண பூதராயிருந்த அடியேனது ஜ்யேஷ்ட புத்திரனும், ஸ்ரீசாது இரத்தின சற்குரு புத்தகசாலையின் உரிமையாளருமான ஸை. ந. பாலசுந்தரத்திற்கும், சிரமம் கருதாமல் மிக அழகாக அச்சிட்டுதவிய ஸ்ரீ ஆதிமூலம் பிரஸ் உரிமையாளர் திருவாளர் பே. ஆதிமூல முதலியார் அவர்களுக்கும், முருகன் திருவருள் பெருக உண்டாக, மனமுவந்து பிரார்த்திக்கிறேன். தவிர, இப்புத்தகத்தைக் கண்ணுற்றுதவிய திருவாளர்கள் ஆசிரியர்—கோ. வடிவேலுசெட்டியார், சதாவதானம்-தெ-கிருஷ்ணசாமிப் பாவலர் பிரஹ்மஸ்ரீ, சௌந்தரராஜ ஐயங்கார், சுவாமிகள் பரலி. சு. நெல்லையப்ப பிள்ளை அவர்களுக்கும், சென்னை நகர சபை அங்கத்தினர், வழக்கறிஞர் T. P. மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை, M. A. B. L. அவர்களுக்கும், என் மனமார்ந்த நன்றி செலுத்தக் கடமைப்பட்டவன். அடியேன் கல்வி கேள்விகளிற் சிறியன்; இப் புத்தகம் வெளியாக வேண்டுமென்னும் அவாவிற் பெரியன்; ஆதலால், கல்விமான்கள் கண்ணுக்குத் தோன்றும் சொற்குற்றம் பொருட்குற்றம் யாவற்றையும் க்ஷமித்து, குணம்கொண்டு, அடியேனை இரக்ஷிக்கப் பிரார்த்திக்கின்றனன்.

☞ சிவசுப்பிரமணியக்கடவுள் உலகில் வசிக்கும் எல்லா மக்களுக்கும் பொது; ஸ்ரீகந்தப்பெருமான் ஆலயமும் எல்லோரும் தொழும்படியான க்ஷேத்திரமே தவிர, வக்குவ மஹரிஷி பரம்பரையினராய வணிக வைசிய ஆயிரவர்களுக்கு மாத்திரமல்ல. ஆனால், அதன் பரிபாலனம் மாத்திரம் ஷை வைசிய மரபினர்களுக்கே யுரிய தென்பது சித்தாந்தம்.

"துய்யதா மறைகளாலுந் துதித்திட வரியதான
செய்ய வேளடிகள் வாழ்க சேவலும் மயிலும் வாழ்க
வெய்யசூர் மார்பு கீண்ட வேற் படை வாழ்க வன்னுன்
பொய்யில் சீரடி யார்வாழ்க வாழ்கவிப் புவன மெல்லாம்."

(கந்தப்புராணச் சுருக்கம்)

ஓம்-தத்-ஸத் இங்ஙனம்,

சை. ர. நமசிவாய (ராஜயோகி) செட்டியார்.*

ஆயுர்வேத பண்டிதர்,

---

* இவர் சென்னை மாநகரத்தில் வக்குவ மஹரிஷி பரம்பரையினராகிய வணிக வைசிய ஆயிரவர்களுள், சத்தியம்-சாந்தம்-சமத்துவம் பொருந்தி, மதராஸ் ரிப்பன் பிரஸை ஸ்தாபித்து நடாத்தி வந்தவரும், பிரபல ஜவுளி வியாபாரம், வேதாந்த சபை, இந்து டிராக்ட் சொஸைட்டி ஸ்தாபகருமான, மஹான் சாது சை. இரத்தின செட்டியார் அவர்களின் ஜ்யேஷ்ட புத்திரர்; ஸ்ரீ பஞ்சாக்ஷர சிவயோகிஸ்வாமிகளின் மாணாக்கர்; அம்மஹானால் இராஜயோகி என்னும் பட்டம் பெற்றவர்; ரெட்டிப் பரதேசியின் அத்யந்த நண்பர்; ஆரியன் டிராக்ட் புத்தகசாலை, சிவராஜயோகி ஔஷதாலயம், ஞானப்பிரகாசம் பிரஸ், இவற்றின் ஸ்தாபகர்; நடராஜ பாக்கெட் பஞ்சாங்கம் (Diary) சிவயோகி பஞ்சாங்கம், எட்வர்ட் பஞ்சாங்கம், ஆரியஜன பரிபாலினி, விவேகசுந்தரம், விவேகபோதினி, கல்விக்களஞ்சியம், உத்தமபோத ரஞ்சனி முதலிய பிரசுரங்களின் ஆசிரியர்; அரன்வாயல் - அஷ்டாவதானம் வேங்கட சுப்புபிள்ளையவர்களிடம் சித்தாந்த சாஸ்திரம் இலக்கிய இலக்கணங்கள் அப்யசித்தவர்; தர்க்கசாஸ்திர விசாரணைபுரிந்தவர்; சுமார் 35 வருஷ காலமாக திருக்கழுக்குன்ற நிவாஸியாகி, அவ்வூர் க்ஷேத்திர புராணங்களை ஆராய்ந்து, சங்கதீர்த்த புஷ்கரம் அதாவது சங்க தீர்த்தமேளா என்னும் புத்தகம் ஒன்று எழுதி வெளியாக்கி, அந்த வைபவத்தை அக்கழுக்குன்றத்தில் 1921-ஆண்டில் நடத்தும்படியாக முயற்சி செய்தவர்; திருக்கழுக்குன்ற ஸ்தலபுராணம் சிவராஜயோகம் வசனம், பகவத்கீதை வசனம் ஹம்ஸயோகி வியாக்யானம், மொழிபெயர்ப்பாசிரியர்; திருவொற்றியூர் ஸ்தலபுராணம் (வசனம்) ஆசிரியர்; ஆயுர்வேத ஆசான் என்னும் புதிய வைத்ய நூலை எல்லா ஜனங்களும் எளிதிலுணரும்படி வெளியாக்கியவர்.

ஓம்

# வித்வத் சிரோன் மணிகள்

# அபிப்பிராயங்கள்.

[ஸ்ரீ கந்தப் புராணம்—ஸ்ரீ இராமாயணம்—பாகவதம் முதலிய பெருங்காவ்ய கதாப்பிரசங்க வித்வத் களஞ்சியமாகிய பெருக வாழ்ந்தான் தேவ கோட்டை உபய வேதாந்த மஹா வித்வான் பிரம்மஸ்ரீ

## ஸௌந்தர ராஜ அய்யங்கார் ஸ்வாமிகள்.

### மதிப்புரை.

பாவலர் போற்றும் இந்நாவலம் பெருந்தீவில், வானவர் உகக்கும் மானிடப் பிறப்பாய்ப் பிறந்தவர், செய்ய வேண்டிய தென்னென்று ஆராய்ந்து பார்க்குமிடத்து, அன்னார் இன்னுமொருமுறை அன்னை வயிற்றுட்புக்கு இன்னல் படாது, நன்னயமாகிய உன்னதப் பேராநந்தப் பதவி அடைவதற்கென்றே ஏற்படுகின்றது. அத்தகைய பதவியை அடைவான் வேண்டி, நம்முன்னோர்கள் வேதங்களின் அரும்பெரும் மொழிகளைக்கொண்டு நம்மனோர்க்கு நன்கறிவுறுத்தி யிருக்கின்றரென்பது யாவரும் அறிந்த விஷயம். அத்தகைய வேதமான கர்ம உபாஸனா ஞான காண்டங்களென மூவகையாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. இதன் நடுவிலுள்ள உபாஸனா காண்டமென்பதே பக்தி யோகத்தின் ஸாரமாகும். இப்பக்தி யோகமானது, தன்னிரு புறத்துமுள்ள கர்ம—ஞானங்களைத்தழுவி நடு நாயகமணியென இலங்குகின்றது. இதனால், பக்தியானது சத்கர்மங்களுக்குப் பயனென்றும், ஞானோற்பத்திற்குக் காரணமென்றும் ஏற்படுகிறது. இது பற்றியே, ஸ்ரீ கீதாசாஸ்திரமும்

கர்மம்—பக்தி-ஞானமென்கிற வரிசையில் மூவாறத்தியாயங்களாகத்தொகுக்கப்பட்டிருக்கின்றதுபோலும். இது வேதாந்திகளனைவராலும் ஒப்புக்கொள்ளத் தகுந்ததே. உபாஸனு காண்டம் என்பது, மூர்த்தி-தலம்-தீர்த்தம் என்பவற்றை விரிவாகக் கூறி, அவற்றில் இடையருத அன்பு செலுத்தும்படி, ஏனையோரைத் தூண்டுகின்றது. இதனுள் மூர்த்தி என்பது அன்பர்களது சித்த ருசிக்கேற்றவாறு பலவகைப்பட்டிருக்கும் "**தமருகந்த தேவ்வுருவ மவ்வுருவ மெம்மடிகள்**" என்றூ ரன்றே பெரியோரும். இவை யனைத்தும் கருணைக் கடலாகிய பரம்பொருளின் வடிவங்களேயாம். சைவ வைஷ்ணவ சமயா சாரியா ரனைவரும், இவற்றைப்பாடியே தமது வாக்கை யலங்கரித்துக்கொண்டார்கள். இவற்றைத் தியானிப்பதால் (ஸாலம்பனமாகத்தியானிப்பதால்)நிராலம்பனத்தியானத்தில்சித்தவிருத்தி நிலைநிற்குமென்பது பதஞ்சலியோக ஸூத்ரத்தின் முடிவாகும். இவை யாவும் தமது மெய்யன்பர்களின் வேண்டுதலுக்கிணங்கி, அவர்கள் ஏற்படுத்திய பிம்பங்களில் பரிபூர்ண ஸாந்நித்யமடைந்திருப்ப தென்பதுவே, வேதவைதிகர்களின் கொள்கையாகும். இதன் உண்மையான நிலைமையை,வேத-ஆகம-சாஸ்த்ர இதிஹாஸ-புராணங்களைக்கொண்டு, நமதுமுன்னோர்கள் தெளிவுறக்காட்டி யிருக்கின்றனர். வேதத்தை நம்புவோர் இதை மறுக்கமாட்டார். மற்றவர்களைப்பற்றி நாம் கூறவேண்டுவதும் கொஞ்சமுண்டு. சிலர் ஸர்வாந்தர்யாமியாகிய பரம்பொருளுக்கு ஓர் உருவம் உண்டோ? அவர்கள் நம்போன்ற மானிடர்களால் அமைக்கப்பெற்ற கல்லாலும் மண்ணுலுமாகிய உருவத்தில் தானிருப்பாரோ? இஃதெல்லாம் ஒருவகையார் செய்த புரட்டென்று பிதற்றித் திரிவர். இப்பிதற்றல் அடியற்றதும் அஸாரமானது மாகும். அக்கடவுள் ஸர்வாந்தர்யாமி, எங்கும் நிறைந்தவர் என்றால், நாம் அமைத்த பிம்பத்தில் மாத்திரம்

ஏனிருக்கலாகாது? சிலர் இல்லை என்பாராகில், அவர் எங்கும் நிறைந்தவர் என்று கூறும் தமது கூற்றுக்குப் பழுதுவருமே என்பதைக் கவனிக்கவேண்டும். இதற்குமேலும் சிலபித்தர்கள் கோவில் ஏன்? குளமேன்? என்று உளறுவார்கள். இக்கடையர்கள் தங்களுடைய மரியாதையை மாத்திரம் ஏன் குறையாமல் நடத்திக்கொள்ள விரும்பி முயல்கின்றனரோ அறியோம். மஹம்மதியரும் கிறிஸ்தவரும், நம்மை இகழ்வாகக் கூறிவிட்டு, தாமேன் மசூதிக்கும் சர்ச்சுக்கும் போகிறார்களோ, இதுவும் ஸ்வபக்ஷபக்ஷபாதமாக இருக்கின்றதேயன்றி? வேறென்ன, என் தாய் மலடி என்று கூறும் இம் முரடர்களோடு வாதாடி, காலத்தை வீணே கழிப்பதைக் காட்டிலும், நமது உபாஸநா மூர்த்திகளையே வழிபட்டுய்வது மிக்க நலமாகும். இத்தகைய மூர்த்தங்களில் மறை முதற் பொருளாகிய ஸ்ரீ ஸ்கந்தப்பெருமானது மூர்த்தியும் முக்கியமாகியது. இவரிடத்து மாறாத அன்புடையோர் இவரோடு இரண்டறக் கலந்துய்வார் என்று, ஸ்ரீமத்வால்மீகி ராமாயணம் 37-வது ஸர்க்கம் 33-வதுசுலோகம் கூறும்.

𑌭𑌕𑍍𑌤𑌶𑍍𑌚 𑌯𑌃 𑌕𑌾𑌰𑍍𑌤𑍍𑌤𑌿𑌕𑍇𑌯𑍇 𑌕𑌾𑌕𑍁𑌤𑍍𑌸𑍍𑌥 𑌭𑍁𑌵𑌿 𑌮𑌾𑌨𑌵𑌃 ।
𑌆𑌯𑍁𑌷𑍍𑌮𑌾𑌨𑍍𑌪𑍁𑌤𑍍𑌰𑌪𑍌𑌤𑍍𑌰𑍈𑌶𑍍𑌚 𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌸𑌾𑌲𑍋𑌕𑍍𑌯
𑌤𑌾𑌂 𑌵𑍍𑌰𑌜𑍇𑌤𑍍 ॥

பக்தஸ்சயஃ கார்த்திகேயே காகுஸ்தபுவி மானவஃ।
ஆயுஷ்மான்புத்ரபௌத்ரைஸ்ச ஸ்கந்தஸாலோக்ய தாம்வ்ரஜேத்

எக்காலத்தும் இப்பெருமானே கண்கண்ட தெய்வமாகும். இவரது மஹிமையை ஸ்ரீஸ்காந்தபுராணம் சங்கர ஸம்ஹிதையினால் நன்குணரலாம். இவரை வணங்குவோர் இம்மை மறுமைப்பயன்களை எளிதிலெய்துவார் என்பதற்கு இந்நூல் உருவிற் சிறியதாயிருப்பினும், பெருமையிற் சிறந்த

தென்பதே போதிய சான்ருகும். ஒருநூலை எழுதத் துணிந்தோர், எதைப்பற்றி எழுத முயன்ருரோ, அந்தப் பொருளோடு, தானும் தன்மயத்துவத்தை யடைந்தாலன்றி, அந்நூல் படிப்போர் மனதைக், கவராது. சென்னை ஸ்ரீகந்தப்பெருமானுர் கோயில் என்னும் ஸ்ரீமுத்துக்குமார ஸ்வாமி ஆலய வைபவம் என்னு மிச்சிறிய சீரிய நூலை, நான் மூன்றுமுறை ஒரெழுத்தேனும் விடாமற் படித்தேன். புத்தகத்தைக்கையில் எடுத்தது முதல் முடியும் வரை, மனது வேருென்றையும் நாடாமல், அதிலேயே அழுந்திவிட்ட தென்பதை என் மனதே யறியும். இவ்வொரு சிறுபுஸ்தகத்தைப் படித்தாலே, வேதாந்தங்களின் ஸார மித்தகைய தென்பதும், தற்காலமிருக்கும் போலி அன்பின் நிலைமையும் தெரிந்து கொள்ளலாம். திருப்போரூரிலிருந்து தேவ ஸேநாபதி சென்னைக் கெழுந்தருளிய விதத்தின் இயல்பைப்படித்து, முருகப்பெருமானிடத்தில் ஈடுபடாமல், எவருமிராரென்பது எனது உண்மையான கருத்து. கடவுள் என்பது ஆஸ்திக ரனைவர்க்கும் பொது. நூலாசிரியரும் ஸ்ரீகந்தகோட்டத்துள் வளர் பெருமானதுகோயில் ஸம்பந்தமாகிய ஆதீனம் மாத்திரம் தமது வகுப்பாரைச் சேர்ந்த தென்றே கூறுகின்ருர். அதுபற்றி நம்மனோர்க்கு விவாதமேயில்லை. ஆகையால், பன்னிருகையனை முருகையனை நாமனைவரும் நாள்தோறும் சென்று தெரிசித்து, மானிடப்பிறவியைப் பயனுறச்செய்யவேண்டி யிருப்பின், இச்சிறு புத்தகத்தைத் தாமதமின்றி வாங்கிப்படித்துக் காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ள முயல வேண்டும். இப்பெருமானைப்பற்றி அருட்பெருஞ்சோதியிலாழ்ந்த வடலூர்—ஸ்ரீ இராமலிங்க ஸ்வாமிகளது அருள்வாக்குப் பாடுமொனுல், அப்பெருமானது பெருமை வாசாமகோசரமன்ருே? இப்புத்தகத்துக்கேற்படுத்தியிருக்கும் விலையோ மிக்க குறைவு. இதினு லடையும் பயனே

அளவுகடந்தது என்பதைப் பிரதி மானவரும் அறிந்து, விரைவாக இப்புத்தகத்தை வாங்கிப்படித்து, ஸ்ரீஷடானனப் பெருமானருளுக்கிலக்காகி, ஆத்ம லாபத்தை அடைவதோடு, இந்நூலாசிரியராகிய ஸ்ரீமான் ஆயுர்வேத பண்டிதர் சை. ர. நமசிவாய ராஜயோகியாரவர்களுக்கும், இதை உள்ளன்போடு பதிப்பித்த ஸ்ரீ சாது இரத்ன சற்குரு புத்தகசாலை தலைவர் ஸ்ரீமான் சை. ந பாலசுந்தரஞ் செட்டியாருக்கும் பன்முறை நன்றி செலுத்தி, இதுபோன்ற மற்று மனேக நூல்களை நமக்குதவும்படி கேட்டுக்கொள்ள வேண்டிய தவசிய மென்பதைப் பன்முறையும் வற்புறுத்துகிறேன்.

ஸ்ரீராமதத்வப்ரகாச நிலயம்,
நெ· 67. லிங்கி செட்டி வீதி,
சென்னை. 30-10-1931.

இங்ஙனம்,
ஸஜ்ஜனவிதேயன்
ஸௌந்தரராஜய்யங்கார்.

(சென்னை நகரசபை அங்கத்தினரும், வள்ளுவரும் மகளிரும் என்னும் சீரிய நூலாசிரியரும்)

திருவாளர்

*T. P.* மீனுக்ஷி சுந்தரம் பிள்ளை *M. A. B. L.*

(அட்வகேட்)

"ஸ்ரீ கந்தப் பெருமானூர் கோவில் என்னும் ஸ்ரீ முத்துக்குமார சுவாமியார் ஆலய வைபவம்" என்கிற நூலைக்கண்டு மிக அக மகிழ்ந்தேன். இக்கோயிலின் வரலாற்றைப் பற்றி, இப்போது தெரிந்துள்ள வற்றைத் திரட்டி எழுதிய திருவாளர் சை.ர. நமச்சிவாய ராஜயோகி யாருக்கு நாம் என்றும்கடமைப்பட்டுள்ளோம். ஒவ்வோரிடங்களைப்பற்றி வழங்கி வரும் வரலாறுகளை, இவ்வாறு திரட்டி வெளியிடுவதை மேனாட்டாரிடத்தே மிகுதியும் காணலாம். அவ் வரலாறுகள் அழிந்

தொழியாதபடி நிலைநிறுத்துவதால், அவை, பின்னே வரும் ஆராய்ச்சி யாளருக்குப் பெரிதும் புயன்படும் அன்றோ? எளிய நடையில் இனிமையாக எழுதப்பட்டிருக்கும் இந்நூல், எல்லோருக்கும் பயன்படும் என்பதில் ஐயம் இல்லை. ஸ்ரீசாது இரத்ன சற்குரு புஸ்தகசாலையின் தலைவர், திருவாளர் சை. ந. பாலசுந்தரம் செட்டியார் இத்தகைய நூல்கள் பலவற்றை வெளியிடுமாறு, கந்தக்கோட்டப் பெருமானுர் அருள் புரிவாராக.

'தமிழகம்'
5. உலகப்ப மேஸ்திரி தெரு,
சிந்தாத்திரிப் பேட்டை.
29-10-31.

தெ. மீனுக்ஷி சுந்தரன்.

சென்னை "லோகோபகாரி" ஆசிரியர்

## திருவாளர்:—பரலி. சு. நெல்லையப்ப பிள்ளை அவர்கள்

ஆயுர்வேத பண்டிதர் S. R. நமச்சிவாய ராஜயோகியார் இயற்றிய கந்தப் பெருமானுர் கோயில் என்னும் சென்னை முத்துக்குமார சுவாமியார் ஆலய வைபவம் என்ற நூலைப் பார்வையிட்டோம். இதில் சென்னைக் கந்தகோட்டமென்று பெரும் பேர்பெற்ற திருமுருகன் ஆலயத்தின் வரலாறு, ஆதி முதல் விளக்கப்பட்டிருக்கிறது. சுமார் முந்நூறு ஆண்டுகளுக்கு முன் திருப்போரூரிலிருந்த சிலைவடிவ முருகப்பெருமான் இருபக்தர்களின் தவத்தால், சென்னைக்கு எழுந்தருளி வந்த செய்தி, இதில் விளக்கப் பட்டிருக்கிறது. கந்த கோட்டத்தைப்பற்றிய பல விவரங்களையும் இதில் காணலாம். இதனை வெளியிட முன்வந்த அன்பர் செயல் போற்றத்தக்கது. முரு

கன் அடியார்கள், இந்நூலைப் பெரிதும் விரும்புவார்களென்பதில் ஐயம் இல்லை.

சென்னை 'தேசபந்து' ஆசிரியரும் ஆஸ்திகச் சங்கத்தலைவரும்,
முதுமொழிக்காஞ்சி விரிவுரை-தேசிங்குராஜன் வசனம்,
ஸ்திரிபுருஷ தத்துவம்-கொக்கோக வசனம்
முதலிய பல நூல்களின் ஆசிரியருமான

திருவாளர் சதாவதானம்
தெ-கிருஷ்ணசாமிப்பாவலர்
அவர்கள் இயற்றிய

வெண்பா.

"கந்தர் கோட்டத்துள் வளர் கந்தன் பிரபாவம்
சிந்தை மகிழவே செப்பினனால்-சந்தமுறு
சென்னைச் சிரேட்டி குலச்சீர் நமச்சிவாயன்றன்
மன்னு மறிவின் மதித்து."

---

ஓம்

# சென்னை - கந்தப்பெருமானர் ஆலய

## நித்திய-வார-பக்ஷ-மாத-வருஷ விசேஷ உற்சவாதிகள்.

| மாதம் | உற்சவ விசேஷம் | தினம் | உபய கர்த்தர்கள் |
|---|---|---|---|
| பிரதி மீ | பஞ்சபருவ உற்சவம் | | புளியம் பாக்கம் பாபாளம்மாள் உண்ணுமலை அம்மாள் தர்ம பண்டு |
| | கிருத்திகை | | |
| | பவுர்ணமி | | முத்துக்குமாரசாமி குருக்கள் துரைசாமி குருக்கள் வகையரா |
| | அமாவாசை | | ஷை |
| | ஷஷ்டி | | அ. செங்கல்வராய செட்டியார் |
| | பிரதோஷம் | | க. ஏகப்ப செட்டியார் |
| | சுக்கிரவாரம் | | ஆ. இராமு செட்டியார் |
| | சுக்லபட்ச்சதுர்த்திஉற்சவம் | 1 | தென்னேரி சிங்காரவேலு செட்டியார் |
| சித்திரை | வருஷப் பிறப்பு | 1 | மிளகாய்கடை வர்த்தகர்கள் |
| | ஸ்ரீமங் அப்பர் சுவாமிகள் | 10 | சைவசமய பக்தஜன சபையார் |
| | கோவில்குளம்தெப்பல் | 3 | தின்னனூர் அம்மாய் அம்மாள் வகையரா |
| | சொக்கநாதர் தெப்பம் | 1 | செ. சோமு செட்டி வகையரா |

| மாதம் | உற்சவ விசேஷம் | தினம் | உபயகர்த்தர்கள் |
|---|---|---|---|
| | ஆறுமுகசுவாமி தெப்பம் | 1 | மருந்துகடை வர்த்தகர்கள் |
| | மீனாக்ஷி அம்மனுக்கு கத்திரி ஆரம்பம் | | |
| வைகாசி | கிரகணம் நேர்ந்தால் | | பாரங்கிமலே நடேச செட்டியார் |
| | திருஞானசம்பந்தர் உற்சவம் | 10 | சைவ சமய பக்தஜன சபையார் |
| | கந்தப்பெருமானுக்கு வஸந்தோற்சவம் | 1 | 18-கடை ஜவுளி வர்த்தகர்கள் |
| | | 2 | ஏனாதி மாணிக்க செட்டியார் |
| | | 3 | அப்பாதுரை முதலியார் அண்ட் சன் |
| | | 4 | ஹோட்டல் நாராயண ஐயங்கார் |
| | | 5 | மருந்துகடை கந்தசாமி செட்டியார் |
| | | 6 | அ. பானு செட்டியார் |
| | | 7 | கொத்தவால் சாவடி வாழைப்பழ வர்த்தகர்கள் |
| | | 8 | மளிகைக்கடை வர்த்தகர்கள் |
| | | 9 | காசுக்கடை வர்த்தகர்கள் |
| | | 10 | அப்புக்குட்டி ஆசாரி, ஜெகன்னாத ஆசாரி |

| மாதம் | உற்சவ விசேஷம் | தினம் | உபய கர்த்தர்கள் |
|---|---|---|---|
| | | 11 | அரிசிமண்டி வர்த்தகர்கள் |
| | | 12 | இரும்புகிடங்கு வர்த்தகர்கள் |
| | | 13 | அலடி சுப்பராய செட்டியார் வகையரா |
| | | 14 | காளி-இரத்தின செட்டியார் வகையரா |
| | | 15 | பாக்குக்கடை வர்த்தகர்கள் |
| | | 16 | வஸந்தமண்டப ஜவுளி வர்த்தகர்கள் |
| | | 17 | தென்னேரி-பார்த்தசாரதி செட்டியார் |
| | ஆறுமுக சுவாமி | 18 | மருந்துக்கடை வர்த்தகர்கள் |
| | சொக்கநாதர் வஸந்தம் | 19 | பெரியகடை எண்ணெய் வர்த்தகர்கள் |
| | வசந்தஉற்சவ 4-நாள் விடையாற்றிபுஷ்பமயில்வாகனம் | 1 | G. R. தக்ஷணாமூர்த்தி செட்டியார் |
| | சேக்கிழார் நாயனர் | 1 | அ. ம. மயிலப்ப செட்டியார் |
| ஆநி | ஸ்ரீமந் மாணிக்க வாசகர் | 10 | சைவ சமய பக்தஜன சபையார் |
| | பவுர்ணமி கோடைகால மெத்தை உற்சவம் | 1 | அலுமினீயம் வர்த்தகர்கள் |
| | | 2 | ராட்டன்பஜார் பிரம்புகடை வர்த்தகர்கள் |
| | | 3 | சைனுபஜார் பித்தளைபாத்திர வர்த்தகர்கள் |

| மாதம் | உற்சவ விசேஷம் | தினம் | உபய கர்த்தர்கள் |
|---|---|---|---|
| | | 4 | ஒற்றைவாடை கரிகிடங்கு வர்த்தகர்கள் |
| | | 5 | தங்கக்கடை நாராயணசாமி செட்டியார் |
| | | 6 | மருந்துக்கடை வர்த்தகர்கள் |
| | | 7 | வர்ணகடை பூட்டுகடை வர்த்தகர்கள் |
| | ஆனிதிருமஞ்சனம் (ஸ்ரீநடராஜர்) உற்சவர் அபிஷேகம் | 1 | சே. துளசிங்க செட்டியார் |
| ஆடி | ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் | 10 | சைவசமய பக்தஜன சபையார் |
| | மீனாக்ஷியம்மன் உற்சவம் | 1 | வி. ஜி. சேஷாசல செட்டியார் |
| | | 2 | பூ. சௌபாக்கியம்மாள் |
| | | 3 | சிந்தகாயல—முனிசாமி செட்டியார் |
| | | 4 | தோம்பூர். ரா. ஆறுக செட்டியார் |
| | | 5 | ப. மு சரவண செட்டியார் |
| | | 6 | வ. சி. ஜகதாம்பாள் அம்மாள் |
| | | 7 | சி. தனபால் செட்டியார் & சி. ந. பஞ்சாக்ஷர செட்டியார் |
| | | 8 | பந்தல். ரா. பாலசுந்தர நாயகர் |

| மாதம் | உற்சவ விசேஷம் | தினம் | உபய கர்த்தர்கள் |
|---|---|---|---|
| | | 9 | S. D. ரங்கப்யா |
| | | 10 | |
| ஆவணி | ஆவணி மூலம் | 1 | மளிகைக்கடை வர்த்தகர்கள் |
| | பவுத்திர உற்சவம் 3-தினம் யாகம் 1-தினம் உற்சவம் | 3 | இரத்தினசபாபதி முதலியார் உயில்படி தேவஸ்தானம் [தர்ம பண்டு |
| | விநாயக சதுர்த்தி | 1 | தென்னேரி சிங்காரவேலு செட்டியார் |
| | குங்கிலியக்கலய நாயனுர் | 1 | குங்கிலியக் கலயநாயனுர் பக்தஜன சபையார் |
| புரட்டாசி | நவராத்திரி | 1 | ஆயச்சேரி வையாபுரி செட்டியார் தர்ம பண்டு |
| | | 2 | தேவஸ்தானம் |
| | | 3 | க. சதாசிவ செட்டியார் |
| | | 4 | அ. வி. முத்துக்குமார ஸ்வாமி செட்டியார் |
| | | 5 | தென்னேரி. பார்த்தசாரதி செட்டியார் |
| | | 6 | சோமசுந்தர முதலியார் |
| | | 7 | ஆரணி-இராகம்மாள் |
| | | 8 | தஞ்சம்மாள் வகையரா |
| | | 9 | சீ-ஏழுமலை செட்டியார் |

| மாதம் | உற்சவ விசேஷம் | தினம் | உபய கர்த்தர்கள் |
|---|---|---|---|
| | விஜயதசமி (பரிவேட்டை) | 1 | மருந்துக்கடை வர்த்தகர்கள் |
| ஐப்பசி | அன்னபிஷேகம் | 1 | பாக்குக்கடை வர்த்தகர்கள் [தேவஸ்தானம்) |
| | ஸ்கந்தசஷ்டி (லக்ஷார்ச்சனே) | 7 | கோ. சரவண செட்டி வகையரா (லக்ஷார்ச்சனே |
| கார்த்திகை | சோமவாரம் | 1-வாரம் | சை. சோமசுந்தர செட்டியார் |
| | | 2 ,, | பெ. அருணசல செட்டியார் |
| | | 3 ,, | சீவரம்-பொன்னுசாமி செட்டியார் |
| | | 4 ,, | தஞ்சா-ரா-முருகப்ப செட்டியார் |
| | | 5 ,, | வல்லம்-முருகப்ப செட்டியார் |
| | கிருத்திகை தீபம் | 1 | ஆணிகடை இரும்பு வர்த்தகர்கள் |
| | வனபோஜனம் | 1 | நூல்கிடங்கு அம்மாய் செட்டி வகையரா |
| மார்கழி | விடியற் காலத்தில் தநுர் காலபூஜை | 30 | தென்னேரி சிங்காரவேலு செட்டியார் |
| | ஸ்ரீமந் மாணிக்கவாசகர் | 1 | தென்னேரி-சிங்காரவேலு செட்டியார் |
| | | 2 | தேவஸ்தானம் |
| | | 3 | மணலி கந்தசாமி செட்டியார் |
| | | 4 | தேவஸ்தரனம் |

| மாதம் | உற்சவ விசேஷம் | தினம் | உபய கர்த்தர்கள் |
|---|---|---|---|
| | | 5 | அ. பாலு செட்டியார் வகையரா |
| | | 6 | தேவஸ்தானம் |
| | | 7 | கு. செங்கல்வராய செட்டி [தர்ம பண்டு |
| | | 8 | புளி-பாபாளம்மாள்-உண்ணுமுலை அம்மாள் |
| | | 9 | நேமம்-செங்கல்வராய செட்டியார் |
| | | 10 | ஆயச்சேரி-பார்வதி அம்மாள் |
| | ஆருத்ரா | 11 | நூல்கிடங்கு அம்மாய் செட்டியார் |
| | அரைக்கட்டு | 1 | தேவஸ்தான குருக்கள்மார் |
| | | 2 | ஷை. சுயம்பாகி பரிசாரகர் |
| | | 3 | ஷை நிமிந்தக்காரர் |
| | [சேர்வை | 4 | இரத்தினல்-இரத்தினவேல் செட்டியார் |
| | வைகுண்ட ஏகாதசி கருட | 1 | மருந்துகடை குப்புசாமி செட்டியார் |
| தை | மாட்டுபொங்கல் பரிவேட் | 1 | சந்தனம்-நமசிவாய செட்டியார் |
| | பிர்ம்மோற்சவம் | 1 to 18 | ☞ தனியாக எழுதப்பட்டுள்ளது |
| மாசி | மகம் | 1 | இரும்புகிடங்கு வர்த்தகர்கள் [கள் |
| | மஹா சிவராத்திரி | 1 | பெரியகடை வெற்றிலை பாக்குகடை வர்த்தகர் |

| மாதம் | உற்சவ விசேஷம் | தினம் | உபய கர்த்தர்கள் |
|---|---|---|---|
| பங்குனி | சொக்கநாதர் உற்சவம் | 1 | கொ-இரத்தினவேல் செட்டியார் பாரியாள் ஆநந் |
| | | 2 | இரும்பு ஆணிகடை வர்த்தகர்கள் [தாயம்மாள் |
| | | 3 | படிக்கடை கந்தசாமி செட்டியார் |
| | | 4 | துண்டு பித்தளைக்கடை வர்த்தகர்கள் |
| | | 5 | ஆணி இரும்புக்கடை வர்த்தகர்கள் |
| | | 6 | ரேவு-வண்டி கண்டிராக்டர் வகையரா |
| | | 7 | ஆணி இரும்புக்கடை வர்த்தகர்கள் |
| | | 8 | பெரியகடை மளிகைகடை வர்த்தகர்கள் |
| | | 9 | மதுரைகடை ஜவுளி வர்த்தகர்கள் |
| | நடராஜர் உற்சவம் | ,, | வர்ணகடை ஆறுமுக செட்டியார் |
| | | 10 | புகையிலை வர்த்தகர்கள் |
| | | 11 | பெரியமெட்டு சொக்கலிங்க செட்டியார் |
| | தவன உற்சவம் | 1 | இரும்புபாத்திர வர்த்தகர்கள் |
| | | 2 | வெ. சு. முருகேச செட்டியார் |
| | [உற்சவம் | 3 | அ. குமாரசாமி செட்டியார் |
| | சொக்கநாதர் அமாவாசை | 1 | சே. துளசிங்க செட்டியார் |
| | ஷை ஏகாந்த சேவை | 1 | சீவரம் சுப்பராய செட்டியார் |

☞ இதுதவிர, மாதந்தோறும் மாசப்பிரவேசம், ஷஷ்டி, பாலசுப்பிரமணியருக்கு அபிஷேகமும் உற்சவமும், சதுர்த்தியில் விநாயகருக்கு அபிஷேகம், குங்கிலியக்கலய நாயனூர்க்கு அபிஷேகம், விசாகம் ஆறுமுகஸ்வாமிக்கு அபிஷேகம்; கார்த்திகை மாதத்தில் ஐந்தாவது சோமவாரத்துக்கு அடுத்த செவ்வாய்க்கிழமை இரவு அர்த்த ஜாமத்தில் பைரவபூஜை; தைமாதம் மாட்டுப் பொங்கல் பரிவேட்டை; மார்கழி மாதம் 1-தேதி முதல் 30-தேதி வரையும் விடியற்காலையில் தநுர் மாதபூஜை. நடைபெறுகின்றது.

☞ பிரதி கிருத்திகையிலும் பிச்சம் இரத்தின செட்டியார் அவர்களால் வீரபத்திருக்கு வெற்றிலைக்காப்பு; பவுர்ணமி தோறும் தக்ஷிணாமூர்த்திக்கு அபிஷேகம் சந்தனக்காப்பு சே. சோமு செட்டியார் அவர்களால் நடத்தப்பட்டு வருகின்றன.

ஓம்

# சென்வண-கந்தப்பெருமானுர் ஆலய ப்ரம்மோற்சவம்.

## பிரதி வருஷம்-தைமீ -சுக்கிலபக்ஷம்-பஞ்சமி-அல்லது-சஷ்டி துவிஜா ரோஹணம்; பௌர்ணமி தீர்த்தவாரி.

| உற்சஇலக்கம் | காலை வாகனம் | மாலை வாகனம் | உற்சவம் செய்பவர்கள் |
|---|---|---|---|
| | | வீரபாகு மஹோற்சவம் | தேவஸ்தானம் [வர்த்தகர்கள் |
| 1 | துவிஜாரோகணம் (விமானம்) | கற்பக விருக்ஷம் | ஒன்பது கடைவாடை ஜவுளி |
| 2 | இரட்டைத்தலை சிம்ஹ வாகனம் | தங்கமுலாம் சிம்ஹ வாகனம் | இரும்புகிடங்கு வர்த்தகர்கள் |
| 3 | காலை5-மணிக்கு (புருஷா) மிருகம் | தங்கமுலாம் சூரபத்மாசுர வாகனம் | முந்திரிபருப்புகடை வர்த்தகர்கள் |
| 4 | மேஷ வாஹனம் | தங்கமுலாம் நாக வாகனம் | அரிசிமண்டி வர்த்தகர்கள் |
| 5 | மயில் வாகனம் | தங்கமுலாம் மயில் வாகனம் | வெற்றிலைகிடங்குவர்த்தகர்கள் |
| 6 | சிவிகை | தங்கமுலாம் யானை வாகனம் | காசுக்கடை வர்த்தகர்கள் |
| 7 | இரதா ரோஹணம் | தங்கத்தொட்டி (ரதத்திலிருந்து எழுந்தருளுதல்) | நெல்லுமண்டி வர்த்தகர்கள் |
| 8 | நூதன இந்திர விமானம் (சூளை பார்வேட்டை) | தங்கமுலாம்குதிரைவாஹனம் | பதினெட்டுக்கடை மளிகை வர்த்தகர்கள் |

| உற்சவ இலக்கம் | காலை வாகனம் | மாலை வாகனம் | உற்சவம் செய்பவர்கள் |
|---|---|---|---|
| 9 | பதினாறுகால் விமானம் | கைலாசபர்வத ஆரோஹணம் | தேங்காய்கிடங்குவர்த்தகர்கள் |
| 10 | விமானம் | பழநியாண்டவருக்கு விமானம், உற்சவ மூர்த்திக்கு தங்கத்தொட்டி | மொ. து. வேலுசெட்டி வகையரா; |
| 11 | விமானம் (முத்தியாலு பேட்டைக்குப் போதல்) | முத்தியாலுபேட்டை ஸ்ரீகச்சபேஸ்வரர் திருக்குளத்தில் தெப்பல் உற்சவம், தங்கத் தொட்டி முத்தியாலு பேட்டைவீதி உற்சவம் | கிண்டன்கடை வர்த்தகர்கள். |
| 12 | | பழநிஆண்டவர் உபநயன உற்சவம் கந்தமாதன விமானம்உற்சவருக்குவாள்கார- இரத்தினவேலுசெட்டியார் அவர்களால் செய்துவைத்த கண்ணாடி பல்லக்கு | ஆணிக்கடை வர்த்தகர்கள். |

| உற்சவ இலக்கம் | காலை வாகனம் | மாலை வாகனம் | உற்சவம் செய்பவர்கள் |
|---|---|---|---|
| 13 | | தேவேந்திர போகம்: மங்கள கிரி விமானம் | பதினெட்டுக்கடை வாடை ஜவுளி வர்த்தகர்கள். |
| 14 | | தெய்வயானை திருக்கல்யாணம் வெள்ளையானை வாகனம் | ஷை ஷை |
| 15 | வெள்ளியங்கிரி விமானம்: (இராயபுரம்-வேடர்பறி தோட்டம் செல்லுதல்) | வேடர்பறி உற்சவம் விமானம் [வாகனம் | பாக்குகடை வர்த்கர்கள். |
| 16 | | வள்ளித்திருமணம். பக்கமயில் | ஷை ஷை |
| 17 | கந்தப்பொடி உற்சவம்:4-கால் விமானம் | தவன உற்சவம்: தங்கத் தொட்டி [கால் வீமானம் | இரத்தினவேலு நாய்க்கர் வகையரா. |
| 18 | | ஆறுமுகஸ்வாமி உற்சவம்16- | மருந்துக்கடை வர்த்தகர்கள். |
| | | உற்சவசாந்தி | தொ. ச. இராஜு செட்டியார். |
| | | சங்காபிஷேகம் | குருக்கள் மார்கள் |
| | | ஏகாந்தசேவை | A. M. மாணிக்க செட்டியார். |

☞ 11-நாள் விடாயாற்றி உற்சவம் நடைபெறுகின்றது.





சிவ சுப்ரமண்யக்கடவுள் துணை.



* ஸ்ரீ கந்தப்பெருமானார் கோயில் என்னும்

# ஸ்ரீ முத்துக்குமார சுவாமியார்

# ஆலய வைபவம்.

(சென்னைக் கந்தகோட்டமெனவும் வழங்குவர்)

விநாயகர் காப்பு.

மூலமாய்ப் பொருளாய் வேதமுடிவுமாய் நடுவோய் முன்னம்
ஆலமுதுண்ட கண்டற் கற்புதப் புதல்வனுகிச்
சீலமாயெவர்க்கும் வேணச்செல்வமே அளிக்குநல்ல
காலமேவரும் பிரசன்ன கணபதி காப்புதானே.

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உண்ணுடு.

* இவ்வாலயம் சென்னை, FortSt. George) கோட்டைக்கு மேற்கு ஒரு பர்லாங்கு தூரத்தில், பார்க் டவுன், இராசப்பசெட்டி வீதி செ. 77-ல் உள்ளது.

## (1) சென்னைபம்பதி.

அமிழ்தினு மினிய செந்தமிழ் வழங்கும் தொண்டை நன்னாட்டினில், நீர்வளம் நிலவளம் குடிவளம் முதலிய பல் வளங்களும் சிறப்பாக அமையப்பெற்று, தற்போது சென்னை இராஜதானிக்குத் தலைநகராய் விளங்குவது சென்னைமாநகரமே. ஓர் காலத்தில் இந்நகரமானது சென்னப்பநாய்க்கன் என்பானது அரசாக்ஷிக்குட்பட்டதாயிருந்தமையால், அவன் பெயராலேயே, இப்பதியானது வழங்கி வந்ததென்னலாம். அவன் சந்ததியிற் றோன்றிய முத்தியாலு நாய்க்கனுக்கு ஓர் பூந்தோட்டம் இருந்தது. அப்புஷ்ப வனத்தில் முத்தியாலுப் பேட்டையில் வசித்து வந்த விஸ்வப்பிர்ம்ம குலத்திலுதித்த பஞ்சானம் கந்தப்பாசாரி என்னும் பக்த சிகாமணி, ஓர் சிறு கோயிலொன்று அமைத்து, அதில் விநாயகப் பெருமானது சிலா விக்கிரகம் ஒன்று பிரதிஷ்டைசெய்து, அவ்வுருவத்துக்குச் **சர்வசித்தி விநாயகர்** என்னும் திருநாமம் சூட்டி, பக்தி சிரத்தையோடு தினம் பூஜித்து வந்தார். இதுகாரணம் பற்றியே, கந்தப்பாசாரி என்பாரைக் கந்தப்பண்டாரம் என அழைக்கும்படி நேர்ந்தது. ☞ இக்கோயில் தற்போது கந்தப்பெருமான் ஆலயத்து அக்நிமூலையில், சரவணப் பொய்கை என்னும் திருக்குளக்கரையின் தென் மூலையில் இருக்கின்றது.

## (2)* வைசியர் சிறப்பு.

**மனுஷ்ய** கோடிகள் இக லோகத்தில் இன்ப சுகத்தோடு வாழ்வதற்கும், பரலோகத்தில் மோக்ஷபதவி அடைவதற்கும், கடவுளால் அநுக்கிரகிக்கப்பட்டுள்ள வேத சூத்திரங்களில் பிர்ம்ம-க்ஷத்திரிய-வைசிய-சூத்திரர் என நான்கு வகுப்புக்கள்

---

*** வைசியர் சிறப்பு அறிய விரும்புவோர் வைசியர் புராணத்தில் (மூலமும் உரையும்) விரிவாகக் காணலாம். ... விலை ரூ 3—0—0**

கூறப்பட்டிருக்கின்றன. அவற்றுள், வடாரண்யம் என்னும் திருவாலாங்காடு க்ஷேத்திரத்தில் ஆயிரம் கோத்திரவர் களாகிய $ கார்க்கோடக முநிவர் § முஞ்சிகேஸ்வர முநிவர் ¶ அபிநவ தர்மசிவாச்சாரிய சுவாமிகள் இவர்களின் சிஷ்ய கோடிகளாகிய வைசிய மரபின் வரலாறு கீழ் வருமாறு:—

பிரமத்தின் தொடையிலுதித்த வக்குவர், வைசிய மரபிற் குரிய கொள்ளல்-விற்றல் - இனமாற்ற லென்னும் தொழிலைச் செய்யாமல், தவத்துக்குச் சென்றனர். அதனுல் தேவர்களுக்கு இடுக்கணுண்டாயிற்று. ஈதறிந்த கருணையங் கடவுளராகிய சிவபெருமான் தேவர்களது துன்பத்தினை நீக்குவான்வேண்டி, தவத்துக்குச் சென்ற வக்குவ முநிவரைத் தருவித்து, "அப்பா! வக்குவரே! உமது மரபினுக்குரிய தொழிலைச்செய்து உமது மரபினை விருத்தி செய்யாமல், தவத்துக்குச் சென்றமையால், உலகநிலை அழிந்தது; தேவர்கள் துன்புறுகிறுர்கள்; ஒவ்வொரு மரபினரும் தத்தமக்குரிய தொழில்களைச் செய்யும் பக்ஷத்தில், அதுவே தவம் செய்வதாலுலாய பலனைக்கொடுக்கும்; ஆத லால், நீர் உம் மரபினுக்குரிய ஓர் கன்னிகையை மணந்து, உன் மரபை விருத்தி செய்வாயாக" என்று ஆக்ஞாபித்தார். ஆனுல், வக்குவ மஹரிஷி உலக இன்பத்தை வெறுத்தவராகையினுல்,

$ திருவாலங்காடு தெண்ணண்டை மாடவீதியில் கார்க்கோடக முநிவர் ஆலயமுளது.

§ திருவாலங்காடு வடவண்டை மாடவீதியில் முஞ்சிகேஸ்வர முநிவர் ஆலயமுளது.

¶ ஸ்ரீ அபிநவ தர்ம சிவாச்சாரிய சுவாமிகள் மடம் நெறிஞ்சுப் பேட்டையிலும், சென்னை ஜ்யார்ஜ் டவுன், முத்தியாலுபேட்டை, ஸ்ரீ கச்சபாலீஸ்வரர் ஆலயம் வட அக்கிரார வீதியிலுமுள்ளது.

சீர்காழி ஸ்ரீ சட்டைநாத சுவாமிகள் மடம், சென்னை, கோம ளீஸ்வரன் பேட்டை சந்நிதி வீதியிலுளது.

யாகத்தினுல் ஆயிரம் புதல்வர்களைத் தருவோமெனச் சங்கற்பித்து, உமாதேவியாரை ஸ்தோத்திரித்தார்; அம்பிகையின் திருவருட் கிருபையால், ஓர் மலரைப்பெற்று, அம்மலரினின்றும் சிவாக்கினியால் கன்னிகை ஒன்று தோன்றிற்று. அக் கன்னிகைக்கு வக்குவ முநிவர் மங்கலநாண் தரித்து, ஸ்திரீ புருஷர்களிருவரும் சேர்ந்து யாகம் ஒன்று செய்தார்கள். அவ் யாகத்தில் ஆயிரம் தருப்பையை முடிந்து, பூர்ணுகுதியாகக் கொடுத்தார்கள்; அக்கினி தேவன் மிகவும் பூரித்து, ஆயிரம் குழவிகளை யீந்தான். வக்குவ முநிவர் அவ்வாயிரம் குழவிகள் சிவபெருமான் அநுக்கிரகத்தினுல் கிடைத்தவையென மகிழ்ந்து, அக்குழவிகளுக்கு சாஸ்வதிதேவியினுல் கல்வி கற்பித்து, பிரமதேவனுல் உபநயனச் சடங்குகள் செய்வித்தார்; இவர்களுக்குக் குபேரனது பெண்கள் ஆயிரவர்களையும் மணம் புரிவித்தார். 98-சிறந்த நகரங்களில் இவர்களைக் குடியேற்றி, இலை-காய்-எண்ணெய்-உப்பு-நீர்வாழ்வன நீங்கலாக, மற்ற எல்லாவித வர்த்தகங்களை நடாத்தும்படி அநுக்கிரகித்தார்; அவ்வாயிர மக்களும் ஆயிரம் கோத்திரத்தவர்களென்று சொல்லப்படுகிருர்கள்; இவர்களை ஆயிரவர்களென்றும் சொல்லுவதுண்டு. இவர்களுக்குத் தொழில்: ஓதல்-வேட்டல்-வேளாண்மை-வாணிபம் - பசுக்காத்தல் - உழவு ஆக அறுவகை. இவர்கள் ஈஸ்வர பக்தி-குருபக்தி-அடியார்பக்தி - அன்பு-அடக்கம்-பொறுமை-ஜீவகாருண்யம் முதலிய நற்குண நற்செய்கைகளை யுடையவர்கள். சிவ சுப்பிரமணியக்கடவுளைத் தம் குல தெய்வமாகக் கொண்டு, அவரை வழிபட்டு, அப்பெருமானது அநுக்கிரக பலத்தால், நோயற்ற வாழ்வும் குறைவற்ற செல்வமும் பொருந்தி, சாந்தம் - சமத்வம்-சத்திய நெறியிற் பிறழாது வாழ்ந்து வந்தார்கள். இவ்வாறுய காலையில், ஓர் நாள் சேரன்-சோழன்-பாண்டியன் ஆகிய மூன்று அரசர்களும், தங்கள் தங்களுடைய

முடிகளில் அணியும்படியான கிரீடங்களைப் புதுப்பித்துக்கொள் ளக்கருதி, அந்நகரத்துள்ள வணிகரனைவரையும் வேவுகாரரால் வரவழைத்து, "வக்குவ மாபினராகிய வணிக சிரேஷ்டர்களே! இவ்வுலகில் கிடைத்தற் கரிதென்று சொல்லக்கூடிய நவமணி களைக்கொண்டு, எங்கள் கிரீடங்களைப் புதுப்பிக்க விரும்புகின் ஞேம். அதற்குத் தக்க நவமணிகளைத் தேடிக்கொண்டுவாருங்க" ளென்று ஆக்ஞாபித்தார்கள். மூவேந்தர் வார்த்தைக்குட்பட்ட வணிகரனைவரும், தத்தம் இல்லஞ் சேர்ந்து, ஆழ்ந்த சிந்தனையி லழுந்தி, நாமனைவரும் அரசர்கள் விரும்பிய நவமணிகளைத் தேடிக்கொணர்வதாய் ஒப்புக்கொண்டு வந்தோம்; மணிகள் எங் குகிடைக்கும்? எவ்வாறு கொண்டுவருவோம்? அரசராக்கினை எவ்வாறு நடக்கும்? என்று ஏங்கி, இதற்கென்ன செய்வோமென மனச்சலிப்படைந்தார்கள்; அப்போது குளத்துடையா னென் னும் வணிகன் மற்றவர்களைப்பார்த்து, அம்மணிகள் இருக்கு மிடத்தைச் சொல்வீராகில், நான் கொண்டுவந்து தருகிறே னென்ருன். அவ்வார்த்தையினைக்கேட்ட வணிகனொருவன் எழுந்து, "சகோதரர்களே! மூவேந்தர் விரும்பும் மணிகள் இப் பூவுலகில் கிடைக்காது; தெய்வலோகத்தில் இந்திரனிடத்தி லொரு மணியும், சூரியனிடத்திலொரு மணியும், சந்திரனிட த்திலொரு மணியும் இருக்கின்றன" என்ருன். அதைக்கேட்ட குளத்துடையான் என்னும் வணிகன், சந்தோஷத்தோடு ஏனைய வணிகர்களைப் பார்த்து, "ஐயன்மீர்! கவலைப்படவேண் டாம்; அடியேன் அந்த மணிகளைத் தெய்வலோகம் சென்று கொண்டு வருகிறேன்" என்று தைரியம் கூறி, தம் குலதெய்வ மாகிய சுப்பிரமணியக் கடவுளைத் தியானித்து நமஸ்கரித்து, "தேவாதிதேவரே! சேர-சோழ-பாண்டியர்களாம் மூவேந்தர்க ளும், தத்தம் கிரீடங்களுக்கு வேண்டிய, நவமணிகளைத் தருவித்

துக்கொடுக்கும்படி எங்களுக்கு ஆக்ஞாபித்தார்கள்; நாங்கள ஒப்புக்கொண்டு வந்தோம்; அம்மணிகள் இப்பூவுலகில் கிடைத் தற்கரிது; தெய்வலோகத்தி லிருப்பதாகச் சொல்லுகிறார்கள்; ஆறுமுகத்தையாவே! தேவரீர் திருவருட்கிருபையை எதிர் பார்க்கின்றோம்'' என முறையிடலும், ஏழை பங்காளராகிய சண்முகப் பெருமான், குளத்துடையான் என்னும் வணிகனை ஆசீர்வதித்து, "அப்பா! நீ விரும்பிய மணிகள் தேவலோகத் துள்ளன; நீ பெறுவாய்'' என்று, தன் வாகனமாகிய மயிலைத் துணையாக அனுப்பினார். குளத்துடையான் கந்தப் பெரு மானைத் தியானித்த வண்ணம், மயிலைத்துணையாகக் கொண்டு, தெய்வலோகம் சென்று, தேவேந்திரனைக்கண்டு நமஸ்கரித்து, வந்தசேதியைத் தெரிவிக்க, இந்திரன் பன்னிரண்டு கழஞ்சி இடையுள்ள பவளத்தைக் கொடுத்தான்; சூரியனிடத்துச் சென்று நமஸ்கரித்து, வந்த சங்கதியைத் தெரிவிக்க, சூரியன் பாலசூரிய ஒளியை மாற்றத்தக்க சிவந்த பதுமராக மணியைக் கொடுத்தான்; பின்னர் சந்திரனிடம் சென்று நமஸ்கரித்து, வந்த சங்கதியைத் தெரிவிக்க, சந்திரன் ஆறு முத்துக்களைக் கொடுத்தான். இவை யனைத்தையும் பெற்றுக்கொண்டு, பூவுல கில்வந்து, மயிலை தன்னிருப்பிடம் அனுப்பிவிட்டு, தன்னினத் தவர்களோடு மூவேந்தரிடம் சென்று வணங்கி, தாங்கள் மணிகள் கொண்டுவந்த வரலாற்றைச் சொன்னார்கள். அர சர்கள் மிக மகிழ்ச்சி யுற்று, அம்மணிகளின் குணாதிசயங்களைப் பார்த்துப் புகழ்ந்து, "வணிகர்களே! சூரிய ஒளியைத் தோற் கடிக்கச் செய்யும் இரத்தினங்களைத் தருவித்துக் கொடுத்தமை யால், உங்களுக்கு "இரவிலேழு மாதித்தர்'' என்கிற பெயர் இன்றுமுதல் நிலைக்க'' என ஆசிகூறி, அனுப்பினார்கள். இவ் விஷயத்தை விளக்கும் படியானபாசுரம்:—

"வண்ணமா மணியவரவர் வழங்கிட வாங்கி
யண்ணல் மஞ்ஞை தன் னடி பணிந்தன னருளாலே
மண்ணிவாரணக் கோடியுடை வள்ளலை வழுத்தி
நண்ணிவாணி பர்க்கிடையிவை யாவையும் நவின்றான்.

என வைசிய புராணம் குளத்துடையான் மணிகொடுத்த சருக்கம் 14-ம் செய்யுள் கூறுகிறது. இவ்வற்புதத்தினாலேயே ஸ்ரீ வல்லிதேவ சேனசமேத ஸ்ரீ சிவசுப்பிரமணியக் கடவுள் வைசிய மரபினர்க்குக் குலதெய்வமாவரெனப்புலப்படும்; தவிர, முருகப் பெருமானுக்குச் **சேட்டிக்குமரன்** என வழங்குவது முண்டு.

நிற்க,தெய்வலோகத்தினின்றும் தருவித்த இரத்தினங்களை மூவேந்தர்களுக்கும் செட்டியார் வரவழைத்துக் கொடுத்த தன்மையினால், இந்த வைசிய மரபினர்களைத் **தேய்வீக குலத்தார்** என்றும், நகரத்தில் சத்திய விரதம் பூண்டு வர்த்தகத்தொழில் நடத்தி வருவார்களதனால் **நகரத்தார்** என்றும், சொல்லுவார்கள். மூவேந்தர்களும் செட்டியாரிடம் தேவ ரத்தினங்களைப் பரிசாகப் பெற்றுக்கொண்டார்களாதலால், இந்த வைசிய மாக்களுக்கு

1. கிஷ்கிந்த மலை
2. பம்பை யாறு
3. கருடக் கொடி
4. காந்தண் மலர்
5. பைந்நாக முரசம்
6. கலிமாருதப் புரவி
7. கமலகண்டிகைத்தேர்
8. உபலாயபுரி பட்டணம்
9. வைகுந்த வளநாடு
10. ஜய வாரணம்

ஆகிய தசாங்க பிருதுக்கள் மூவேந்தர்களால் சன்மானிக்கப் பட்டனவென்று சொல்லப் பட்டிருக்கிறது.

☞ இக்காலத்தில் ஜாதி மதாசார அநுஷ்டானங்கள தலைகீழாக மாறியிருக்கின்றன. உயர்ந்த ஜாதியெல்லாம் தாழ்ந்த குணம் படைத்தும், தாழ்ந்த ஜாதியெல்லாம் உயர்ந்த நடையிற் பழகியும் வருகிறார்கள். குப்பை உயர்ந்தும் கோபுரம் தாழ்ந்தும் வருவது கால இயற்கை யாதலின், நாம் அதைப்பற்றி ஆராய்ச்சிசெய்ய விரும்பவில்லை. ஆயினும், வைசியர்கள் என்போர் யாவர் என்பதை முன்னோர்களது அபிப்பிராயத்தை ஆதாரவாக்கொண்டு ஆராய்வோம்.

சேந்தன் திவாகரம், 2-வது மக்கட்பெயர்த் தொகுதியில், 32-வது சூத்திரம், செட்டிகள் பெயர்:— இம்பர், பரதர், வைசியர், கவிப்பர், எட்டியரிளங்கோக்கள், ஏர்த்தொழிலர், பசுக்காவலர், ஓப்பிநாய்கர், விணைஞர், வணிகரென்றத்தகு சிலேட்டிகள், இவை செட்டிகள் பெயரே.

சூடாமணிநிகண்டு 2-வது மக்கட்பெயர்த் தொகுதியில், 25-வது செய்யுள், செட்டிகள் பெயர்:— இளங் கோக்கள், மன்னர் பின்னர், இப்பர், எட்டியர், நாய்கர், வணிகர், ஆன்காவலர், உழவர், பரதர், விணைஞர், செட்டியர், சிரேட்டிகள் ஆக 12-பெயர்கள்.

அகராதியில்:— அயனுருவில் வந்தோர், இப்பர், எட்டியர், சிரேட்டியர், சிலேபியர், தனவைசியர், தூணிகர், தேசிகர், தோன்றிகர், நாய்கர், பரதர், வணிகர், வாணிகர், இளங்கோக்கள், செட்டியர், தருமக்கிழவர், தாளாளர், மன்னர் பின்னர் ஆக 19.

பெரியபுராணத்துள்ள சேக்கிழார் நாயனார் புராணம் 36-வது செய்யுளில், மறையவர் வர்க்கத்தாருக்கு புராணங்கள் 16;

க்ஷத்திரியருக்கு 11; வைசியருக்கு 5; சூத்திரராகிய வேளாளர்களுக்கு 13; பின்னர் இடையர், சாலியர், குயவர், தயிலவினையாளர் (செக்கார்), பரதவர் ,சான்றார், வண்ணார், சிலைமறவார், நீசர், பாணர் முதலியவர்களைப்பற்றிச் சொல்லியிருப்பதைக் கவனிக்க.

பஞ்சகாவியம் என்னும் புலவர்கள் புகழும் (1) சிந்தாமணி, (2) சிலப்பதிகாரம், (3) மணிமேகலை, (4) வளையாபதி, (5) குண்டலகேசி என்னும் நூல்களும், **வைசியராகிய செட்டி**கட்கு யது. அவற்றிற் கூறும் மரபுகளின்பேரில் **நாயகன்-வைசியன்** என்னும் **பேயரே** வந்துள்ளன.

தொல்காப்பியம் பொருளதிகாரம் மதிப்புரை, 3-வது பக்கம் 16-வது வரி, எண்ணூற்றைம்பது வருஷத்தின் முன்னருள்ள பராக்கிரம பாண்டியனும், இவனுக்கு முன்னூற்றைம்பது வருஷத்தின் முந்திய நச்சினார்க்கினியரும், ஆயிரத்திருநூறுவருஷத்தின் முன்னர் எழுதிய உரை 164-பக்கம் 13-வரி வெண்பாவில், **புகார்-வணிகர்-நகரச்சேட்டிகள்** எனவும் கூறியிருக்கிறது.

ஆனால், இக்காலத்தில் வாணியர், கோமுட்டிகள், நாட்டுக் கோட்டையார், வெள்ளாழர், கவரைகள், தேவாங்குலர், சாலியர், செம்படவர், ஒட்டர், உப்பரவர் முதலியோர் எல்லோரும் செட்டியார் என்கிறபெயரை வைத்துக்கொண்டிருந்தாலும்,மேற்சொன்ன பெயரைவைத்துப் பின்னே செட்டிகள் என்றே சொல்லுகிறார்கள் என்பதைக் கவனிக்க.

எவ்வாறாயினுமாகுக: நமது வைசிய மரபினர்கள் முன்னோர்களால் அநுக்கிரஹிக்கப்பட்ட சாஸ்திரப்படி நடப்பதுவே சிலாக்கியமாகும்.

## (3) வேளூர்-மாரி செட்டியார் சிறப்பு.

இத்தகைய பெருமை பொருந்திய வைசிய மரபிலே, பேரிசெட்டி வகுப்பிலே, அன்பே உருவாய், வேளூர் மாரி செட்டியார் என்பார் உதித்தார். பூர்வ ஜென்ம தவப்பயனால், "பக்தி செய்தால் முக்தி பெறலாம்" என்கிற திடசித்தம் கொண்ட இவர், தம் குலாசார ஒழுக்கங்களிற் சிறிதும் குறைவின்றி, நித்திய கருமானுஷ்டானங்களைச்செய்தும், கர்மயோகம்-பக்தி யோகம் - ஞானயோகம் ஆகிய இம் மூன்றையும் கிரமப்படி அநுஷ்டித்தும், சாதுசங்கங்களிற் பழகியும், நித்தியா நித்திய வஸ்து விவேகம், இகமுக்தார்த்த பலபோக விராகம், சமாதி ஷட்க சம்பத்து, முமுக்ஷுத்வம் முதலாய அரிய பெரிய விஷயங்கள் நிரம்பிய சாஸ்திரங்களை வாசித்தும், மஹான்களை அணுகி ஆத்ம விசாரணைசெய்தும், அவற்றை ஏகாந்தத்தில் சிந்தித்தும்,போது போக்குவதாயிருந்தார். அதோடு நில்லாமல், காலையில் ஸ்நானம்செய்து, நித்திய கர்மானுஷ்டானம் முடித்து, விபூதி ருத்திராக்ஷதாரியாய், சிவபூஜை செய்வார்; மாலையில் தினந்தோறும் சிவாலய தரிசனம் செய்து வருவார்;விரதங்களை அனுஷ்டிப்பார்; ஏழை எளியவர்களுக்கு ஜாதிமத பேதமின்றி, பசிநோய் தணிப்பார்; இவ்வாறு சற்கருமங்கள் செய்து கொண்டே தம்குலத்தொழிலாகிய வர்த்தகத்தையும், சத்தியம் பிறழாது நடாத்தி வருவார். தவிர, கந்தப்பெருமானது ஷடாக்ஷர மந்திரத்தைச் சதா தியானம் செய்து கொண் டிருப்பார்.

இவருக்குக் கற்பே அணிகலமாய்ப் பூண்டுள்ள ஆதிலக்ஷ்மி அம்மாள் என்னும் மனைவி யிருந்தாள். இம்மாது அடிசிற்கினியவள்; புருஷனிடத்து அன்புடையவள்; நாயகன் சொல்லுக்கு மறுமாற்றம் உரையாதவள்; இச்சதிபதிகள் இருவரும் கூடிக்கருத்தொருமித்து நடாத்தும் இல்வாழ்க்கை பெருமையுடையதாய் விளங்கி வந்தது. இக்கருத்து பற்றியே

"அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனுமுடைத்து" (திருவள்ளுவர்.) என்றார்

ஆதிலக்ஷ்மி அம்மாள், தன் புருஷனது வருவாய் மிகச்சிறிய தாயினும், குடும்பத்தைக் கவுரவமாகவும் சிக்கனவுமாகவும் நடாத்தி வந்தாள். புருஷனைப்போலவே தானும் சிவ சின்னங்கள் அணிந்து, சிவாலய தரிசனம் செய்து, சிவனடியார்களுக்கு உபசாரத்தோடு அன்னமளித்து,சிவனடிசேர வேண்டுமென்னும் அவாவோடு, சிவநாம உச்சாடனம்செய்து கொண்டே காலங் கழிப் பாராயினாள்.

## (4) ஆஷாட பூதிகளின் ஆடம்பரம்.

பிரபஞ்சத்திலே மனுஷ்ய கோடிகள், தத்தம் கர்மாநுசாரங்களின்படி, சுகதுக்காதிகளை அநுபவித்து வரினும், அவரவர்கள் படிப்படியாய் மேலானபதவியை அடைதற்பொருட்டு, கருணையங் கடலாகிய கடவுள், வேதாகம புராணாதிகளை அநுக்கிரகித்தார்; அவை,கர்ம காண்டம்-பக்தி காண்டம்-ஞானகாண்டம் என மூன்று பாகமாகப் பிரிக்கப்பட்டுள்ளன; அவற்றுள் சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்கு பதவிகளும், பிரமசரியம்-கிருகஸ்தம்-வானப்பிரஸ்தம்-சந்நியாசம் என்னும் நான்கு ஆஸ்ரமங்களும், அவற்றை அநுசரிக்கவேண்டிய விதிகளும் கூறப்பட்டுள்ளன. மனுஷ்ய கோடிகள் அவ்விதிநிஷேதங்களைக் கிரமமாக அநுசரித்து நடப்பார்களாயின்,அவர்கள் மேலான பதவியை அடைவார்களென்பது திண்ணம். முன்னோர்கள் அநுபவமும் அவ்வாறே; இதுபற்றியன்றோ,

"துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வா னென்பான் றுணை" (திருக்குறள்)

"இல்லற மல்லது நல்லற மன்று" (ஔவை)

"விரும்புஞ்சரியை முதன் மெய்ஞ்ஞான நான்கு
மரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே"

(தாயுமானவர்)

என்று பெரியோர்கள் முறையிட்டுள்ளார்கள். அறிவிற் சிறந்தோர்கள் அவ்வாக்கியங்களைப் பொன்னேபோற் போற்றி, காமக் குரோதாதிகளை ஒழித்து, மனதைப் பரிசுத்தப்படுத்தி, பெரியார்கள் முன்னிலையில் நாம் யார்? வந்தவாறு என்ன? போமாறு ஏது? என்பனவாய சந்தேகங்களைச் சங்கையறக் கேட்டுத் தெளிந்து, ஆத்ம விசாரணைசெய்து, தோற்றுன் மாத்திரையாயுள்ள இப்பிரபஞ்சம் மித்தையென உணர்ந்து, தன்னைத்தானறியுமாற்றலுடையவர்களே மனுஷ்ய கோடிகளுட் சிறந்தார் என்பது அறிவுடையோர் துணிபு. மனத்தின் கண் பேதபுத்தி அறவே யொழிந்து, பஞ்சேந்திரியங்களும் ஒரு நிலைப்பட்டு, அறிவு மயமாய் நிற்கும் வரையும்,ஜாதி மதாசார அநுட்டானங்களையும், வருணாஸ்ரம தருமங்களையும் விட்டு நீங்குதல் கூடாது. அதுகாறும் பகவத் பக்தி வயப்பட்டு நிற்றல் வேண்டும்; இது வேதாகமாதிகளின் உட்கருத்து; இவ்வுண்மை அறியாத அகோத்ர அசூத்ர அவிசார மக்கள் பலர், வேதசாஸ்திரங்களை இகழ்ந்தும், மஹான்களை நிந்தித்தும், தான்றோன்றிகளாய் மீளா நரகங்களுக்கு ஆளாகின்றார்கள். அந்தோ! பரிதாபம்!!

## (5) மாரி செட்டியார் இல்லறத்தில் பக்தி வைராக்கியம் பூண்டொழுகுதல்.

வேளூர் மாரி செட்டியார் சாதுசங்கப் பழக்கத்தினாலும், ஞான சாஸ்திர விசாரத்தினாலும், ஆத்மஞானம் பெற்றிருந்

தாலும், தன் கற்பிற்சிறந்த மனைவியோடு இல்லறம் நடாத்தி, பகவத்பக்தியைத் தவறாது நடத்திவந்தார். தான் செய்யும் வர்த்தகத்தினால் சொற்ப வருவாய் அடைந்தும், சிவ புண்யச்செயல்களை வழுவாது திடசித்தத்தோடு நடத்தி, எல்லாம் சிவன் செயலென்றே நம்பி யிருந்தார். மேலும், மாரி செட்டியார் கிருத்திகை நக்ஷத்திரந் தோறுஞ் சென்னைமா நகருக்குச்சுமார் 35-மைமயில் தூரத்துள்ள திருப்போரூர் என்று வழங்கும் யுத்தபுரிக்குச்சென்று, அங்குள்ள சரவணப் பொய்கையில் ஸ்நாநம் செய்து, கந்தப்பெருமானைத் தரிசித்து வணங்கிப் பின்னர் தான் சாப்பிடுவது வழக்கம். இந்த விரதத்தை வைராக்கியத்தோடு வெகுகாலமாக அநுஷ்டித்து வந்தார். முத்தியாலு நாய்க்கன் பூந்தோட்டத்தில் சர்வசித்தி விநாயகரைப் பிரதிஷ்டைசெய்து பூஜித்து வரும் பஞ்சானம் கந்தப்பண்டாரம் என வழங்கும் கந்தப்பா சாரியும் செட்டியாரைப் பின்பற்றித் திருப்போரூருக்குச் செல்வது வழக்கம். இவ்விருவரும் ஒருவருக்கொருவர் துணையாக, பிரியா நட்பினராய், இடி மின்னல் காற்று-மழை-பிரவாகம் முதலிய என்ன இடையூறுகள் நேர்ந்தாலும், **எல்லாம் முருகன் செயல்** என்கிற திடநம்பிக்கை கொண்டு, எதற்கும் அஞ்சாது, கால் நடையாகவே நடந்து, திருப்போரூர் சென்று, முருகவேளைத் தரிசித்துப் பின்னர்தான் சாப்பிடுவார்கள். இந்த வைராக்கியத்தை மேற்படி செட்டியாரும் ஆசாரியும் எவ்வளவோ சோதனையுடன் சாதித்து வந்தார்கள் என்றே சொல்லவேண்டும்.

## (6) மகம்மதியர்கள் கலகமும், திருப்போரூர் முருகக் கடவுளைக் கற்றின்றயினுள் மறைத்தலும்.

ஓர் காலத்தில் பிரபஞ்சத்தின்கண் பலவிதமான நோய்கள் தோன்றி ஜனங்களை வருத்தின; அதோடு பஞ்சம் பர

விற்று; அதனல் மரணமும் துன்பமும் அதிகரித்தது; இடையில் மகம்மதியர்கள் ஊர்களின்மீது படையெடுத்து, குடிகளை வருத்தியும், அவர்களது சொத்துக்களைக்கொள்ளை யடித்தும், குழந்தை குட்டிகளையும் ஸ்திரீகளையும் மானபங் கப்படுத்தித் துன்புறுத்தியும் வந்தார்கள்; இந்து தேவாலயங்களி னுட்புகுந்து, விக்கிரகங்களை உடைத்தெறிந்தார்கள்; கடவுளு க்கு மஹாராஜாக்களால் சமர்ப்பிக்கப்பட்டுள்ள நவரத்தினு பரணங்களைக் கொள்ளையடித்தார்கள்; கோபுரங்களையும் கோயில் களையும் இடித்துத் தள்ளினுர்கள்; எதிர்த்தவர்களை அடித்துத் தொந்தரவு செய்தார்கள்; இவ்வாறுய அக்கிரமங்களைச் சகிக்க லாற்றுத ஜனங்கள், சிலர் தத்தம் மனைவிமக்களை அழைத்துக் கொண்டு காட்டுக்குச் சென்று ஒளித்துக் கொண்டார்கள்; சிலர் மூங்கிற் புதர்களில் மறைந்தார்கள்; சிலர் மலைக்குகை களிற் சென்று பதுங்கினுர்கள்; சிலர் கலகமில்லாத வேற்றூர் போய்ச் சேர்ந்து குடியேறினுர்கள்.

இந்தக் கலகத்தின்போது கால மழையில்லை; அம்மை சுரம் பரவலாயிற்று; பஞ்சம் ஒரு பக்கம், வியாதி ஒருபக்கம் வருத் தத் தத்தளித்த ஜனங்கள், நாலா திக்குகளிலும் ஓடினுர்கள்; பட்டினியால் பலர் மாண்டார்கள்; இதுதான் சமயமென்று திருடர்கள் வீடுபுகுந்து சொத்துக்களை அபகரித்துச்சென்றுர் கள்; இவ்வாறு ஜனங்கள் திசை தப்பியோட, தாய் ஒருபுறம், பிள்ளை ஒருபுறம், மனைவி ஒருபுறம், புருஷன் ஒருபுறம் ஓடி தங்கள் தங்கள் உயிர் தப்பினுற் போதுமென்று, ஒருவரோ டொருவர் சந்திப்பில்லாமல் சென்று ஒளிந்தார்கள்.

இவ்விதமாகச்சிறுசிறு கிராமங்கள் அல்லோல கல்லோலப் பட்டு, ஜனங்கள் மஹாகஷ்டங்கள் அநுபவிப்பதை, திருப்போ ரூர் கோயிற் பரிபாலகராய், அக்காலத் தமர்ந்துள்ள பொன்னம்

**பலத்தம்பிரான்** அறிந்து, நமது தேவஸ்தானத்திலும் மகம்மதியர்கள் புகுந்து, துன்பஞ் செய்வார்கள் என்று அஞ்சி, முருகவேள் சந்நிதிசென்று வணங்கித்தொழுது, "ஐயனே! பன்னிருகையனே! தேவரீரது திருவிளையாடல்களைப் பிறவிப் பெருங்கடலிற் சிக்குண்டுழலும் அடியேங்கள் அறியவல்லோமல்லம்; மகம்மதியர்களது ஆர்ப்பாட்டங்கள் எங்கும் பரவுகின்றன; அநேக ஆலயங்கள் நாசமாக்கப்பட்டு வருகின்றன, ஆலயசொத்துக்கள் கொள்ளையிடப்பட்டு வருகின்றன; நமது சந்நிதானத்துக்கும் மகம்மதியர்கள் நுழைவார்களென்று அஞ்சுகிறேம்.சுவாமிகள் திருமேனியைமறைத்துவைத்தும்,தேவாலய இரத்நாபரணங்களை நிலவறையில் பத்திரப்படுத்தியும் வைக்க உத்தேசிக்கிறேம். தங்கள் திருவுளச்சம்மதம் அவ்வாறேயாகுக என உத்தரம் தரவேண்டு மென்று பன்முறை பிரார்த்தித்து அசைவற்று நின்றார்; சிறிது நேரம்பொறுத்து, அக்காலத்தில் கோயில் நிமிந்தக்காரனயிருந்த அண்ணமலையை அழைத்து,"அப்பா!நமது முருகப்பெருமான் அமர்ந்திருக்கும் கர்ப்பக்கிருகத்தை கல்திரையினல் மறைக்க: கோயில் நவரத்தினபரணங்களையும் பொன்வெள்ளி பாத்திரங்களையும் நிலவறையில் வைத்து அடக்கஞ்செய்க" எனஆக்ஞாபித்தார். நிமிந்தக்காரன் தம்பிரான் கட்டளைப்படி செய்து முடித்தான்; பின்னர் தம்பிரான் ஒடுக்கத்தில் மறைந்து; சிவயோக சாதனையிலிருந்தார்.

இதைக் கண்ட பக்தகோடிகள் மனம் வருந்தி, முருகா! இந்த துஷ்டர்களது கொடுமைக்குப் பயந்து, நீரும் மறையும்படியான காலமாயிற்ரு? என்னே! இது அதிசயம்!! இந்தக்கலகத்தில் பலாட்டியர்கள் பலர் கலகக்காரர்களோடு போர்செய்து மாண்டார்கள்; அன்னமில்லாமல் அநந்தம் பேர் இறந்தார்கள்; வியாதியாலே உருண்டவர் கணக்கில்லை; இத்தகைய காலம்

ஒன்று நேருமென்று கனவிலேனும் நினைத்தோமா! இல்லையே! அறுமுகவா! என்று பலர் கடவுளைத் தோத்திரித்து நின்றார்கள்.

இந்த சமயத்தில், மராட்டியர்கள் திருப்போரூர் வந்து, ஆலயத்தினுட்புகுந்து,சொத்துக்களைக் கொள்ளையிட்டார்கள்; வீடுகளில் நுழைந்து,பலவித அதிக்கிரமம் செய்தார்கள்; அக்காலத்தில் மூலமூர்த்தியான சுப்பிரமணியர் கல்திரையினின்றும் நீங்கிப் புற்றினிடமாகச் சென்று மறைந்தார்.

உலகமெல்லாம் இவ்வாறு கஷ்டமடைந்த பின்னர்,ஜனங்கள் பலர் கடவுளைநோக்கி, ஐயனே! முன்போல் உலகமெல்லாம் தழைத்திட அநுக்கிரகம் செய்ய வேண்டுமென்று முறையிட்டார்கள்; ஏழைபங்காளராகிய கடவுளும் மனமிரங்கி, உலகம் முன்போல் வாழவேண்டுமெனச் சங்கற்பித்தார்.

## (7) முருகப்பெருமான் மாயமாய் மறைந்தமைகண்டு பொன்னம்பலத் தம்பிரான் வருந்தி உயிர் நீத்தல்.

அவ்வாறே மகம்மதியர்களது ஆர்ப்பாட்டங்கள்நீங்கிற்று; அவர்கள் கொண்டாட்டங்களும் கொள்ளைகளும் திண்டாட்டமாய் முடிந்தன; கலகமும் குழப்பமும் அடங்கிற்று; கிராமங்களில் வன்பிணிகளும் மரணமும் ஒழிந்தன; குடிகள் தங்கள் தங்கள் ஊர்வந்து சேர்ந்து, தம்குடிவாழ்க்கையைச் சந்தோஷமாய் நடத்தி வருவாரானார்கள்; ஒடுக்கத்திலிருந்த பொன்னம்பலத்தம்பிரான் வெளிவந்து, உலகம் பட்டகஷ்டத்தையும் போரூர் ஆலயம் அழிந்ததையும் நோக்கி வருந்தி, மூலமூர்த்தியைத் தரிசிப்பதற்குக் கல்திரையை அகற்றும்படி உத்தரவு செய்தார்; சுவாமியைத் தரிசிப்பதற்குப் பக்தகோடிகள் பலர் கூடினார்கள்; கல் திரையை அகற்றியதும், முருகன் திருவுருவம் காணப்பெறவில்லை; என் செய்வார் தம்பிரான்? சிந்தை

மெலிந்தார்; ஐயனே! போரூர் முருகையனே! பன்னிரு கையனே! ஏழை அடியேங்களை விடுத்து எங்குற்றாயோ? என்று அலறி வீழ்ந்து,

"இக்கலியுகத்தி லெழுந்த என்குருவே!
யின்பமே யன்பினு ணிறைந்த
முக்கனிரசமே முதிர் சுவை யமுதே
மூதறிவே மறைப் பொருளே
சக்கரையோடு கற்கண்டேன ருசிக்குந்
தயாளுவே தமியனேன் றனக்குத்
துக்க சாகரத்தைத் தொலைத் தருள்புரிந்தாய்
தூய நீ யெங் கொளித்தனையே"

(திருப்போரூர்ச் சந்நிதி முறை.)

"அத்தனே யெனையாட்கொண்ட அறுமுகக்குருவே போரூர்
முத்தனே மூவர்போற்று முழுமுதற் பொருளே ஆதி
சத்திபாலகனே சூரன்றன்னு ரங்கிழிய விட்ட
கத்தவேலவனே கோயிற்றுறந்து நீ எங்குற்றாயோ?

என்று மெய் பதறி அழுதார். "அப்பா! அறுமுகக்கடவுளே! அடியவர்க்கு அருள் சுரக்கும் அருந்தெய்வமே! நினது அருட்சத்தி வேலாயுதமானது பெரிய பெரிய அலைகள் நிரம்பிய மஹா சமுத்திரத்தை வற்றச் செய்தது போல, மஹா சமுத்திரமாகிய அவுணக்கூட்டங்களைக் கலக்க வைத்ததும், கிரவுஞ்சகிரியை இருகூறுகப் பிளந்ததுபோல, சூரபத்மனுடைய மலை போன்ற மார்பினைப் பிளந்ததும், வேதவித்துக்களாகிய பிராம்மணர்கள் செய்யும் யாகத்தின்கண் உண்டாகும் அக்கியானது ஆகாயமட்டும் கொழுந்து விட்டெரிவது போல, இராக்ஷச ஸ்திரீகளது வயிற்றினிடமாக அக்நி எரிய ஆரம்பித்ததும், உன் அருட்சக்தியின லன்றோ? அத்தகைய மஹா வல்லமை பொருந்

திய நினது அருட்டிருவுருவம் என்ன நினைத்து,எங்கு மறைந்ததோ? அப்பாவே! ஐயாவே! ஆயிரத்தெட்டு அண்டங்களை நூற்றெட்டு யுகங்களாக அரசாண்டு, தேவாதி தேவர்களைத் தனக்கடிமையாக்கித் தான் இட்டவேலையைச் சரியாகச் செய்யாத தேவர்களைச் சிக்ஷித்து, மஹா கர்வங் கொண்டிருந்த சூரபத்மனது மார்பை ஓர்நொடியில் நின் அருட்சக்திவேலினுல் பிளந்த உனது வல்லமையை உலகெலாம் அறிந்தும், சிற்றறிவுடையேனுகிய அடியேன் ஓர்பாபி, கேவலம் சில மகம்மதியர்களது ஆர்ப்பாட்டத்துக்கஞ்சி, நினது திருமேனியைக் கல்திரையிட்டு மறைத்தேன்; என்னே என் அறியாமை! ஆறுமுகத்தையா! அரிமுதலோர்க் கரிய ஞானவிளக்கே! எங்குற்றனையோ? அப்பா! நினது அருட்டிருமுகத்தைத் தரிசியாது, இவ்வுலகில் எவ்வாறு வாழ்வேன்? போரூர் புனித வேளே!" என முகத்தி லறைந்துகொண்டு, விம்மி விம்மி அழுதார்.

"காலன் சேங்கட்கடாவினிலேறியே
　கயிறு வீசிப்பிடியா முனமேனே
வேலுஞ் சேங்கையி லேந்தி மயின்மிசை
　விரைவில் வந்து வந்தஞ்ச லேன்றருளுவாய்
ஆல முண்டகளத்த ரிடத்துறை
　யரிவை கோஞ்சுறக் கோஞ்சு பைங்கிள்ளையே
தாலம் பாலைமதுக் குடமேந்திய
　சமர மாபுரிச் சண்முக வேலனே"

(திருப்போரூர்ச் சந்நிதி முறை.)

என்று சொல்லிக்கொண்டே கீழே விழுந்து மூர்ச்சித்தார். அங்குள்ள திருக்கூட்டத்தார் தம்பிரானைத்தூக்கி நிறுத்திப் பலவித உபசாரம் செய்தும், மூர்ச்சை தெளியவில்லை. உடனே மடத்துக்குக்கொண்டுபோய்ச் சிகிச்சைகள் பல

செய்தும், ஒன்றும் பயன்படவில்லை. தம்பிரானது உயிர் உடலைவிட்டு நீங்கிக் குகப்பெருமான் திருவருளிற்கலந்தது. சிஷ்யகோடிகள் அவருக்குச் செய்யவேண்டிய அந்தியக்கிரியைகளைச் சிறப்பாக நடத்தினார்கள். அடுத்தபடி அம்பலவாணத் தம்பிரான் மடாதிபதியாகவும் கோயிற் காரியாதிபதியாகவும் நியமிக்கப்பட்டார்.

## (8) அம்பலவாணத் தம்பிரான் திருப்போரூரில் நூதன மூர்த்தியைப் பிரதிஷ்டை செய்தல்.

அம்பல வாணத்தம்பிரான் பட்டம் ஏற்றவுடனே, திருப்போரூர் கோயில் காரியங்களைக் கவனித்து வருங்காலத்தில், மூலமூர்த்தி யில்லாதிருத்தலைக் கண்டு, கோயிற் சிப்பந்திகளை விசாரிக்க, அவர்கள் "முன்னைப பட்டத்திருந்த பொன்னம்பலத்தம்பிரான் மகம்மதியரது கொள்ளைக்கும் கொடுமைக்கு மஞ்சி, மூல மூர்த்தியைக் கல்திரையிட்டு மறைத்து வைத்தார். கலகம் அடங்கியதும் கல்திரையை அகற்றிப்பார்க்க, மூல மூர்த்தி காணப்பெருது, மாயமாக மறைந்தமை நோக்கி, வருந்தி மூர்ச்சித்து உயிர் விட்டார்" என்று சொன்னதும், அதைக் கேட்டு, வேருெரு மூர்த்தியைத் தயார் செய்து, கர்ப்பக்கிருகத்தில் பிரதிஷ்டை செய்து, கும்பாபிஷேக முதலிய செய்து, கோயிற்காரியங்களை அமைதியாகவும் சிறப்பாகவும் நடத்தி வந்தார். இவ்வாறு நடத்தி வருங்காலத்தில், ஓர்நாள் இரவு, அம்பலவாணத் தம்பிரான் அயர்ந்து நித்திரை செய்யும்போது, கல்திரையில் மறைந்திருந்த சிவசுப்பிரமணியக் கடவுள், தம்பிரான் கனவிற்ருேன்றி, "குழந்தாய்! முன்னர் கல் திரையிட்டு மறைத்திருந்த யாம், இப்போது இம்மலையின் வடபாரிசத்திலுள்ள வேம்பினடியின் கீழ், புற்றினிடமாக எழுந்தருளியிருக்கின்ருேம்;நாளை எம்மை வெளியாக்குவாய்" என்று சொன்னர்.

தம்பிரான் திடுக்கிட்டெழுந்து சுற்று முற்றும் பார்த்தார்; என்ன அதிசயம் இது! என்று மயங்கினுர். சிறிது நேரம் ஒன்றுந் தோன்ருமல் செயலற்று நின்ருர்; மீண்டும் நித்திராதேவி வயப்பட்டு உறங்கினுர். இந்தத் தம்பிரான் காமப்பித்தேறி, மாதர் வலையிற் சிக்குண்டவராதலின், தான் கண்ட கனவின் உண்மையைத்தெளிய ஊக்கங்கொண்டாரில்லை. ஈதறிந்த எம்பெருமான் முருகக்கடவுள், அந்நகர வாசிகள் செவியிற் படும்படி "பக்த கோடிகளே! அம்பலவாணன் என் சொல் மதித்திலன்; ஆதலால், யாம் இனி இத்தலத்திருப்பதில்லை" என அசரீரியாக மொழிந்து, அவ்வேம்பினடியின்கீழ் முன்போலவே அமர்ந்தார். நகர மக்கள் அசரீரியின் உண்மைப் பொருளை அறியச் சக்தியற்று, ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து விழித்து மயங்கி நின்ருர்கள்.

## (9) மடாதிபதிகளின் அதிக்கிரமச் செயல்கள்.

பூர்வத்தில் நமது முன்னேர்கள் சமயாசார உண்மைகளை அபிவிருத்திசெய்து, பாமர ஜனங்களுக்கு நல்லறிவை யூட்டி, சமய உண்மைகளைக் கற்பிக்கும் பொருட்டு, மடங்களை ஸ்தாபித்து, அதில் கல்வி கேள்விகளிற் சிறந்து, சமயாசார உண்மைகளை அறிந்து, நடையுடை ஆசாரத்தில் ஒழுங்குற்று, ஈஸ்வர பக்தி-அடியார் பக்தி-குருபக்தி - அன்பு-அடக்கம்-பொறுமை-ஜீவகாருண்ய முதலிய நற்குண நற்செயல்களமைந்த பெரியார் ஒருவரை மடத்துக்கு அதிபதியாக்கி வைத்தார்கள். அம்மடத்து நிர்வாகச் செலவு, முறைப்படி நடக்கப் போதுமான பூஸ்திதிகளை மூலதனமாகச் சேர்த்துவைத்தார்கள். தவிர, அநேக சிவாலயங்களை அவர்களது ஆதீனத்தில் வைத்து, மந்திரலோபம் கிரியாலோபமின்றி நடத்திவர விட்டார்கள். அப்பெரியார், மடத்துக்கு வரும் சிஷ்யகோடிகளுக்கு சாஸ்திராப்பியாசம் செய்து

வைத்தும், மதாசார விஷயங்களைப்போதித்தும், சிஷ்ய கோடிகளைப் பக்குவப்படுத்திக் காலக்கிரமத்தில் அவரவர்களுக்குரிய தீக்ஷைகளைச் செய்வித்தும், உயர்ந்த நடையிலிருக்க அநுக்கிரஹிப்பார்கள்; இவ்வாறே பல மடங்கள் தங்கள் நடையுடை ஆசாரத்தில் கோணலின்றி நடைபெற்று வந்தன. மடத்து சிஷ்யர்களும் மடங்களைக் குறைவின்றி ரக்ஷித்து வந்தார்கள். ஆனல், தற்போதுள்ள மடாதிபதிகளின் அதிக்கிரமச் செயல்களை இங்கு விரித்துக்கூற இச்சிறு புத்தகம் இடங்கொடாமை பற்றிக்கூடிய அளவு சுருக்கிக் கூறுவோம்.

சமயாசார உண்மை, சாஸ்திர விசாரணை, சாதுசங்கப் பழக்கம், யோகாப்பியாசமுறை கற்பிக்கவேண்டிய சில மடங்கள்,தற்போது கொலை-களவு-கள்-காமம் முதலாய பஞ்சமஹா பாதகங்களுக்கு உறைவிடமாயிருக்கிறது; வித்வாம்சர்களைப் பரீக்ஷித்துத்தரவேண்டிய பரிசுகள், இப்போது மதசாந்திசெய்யும்ஸ்திரீகளை போகத்தில் பரீக்ஷித்துச்சுகம் கொடுக்கத்தக்கவர்களுக்குக் கொடுக்கப்பட்டுவருகிறது. நற்குணநற்செய்கை சிஷ்டாசாரம் விளங்கவேண்டிய மடங்கள், காமக்குரோத லோப மோக மத மாச்சரிய ஈரிஷை டம்பம் அசூயையாதி துர்க்குணங்கள் நிறைந்து விளங்குகிறது. யோக சாதனங்களுக்குக் கட்டப்பட்டுள்ள அறைகள், தற்போது போகசாதன பள்ளியறைகளாக விளங்குகின்றது; என் செயலாம் காலக்கொடுமைக்கு! சிஷ்யகோடிகளது பாதகாணிக்கைகள் துஷ்ட சிகாமணிகளுக்குப் பரிசாகக் கொடுக்கவேண்டி நேரிட்டிருக்கிறது. ஒவ்வொரு மடத்திலும் யோக சாதனத்துக்காக நிலவறை ஒன்று கட்டியிருப்பார்கள். அதில் மடாதிபதிகளாயுள்ள பெரியார், காலை மாலை ஸ்நாநபானுதிகள் செய்து,பஞ்சேந்திரியங்களை ஒருவழிப்படுத்தி, மனதை ஏகாக்ரகப்படுத்த யோகசாதனம் செய்வார்கள். இந்த ஒடுக்க அறையானது தற்போது மூடப்பெற்று,

அதன்மீது இரத்தின கம்பளம் விரித்து, லஸ்தர்-குளோப்பு-வால்ஷேட்டுகளினுலும், மதன லீலாவிநோத படங்களாலும் அலங்கரிக்கப்பெற்று, ஷ்பிரிங் கட்டில், வில்போல் அசையும் சரிகைவேலை செய்த மெத்தை தலையணை, பனாரஸ்விரிப்புடன் ஆயிரக்கணக்கான செலவுகள் புரிந்து விளங்கும் பள்ளியறையாகவும், மோகமங்கையர்கள் கூடிக்குலாவிக் கொஞ்சி விளையாடும் மதனசுகத்துக்கு இருப்பிடமாகவும் விளங்குகின்றது. சமயாபிவிருத்திக்கும் மதாபிவிருத்திக்கும் ஏற்படுத்திய திரவியங்கள், வம்பு வழக்கு வில்லங்கத்துக்கும், பரத்தையர்களுக்கும், குடிவெறி நிறைந்த துஷ்டர்களுக்கும் உபயோகப்படுகிறதாக அறிந்து, மதாபிமானிகளும் சமயாபி மானிகளும் உள்ளுரக் கனிந்து வருந்துகிறுர்கள். தவிரவும், மடாதிபதிகள் விலாப் புடைக்கத் தின்று கொழுத்துக் காமாந்தகாரத்தில் மூழ்கித் தவிப்பதையும் அறிவோம்; படாடோபமான செலவுகளுக்கு ஏராளமான திரவியங்கள் செலவு செய்வதையும் ஜனங்கள் அறிவார்கள். கொலைக்கஞ்சா மாபாதகர்களாகிய இவர்கள் பிறருக்கு எவ்வித உபதேசம் செய்வார்களோ தெரியவில்லை. இம்மடாதிபதிகளுக்குக் கீழுள்ள குட்டித்தம்பிரான்கள்செய்யும் அட்டகாசம் சொல்லவேண்டியதில்லை. அரசன் எவ்வழி அவ்வழியக்குடி என்னும் பெரியோர் வாக்குக்கியைய, மடத்திலுள்ள ஒவ்வொருவரும் இத்யாதி துர்க்குண செய்கைகளுக்கு ஆளாவார்கள் என்பதிற் சிறிதும் சந்தேகப்படவேண்டியதில்லை.

ஆனுல். இந்தத் திருப்போரூர்ச் சந்நிதானம் அவ்வளவு பெரிய மூலதனம் பொருந்தியதல்ல வாதலால், அப்பெரும் துஷ்டகாரியங்களுக்கு இடமளிக்க வசதியில்லை. ஆதியில் இந்த ஆலயம் தேவியின் வரப்பிரசாதம்பெற்ற திருப்போரூர் ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் அவர்களால் உத்தாரணம் செய்யப்

பெற்றது. அவர் முருகனிடத்து மாறாத அன்பும், குறையாத பக்தியும் பொருந்தியவர். இவர் திருப்போரூர்ச் சந்நிதி முறை என்னும் ஸ்தோத்திர நூலுக்கும் மீனாட்சியம்மைகலிவெண்பாவுக்கும் ஆசிரியர்; சீகாழி கண்ணுடைய வள்ளல் இயற்றிய ஒழிவிலொடுக்கம் என்னும் நூலுக்கு உரையாசிரியர்; திருத்துறையூர் சாந்தலிங்க சுவாமிகள் இயற்றிய கொலைமறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத வுந்தியார் இந்நான்கு நூலுக்கு முரையாசிரியர்; அநேக அற்புதச்செயல்களை நடத்தி உலக ஜனங்களைத் தன் வயப்படுத்தியவர்; திருப்போரூர் ஆலயத்துக்கு வடக்கே 2 - பர்லாங்கு தூரத்தில், கண்ணுப்பேட்டையில் சிதம்பர ஸ்வாமிகள் மடம் உண்டு; அதில் இவரது சமாதியுள்ளது; இந்த மடத்துக்கு இவருக்குப்பின் வந்த மடாதிபதிகளும், இந்த ஆதீனத்தை நடத்துவதுடன், ஆலய பரிபாலகராயும் இருப்பார்கள்; அவ்வாறே, பொன்னம்பலத் தம்பிரானுக்குப் பின்னர் வந்த அம்பலவாணத் தம்பிரான் சிறிது காமப்பித்தேறி மாதர் மையலில் அகப்பட்டாராதலின், முருகப்பெருமான் கனவினிற்கூறிய தெய்வீக வாக்கை மதித்திலன்; அக்காரணம் பற்றியே ஆதி சிதம்பர சுவாமிகளால் நிர்மாணிக்கப்பெற்ற குகப்பெருமான் இத்தலத் திருப்பதில்லை யென்று தீர்மானித்தார்.

### (10) வேலூர் மாரி செட்டியாருப், பஞ்சானம் கந்தப்பாசாரியும் குகப்பெருமான் ஆக்ஞைப்படி, போரூர் முருகனைச் சென்னைக்குக் கொண்டுவந்த அதிசயம்.

வேலூர் மாரிசெட்டியும் பஞ்சானம் கந்தப்பாசாரியும், கிருத்திகை தோறும் தவறாது திருப்போரூருக்குக் கால் நடையாகவே, என்ன இடையூறு நேர்ந்தாலும், எல்லாம் முருகன்

செயலென்கிற பக்தி வைராக்கியத்தோடு,போய்வருகிற வழக்க மென, முன்னர் சொல்லி யிருக்கிறோம். அவ்வாறு நடந்து கொண்டிருக்கும்போது, ஸ்வஸ்திஸ்ரீ விஜயார்ப்புத கலியு காதிவருஷ 4774-க்குச் சாலிவாஹன சகாப்தவருஷ 1595-க்குச் செல்லாநின்ற பிரமாதீசவருஷ மார்கழிமீ 13-ந் தேதி சுக்கிர வாரம் ரோகணி நக்ஷத்திரம் திரயோதசி திதியில், கடுமையான வெயிலில், செட்டியாரும் ஆசாரியும், கிருத்திகைக்கு முன் தினம், திருப்போரூர் சென்றார்கள். சூரிய வெப்பத்தின் கொடுமையைச் சகிக்கலாற்றாது, தம் தம் கால்களைக் கீழேவை க்க முடியாமல்,மண்சூடு கீழேவருத்தப் பரதவித்து, இருவரும் நிழல்கண்ட விடங்களில் தங்கியும், அடர்ந்த மரத்தின் அடி யில் உட்கார்ந்தும், இளைப்பாறி, பின் நடப்பார்கள்; சாலைகளில் ஒதுங்குவார்கள்; நிழலுள்ள இடங்களில் நிற்பார்கள்; இவ் வாறு வேசாரி வியர்வியர்த்து,மெல்ல மெல்ல நடந்து,நமது அப் பன் கந்தவேள் புற்றிடங் கொண்டெழுந் தருளியிருக்கும் திருப்போரூருக்குச் சமீபம், செங்கண்மா லீஸ்வரன் கோவிலு க்குத் தெற்கு. கம்மாளன் சாவடிக்கு வடக்கு, வள்ளியம்மை மஞ்சவோடைக்கு அருகாமையி லிருக்கப்பட்ட தடாகக் கரையிலுள்ள,வேப்பமரத்தடிக்கு வந்தார்கள்;அங்கு செட்டியா ருக்கும் ஆசாரிக்கும் தன்னையறியாமலே ஒருவித மனச்சாந்தி உண்டாயிற்று; அதோடு குளிர்ந்த காற்று வீசியது; அருகே மயில்களும் குயில்களும் ஆடுவதையும் பாடுவதையும் கண்டார் கள்; பக்ஷிகள் பல பெட்டைகளோடு கொஞ்சி விளையாடுவ தைப் பார்த்தார்கள்; இந்த விநோதங்களைப் பார்த்ததும், செட் டியாரும் ஆசாரியரும் சற்று மனநிம்மதியடைந்து, திருப்போ ரூருக்கு அருகே வந்து விட்டோம்; சிறிது நேரம் அடர்ந்து குளிர்ந்த இந்த வேப்பமர நிழலில் படுத்து, சற்று ஆயாசம் தீர்த்துக்கொண்டு,பின்னர்செல்வோம் என எண்ணங்கொண்டு,

கந்தப்பாசாரி தன் மேல்வேஷ்டியைக் கீழேவிரித்துப் போட்டு அதன்மீது படுத்தார்; வெயிலில் நடந்துவந்த களைப்பினால் கண்ணயர்ந்தார்; மாரி செட்டியாரும் தன் அன்பிற்கினிய தோழர் கண்ணயர்ந்ததைப் பார்த்து, தானும் சிறிதுநேரம் படுத்துப்போகலா மென்றெண்ணி, தோழர் ஆசாரியின் தொடைமீது தலையை வைத்துப் படுத்து, முருகையா! எல்லாம் உனது திருவிளையாடல்; என்ன நேர்ந்தாலும் சரி, நின்னிணையடிகள் மறவாத பேரன்பு ஒன்று மாத்திரம் அநுக்கிரகிக்க வேண்டும்; அறுமுகவனே! என்று கந்தநாம ஸ்மரணை செய்து கொண்டு படுத்தார்; உடனே கண்ணயர்ந்தார்.

அந்தச் சமயத்தில், அந்த வேம்பினடியில் புற்றிடங் கொண்டெழுந்தருளி யிருக்கும் எமது அண்ணல் திருப்போரூர் முருகப்பெருமான், சர்ப்பரூபமாக வெளித்தோன்றி, ஆசாரியின் தொடைமீது படுத்துறங்கும் மாரி செட்டியார் மார்பின் மீது ஏறித் தவழ்ந்து, உச்சி மோந்து, முகத்தோடு முகம் வைத்து முத்தமிட்டு, தேகமுழுதும் ஓடி உலாவி விளையாடி, பெருங்கருணையினால் செட்டியார் கனவினிடமாக "குழந்தாய்! யாம் திருப்போரூரில் முன்னம் எழுந்தருளியிருந்த முருகன்; கலக காலத்தில் என் அடிமை பொன்னம்பலம் கல் திரையிட்டு மறைத்தான்; தற்போதுள்ள தர்ம பரிபாலகன் அம்பலவாணனுக்குக் கனவின் மூலமாக எம்மை வெளியேற்றும்படி எச்சரித்தோம்; அவன் கவனித்தானில்லை; தற்போது இவ் வேப்ப மரத்தடியில் புற்றினிடமாக வுள்ளோம்;இனி இப்பதியிலிருக்க உத்தேசமில்லை; எம்மை நீ சென்னையம்பதிக்குக் கொடுபோய் ஸ்தாபிக்க" எனத் திருவாய்மலர்ந்தருளி மறைந்தார். கந்தப்பாசாரி கனவிலும் இந்த விஷயத்தைத் தெரிவித்தார்.

"வேல் கண்டேன் ஞேளில் வியன்சதங்கை மொய்த்திருந்த
கால் கண்டேனறு முகங்கண்டேனே-நீல்கோண்ட
மாயூரங்கண்டேன் வளமை தருபோரூரிற்
போயூரங் கண்டேன் புகுந்து"

(திருப்போரூர்ச் சந்நிதி முறை)

சிதம்பர சுவாமிகளின் அருள் வாக்கை நினைத்து, செட்டியார் திடுக்குற்று விழித்துச் சுற்றுமுற்றும் பார்த்தார்; தான் கண்டது கனவோ அல்லது நினைவோ என்று சிந்தித்தார்; முருகையனைத் தொழுது வணங்கினர்; என்பெலாம் நெக்குடைய உரோமஞ்சிலிர்ப்ப, உடலிளக, மனது அழலின் மெழுகாய் உருக, இருவிழிகளில் நீர் ததும்ப, அன்பினுல் மூர்ச்சித்து, இருகரங்களையும் சிரமேற்குவித்து, ஐயனே! முருகையனே! ஆறுமுகப்பெருங் கருணைக்கடலே! என் அன்பே! அன்பான அறிவே! அறிவினூறும் ஆநந்த வெள்ளமே! நின் அன்பரெல்லாம் அரிய திருத்தொண்டுசெய்து, காய் இலை சருகுகளைத்தின்று, மலைக்குகைகளில் வசித்தும், அனல் வெயிலாதிகளால் வருந்தியும், கடுந்தவங்கள் செய்தும், நின்பாதமலர் தரிசனத்தைக்காணுது இன்னும் வருந்துகிறுர்கள்; பொய்யினேன், புலையினேன், கொலையினேன், புன்மையேன், கல்லாத தன்மையேன், பொருளலாப் பொருளை நாடும் வெய்யனேன், வெகுளியேன், வெறியனேன், சிறியனேன், வினையினேன், பொய்திகழுலகடையிற் பொருந்திவாழும் அடியேனையும் ஒருபொருட்டாக மதித்து, கருணையினுல் என் கனவிற்ருேன்றித் தரிசனந்தருளும் நின்மஹிமை என்னே! நின்பெருமை என்னே! ஐயனே! என்பாக்கியமே பாக்கியம்" எனப் பலவாறு துதித்து, வேம்பினடியை மும்முறை வலம்வந்து நமஸ்கரித்து, தாயைக் காணுத சேய்போ லலறி, கனவிற்கண்ட திருவுருவம் நனவிற் ருேன்ருமை பற்றி வருந்தி, என்னை அடிமை கொண்ட

அப்பனே! சென்னைபுரிக் கெழுந்தருளத் திருவுளச்சம்மத மாயின், எம்மரபினோர் வாழும் கோட்டத்தினடுவில் எழுந் தருளச்செய்து, திருக்கோயிலமைத்து, தினமும் மும்முறை பூஜித்து வணங்குவோம்; அப்பனே! திருந்துநின் சீரடித்தா மரைக்கன்பு செயப் பொருந்து நாள், எம்மனோர்க்கு நல்ல புண்ணியம் செய்யும் நாள்; பொருந்தாதிருந்த நாள் தீவினை இழைத்த நாள்; ஐயனே! அருந்தவா! உனைப்பொருந்து நாள் எந்த நாளென்று அடிமைக்குரித்து; என் ஸ்தூலக்கண் காண எழுந்தருளல் வேண்டும்'' என்று வணங்கி நின்றார். கருணையே யுருவாய கந்தப்பெருமான் மீண்டும் சர்ப்ப உருவமாகவே புற்றினின்றும் வெளிவந்து, மாரிசெட்டியார் ஸ்தூலக்கண் காண விளையாடி மறைந்தார்.

கந்தப்பாசாரி அயர்ந்த நித்திரையிற் கண்டகனவின் அதி சயத்தை நோக்கித் திடுக்கிட்டு விழித்து, அருகே மெய்ம்மறந்து நிற்கும் மாரி செட்டியாரை நோக்கி, தான் கண்ட கனவினைத் தெரிவித்தார்; செட்டியாரும் தான் கனவினிற்கண்ட காக்ஷி யினையும், நனவினிற்கண்ட காக்ஷியினையும் தெரிவித்தார்; இதை க்கேட்டதும், கந்தப்பாசாரிக்கு ஒருபக்கம் சந்தோஷமும், ஒரு பக்கம் தன் கர்மத்தையும் நோக்கி வருந்தி, ஆ! ஆ! முருகப் பெருமான் தந்த தரிசனத்தை நான் பாவி கண்டுகளிக்கப் பாக் கியம் செய்யவில்லையே! "அவரவர் வினையின் அவரவர் வருவார் அவரவர் வினையளவுக்கே அவரவர் போகம்'' என்கிற முதி யோர் வாக்கு உண்மையாய் விட்டதே! இது கடவுளின் வஞ்ச னையா! அல்ல! அல்ல!! கந்தன் சர்வத்ராளுக்கும் சொந்தம்; நமது புண்ணியப்பேறு அவ்வளவுதான்; பானையிலிருந்தாலல்ல வோ அகப்பையில் வரும்; அதைப்பற்றிச் சிந்திப்பதும் மன தை வருத்திக் கொள்வதும் வீணாகும்; அப்பா! முருகையா! சென்னைமா நகருக்கு வருவதாயின், நாங்கள் இருவரும் கொடு

போய், எமது நந்தவனத்தில், நினது மூத்தவராகிய விநாயகப் பெருமானிடம் சேர்ப்பிப்போம்; ஆலயம் அமைப்போம்; முக் கால பூஜைக்கு வழிதேடுவோம்;உமக்கு வேண்டிய உற்சவாதி களை நடத்துவோம்; எல்லாம் உமது திருவருளுக்கப்படியே சித்திக்கும்;'' என்று வேம்பினடியை மும்முறை வலம்வந்து இருகரங் குவித்து,

''பேராழி உலகுதனி லெண்ணிலாக் காலமேழ்
பிறவியி லுழன்று வாடிப்
பேசரிய இம்மானிடத்தினி லுதித்துநற்
பேறு தரு மார்க்கத்தையே
ஆராய்ந்து ணர்ந்து நின் பொன்னடி தொழாமல் மண்
ணாசை பெண்ணாசையும் பொன்
ணாசையிற் சிக்கி வளியிற்பட்ட பஞ்சென
அலைந்து வீணாள் கழித்தேன்
காராரு மேனிக்கமலக் கண்ணன் மருகனே
காக்ஷிதந் தினியாகிலும்
கழலிணைக்கன் பனுக்கக் கருணைபுரியின்
கன்மனத் தோடநுதினம்
போராடல் தீர்ந்துன்னடியார்க்கு ளொருவனாய்ப்
போற்றிப் புகழ்ந்து வாழ்வேன்
புகல்லரவன் தந்த ஜகநொடியில் வலம்வந்த
புகழணியும் வேற்கந்தனே.''

என்று தோத்திரித்து, சரவணபவனே!! சையொளிபவனே! திரிபுரபவனே! திகழொளிபவனே! சண்முகத்தரசே! சடாக்ஷரப் பொருளே! சொல்லாலும் பொருளாலும் அளவையாலும் தொ டரவொண்ணு நின்பாத தரிசனம்வேண்டி, நின் அன்பரெல் லாம், அளவிலாக்காலம், அருந்தவம்புரிந்து, மேலானபதவியை

அடைந்தார்கள்; அடியேன் ஒரு பாபி; மண்ணாசையிற் புரண்டு, பெண்ணாசையிற் சிக்கி, பொன்னாசையிற் சுழன்று, மாயையென்னும் ஜெகஜாலக்கள்ளி வாய்ப்பட்டு, சுழற்காற்றிற்பட்ட பஞ்சுபோல் பரதவிக்கின்றேன்; ஐயனே! நின் திருவருணோக்கம் சிறிது அடியேன்மீது பட்டு ரக்ஷித்தால், என்பாபகர்மங்கள் யாவும் பஞ்சுப்பொதியில் தீப்பொறி பட்டு நாசம் அடைவது போல் நீங்கி, கிருதார்த்தனாவேன்; நின் பொன்னடி போற்றி நின் அடியவர்க்கு ளொருவனாய் வாழ்வேன்; முருகா! என மெய்ம்மறந்து ஸ்தோத்திரித்து வணங்கினான் கந்தப்பாசாரி.

ஆசாரியின்விண்ணப்பத்தைக்கேட்ட முருகப்பெருமான், மீண்டும் முன்போன்ற திரு உருவத்தை எடுத்து, புற்றினின்றும் வெளிவந்து தரிசனந் தந்தார். செட்டியாரும் ஆசாரியாரும் பெருமானது அருட்டிறத்துக்கு மகிழ்ந்து, அத்திருவுருவத்தைத் தரிசித்துப்புகழ்ந்து, பாடியும் ஆடியும், தோத்திரித்தும் "அண்ணலே! நாங்கள் வெகுகாலமாக அநுஷ்டித்து வந்த கிருத்திகை விரதத்தை, திருப்போரூர் சென்று முடித்துக்கொண்டு திரும்புகாலையில், தேவரீர் திருவுளச்சம்மதப்படி நினது திருஉருவத்தை சென்னையம்பதிக்குக் கொண்டுபோகின்றோம்" என்று விண்ணப்பித்து, திருவுருவம் தோன்றிய புற்றின்கண், அடையாளத்துக்காகச் சில மெல்லிய தழைகளிட்டு மூடிமறைத்து, திருப்போரூர்ச்சென்று, சரவணப்பொய்கையில் நீராடி, ஆலயம்சென்று வள்ளிதேவ சேனாதிபதியோடு வீற்றிருக்கும் கந்தவேளைத்தரிசித்து, ஆலயத்தை மும்முறை வலம் வந்து பணிந்து தொழுது, அந்தணர் வீட்டில் அமுதருந்தி, சற்று இளைப்பாறி, அன்று மாலை மீண்டும் ஆலயம் சென்று முருகனைத் தரிசித்து, இரவு பச்சைமயிலின்மீது உச்சிதமாக உலாவரும் பவனிக்காக்ஷியைக்கண்டு களித்து, மனங்குளிர்ந்து, நல்ல நிலவுகாலமாகையினால் உடனே புறப்பட்டு, வேம்பேடி

யின் கீழுள்ள புற்றினிடமாக வந்து சேர்ந்தார்கள். அப்போது இரவுமணி பன்னிரண்டு.

இவ்வடியவர்கள், அறுமுகவன் அருட்கிருபையால், அரவின்புற்று என்கிற அச்சமொழிந்து, தாங்களிட்டுப்போன தழையை நீக்கினர்கள். அருட்டிருமேனியைக்கண்டு மகிழ்ந்து,

"கருத்தே புகுந்து கதி காட்டுங்
கண்ணேவருக! மெய்ஞ்ஞானக்
கரும்பே வருக! கருணை பொழி
காரேவருக! வானந்தப்
பெருக்கே வருக! யாங்கள் பெறும்
பேறே வருக! மறைசொல் கிளிப்
பிள்ளாய் வருக! பிறங்கு தெய்வப்
பெருமாள்வருக! குறமடந்தை
தருக்கே வருக! மிடியகற்றுந்
தருவே வருக! மன்பதைக்கோர்
தஞ்சே வருக! வெம்மை யளிக்குந்
தாயே வருக! பவப்பிணிக்கு
மருந்தே வருக! சமரபுரி
வாழ்வேவருக! வருகவே
மறையின் சிர மெய்ப் பொருளான
வள்ளல்வருக! வருகவே"

(திருப்போரூர்ச் சந்நிதி முறை)

என்று துதித்து, தம்மிரு கரங்களினுலும் எடுப்பாராயினர். அவ்வருட்டிருமேனி சிறிய உருவினதாய்த் தோன்றினுலும், தாங்கமுடியாதபெரும் பாரமாயிருப்பதைக்கண்டு அஞ்சி,பெருமானே!ஏழைகளிடம் சோதனை எதற்கு?தேவ தேவோத்தமனே! தேவரீர் அருண்மஹிமையினை முப்பத்து முக்கோடி தேவர்க

ளும் நாற்பத்தெண்ணுயிரம் ரிஷிக்கூட்டமும், பிர்ம்ம விஷ்ணு உருத்திராதியர்களும் இன்னும் அறியமுடியாது ஏங்கி விழிக்கின்றார்கள். சிருட்டித்தொழிலுக்குத் தான்கர்த்தா வென்று அகங்கரித்த பிரமன் வேதத்திற்குத் தான் அதிகாரியென்று இறுமாந்து, பிரணவப்பொருளை அறியாது மிரள மிரள விழித்து நின்ற அக்காலத்தில், அப்பிரமனைச் சிறையிலிட்டுச், சிருட்டித் தொழிலை நடாத்திய தேவரீரை பேதைகளாகிய நாங்கள் சுமக்க வசமோ? அண்ணலே! அடியேங்கள் அறிவிற் சிறியவர்கள்; பலத்திற்குறைந்தவர்கள்; தேவரீர் திருமேனியை பொழுதுவிடியு முன்சென்னை புரிக்குக் கொண்டுபேய்ச் சேர்க்க ஆக்ஞாபித்திருக்கிறீர்கள்; சுமக்க முடியாத பெரும்பாரமாக எங்களுக்குத் தோற்றுகிறீர்கள்; நாங்கள் என்ன செய்வோம்? பெருமானே! சிறுகுழவியைப்போல் திருவுருவந்தாங்கி நிற்கப் பிரார்த்திக்கின்றோம்'' எனப் பன்முறை தோத்திரித்தார்கள். அடியார்க்கெளியனுகிய முருகன், "பக்தர்காள்! உமது அபீஷ்டப்படியாவோம்; என்னைச்சுமந்து கடுக நடந்து விடியுமுன் சென்னை புரி அடைவீர்கள்'' என அசரீரிமூலம் உத்திரவாயிற்று.''

"முளைத்தவரை முனையிடத்தின் முழுத்தவரை
மகிழ்ந்தவரை முருகன் வேலாற்
றுளைத்தவரை யெனவெனது பழவினையை யலைத்தவரைச்
சுடர்க்குன்றாகக்
கிளைத்தவரை வளைத்தவரை யொருசிறுவன் கிளையோடு
கிளரச் சென்னி
வளைத்தவரை வணிகனுக்கு வழித்துணையாய்
நடந்தவரை வழுத்துவோமே.''

(திருவிரிஞ்சைப் புராணம்.)

இருபக்தர்களும் சந்தோஷித்துப் புற்றினிடமாக அமர்ந்துள்ள கந்தவேளை, பக்தி விஸ்வாஸத்தோடு, மாரிசெட்டியார் தன்னிருகரங்களால் எடுத்து, மார்போடணைத்து, சிரமேற்றூங்கி, உள்ளங்குளிர உடல்பூரிக்க மனமுவந்து, முருகையனே! பன்னிருகையனே! பாவலர்போற்றும் பரமகருணாநிதி! சிவபெருமான் மடியினிற்றவழ்ந்து பார்வதியார் கொஞ்சி முத்தாடும் உமது திருமேனி, தொண்டர்பணிசெய்தறியா அடிமையின் திருக்கரத்திடமாகத்தாவி வந்தது என்னே அதிசயம்! தொண்டர்களைக் கைகுவித்து வணங்காத பாவியேன் சிரசினில் தாங்கள் அமர்ந்தது, அப்பனே! என்னபாக்கியம்! நின் கருணையை என்னென்று எடுத்துரைக்க வல்லேன்!" என்று பலவாறு துதித்து, மெய்யன்பர் கந்தப்பாசாரியாரோடு, முருகன் திருவடியைச் சிந்தித்துக்கொண்டே, வேம்பினடியை விட்டுப்புறப்பட்டு, திருமால் பிரதிஷ்டைசெய்து பூஜித்து வரம் பெற்ற **சேங்கண்மாலீச்சுரம்** என்னும் கிராமத்தை அடைந்து, அங்கு திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் செங்கண்மாலீச்சுரனைத்தொழுது வணங்கி, அதை விட்டுப் புறப்பட்டு, இடையிடையேயுள்ள சிறுசிறு கிராமங்களையுங் கடந்து, யக்யம் என்னும் ஸ்தலத்தை அடைந்தார்கள். அப்போது நடு இரவு மணிஇரண்டு. (யக்யம் என்பது ஓர் காலத்தில் பிரமன் அரம்பாஸ்திரீயினிடம் மோகங்கொண்டு, அதனாலாய தோஷத்தை நிவாரணம் செய்தற்பொருட்டு யாகம்செய்தஇடம் என்பது ஆன்றோரது துணிபு.)

☞ யக்யம் என்கிற இடம் கழி அல்லது கால்வாய் என்று சொல்வார்கள். இது வடதிசையிலிருந்து தெற்கில் புதுவைமாநகர் வரையும் ஓடும் நீர்க்கால்; இதில் வர்த்தகர்கள் படகுகள் மூலமாகச் சரக்குகளைப் போக்கு வரவு செய்கிற வழக்கம்; இது வெகுகாலத்தியது; இதை இக்கால அரசாங்கத்தார் பக்

கிங்ஹாம் (Buckingham Canal) கால்வாய் என்று சொல்வார்கள். இந்த கழிக்கும் சமுத்திரத்துக்கும் சம்பந்தமுள்ள தாகையால், யக்யம் என்கிற இடம் முகத்துவார மென்பதுண்டு; இது வெகுஆழமுள்ள இடமாதலால், இந்த கரைக்கும் அந்த கரைக்கும் ஜனங்கள் சிறுசிறு படகுகள் மூலமாகப் போக்கு வரவு செய்வார்கள். இராக்காலங்களில் ஜல ஏற்றம் அதிக மாதலின், அபாயமுண்டாகு மென்பதறிந்து, விளக்கேற்றும் சமய முதல்போது விடிகிறவரை படகுகள் விடப்படுகிறதில்லை.

## (11) வேளூர் மாரி செட்டியார் யக்யத்தைத் தாண்டுதல்.

நமது கந்தவேளின் திருவுருவத்தைக்கொண்டுவந்த மெய்யடியார்கள், நடுஇரவு சுமார் 2-மணி வேளையில், இந்தயக்யம் என்கிற இடத்தைச் சேர்ந்தார்கள் என்று சொன்னோம். இந்த அகால வேளையில் படகோட்டிகள் யாவரும் தத்தம் இல்லம் சென்று, துயில்கொள்ளு நேரம். அதனால் படகோட்டிகளில்லாமைகண்டு,இரு பக்தர்களாகிய செட்டியாரும் ஆசாரியரும், பிரவாகத்திலிறங்கி, இக்கரை கடந்து அக்கரைசெல்ல மனம் துணியாமல் வருந்தி, ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து, "அந்தோ! இதற்கென்ன செய்வோம்? பொழுது விடியுமுன் சென்னைபுரிசேரவேண்டுமென்பது திருவருளாக்கினையாயிற்றே! இந்நேரத்தில் இந்த இடத்தில் ஜலப்பிரவாகம் அதிகமாயிருக்குமே! ஜலத்திலிறங்க மனம் துணியவில்லையே! போரூர் ஐயாவே!" என்று ஏங்கி நிற்கும் வேளையில்,கந்தப்பெருமான் பெருங் கருணையோடு "குழந்தைகளே! யாதொன்றுக்கும் அஞ்சற்க! எம்மை நினைத்து இந்தப் பிரவாகத்தில் இறங்குங்கள்; துன்பமின்றி அக்கரை சேர்வீர்கள்" என அசரீரி மூலம் தெரிவித்தார். இதைக் கேட்டதும், வேளூர் மாரிசெட்டியார் ஓர்பால்

அச்சமும் பயமும், மற்றோர்பால் ஆச்சரியமும் சந்தோஷமும் அடைந்து, முருகவேள் திருவுருவத்தைத்தன் மேல் உத்தரீயத்தில் பந்தோபஸ்தாய் இறுகக்கட்டி, தன் அருமைத்தோழர் கந்தப்பாசாரியின் கரங்களைத்தழுவிப்பிடித்து, இருவரும் முருகா! முருகா!! என உச்சரித்துக்கொண்டு, அந்த ஜலப்பிரவாகத்திலிறங்கினார்கள். அவ்வளவுதான் தாமதம்; அக்கரை வந்திருக்கக்கண்டு ஆச்சரியமுற்றார்கள்; முருகையா! எல்லாம் நினது திருவிளையாடலென்று மகிழ்ந்தார்கள். அங்கிருந்து புறப்பட்டு கடுக நடந்து, மூட்டைக்காரன் சத்திரம் வந்தார்கள். அங்கிருந்து திருவான்மியூரை அடைந்து, மருந்தீசரைத்தொழுது, அங்கு சிறிது இளைப்பாறி, அங்கிருந்து சுக்கிரன் உதயமாகு முன்னர், திருஞானசம்பந்த சுவாமிகளால் அங்கங்களைப் பெண்ணாக்கிய மயிலைமாநகரை அணுகி, அங்குள்ள தடாகத்தினருகேயுள்ள தென்னஞ்சோலையில்தங்கி, அன்றிரவெல்லாம் நித்திரையில்லாமல் வழிநடந்த பிரயாசத்தினால் சிறிதுமயங்கி, நிலைதவறி நிலமிசைப்படுத்தார்கள். மாரிசெட்டியார் கந்தன் திருவுருவத்தைத் தன் உத்தரீயத்தினால் நன்றாக மறைத்து, தனது மார்பினிடமாக அணைத்துக்கட்டி, தன்னிரு கரங்களும் அவ்வுருவத்தைத்தழுவிய வண்ணம் நித்திரை புரிந்தார். அவரது பக்கத்தே கந்தப்பாசாரியும் படுத்துறங்கினார்.

## (12) திருமயிலைமா நகரில் முருகப்பெருமான் செட்டியாரது கனவிற்றோன்றி பிரம்பால் தீண்டியது.

அந்த வேளையில் கந்தப்பெருமான் பிராமண உருவந் தரித்து சடைமுடியோடு, காதிற்குண்டலம் தவழ, நெற்றியில் விபூதியும் கழுத்தில் உருத்திராக்கமுமணிந்து, மார்பினிடமாக முப்புரிநூல் தரித்து, அரையிற்பட்டு பீதாம்பரம் உடுத்தி,

தோளில் உத்திரீயம் துலங்க, பொற்பிரம்பேந்திய கரத்தின ராய், அயர்ந்து நித்திரைசெய்யும் அடியவரிருவர் கனவிற் றேன்றி, பொற்பிரம்பால்அவர்களைத்தீண்டி, "குழந்தைகளே! பொழுது விடியுநேரம் சமீபித்திருக்கிறது; விடியு முன்னர் சென்னையம்பதி சேருவீர்களாக" என உரைத்தார். செட்டியாரும் ஆசாரியரும் திடுக்கிட்டெழுந்து, நாற்புறமும் சுற்றிப் பார்க்க, ஒருவரையும்காணது திகைத்து, எல்லாம் முருகன் திருவருளென்றேர்ந்து,

"கனவிலே கண்ட காட்சிகள் யாவுமக்
கனவிற் பொய்யெனக் கண்டுதனைக் கண்டோன்
பினையுமந் தக்கனுவினை மெய்யெனப்
பேணு மாறு மயங்கினேன் பேதையே
னனையுந் தாதையு மாரிய னும் மெனை
யாண்ட தெய்வமு நீ யென நம்பினேன்
றனைவிடே னுன்றன் சித்தமென் பாக்கியஞ்
சமரமாபுரிச் சண்முக வேலனே."

(திருப்போரூர்ச் சந்நிதி முறை)

எனத்துதித்து, அங்குள்ள புஷ்கரணியில் காலைக்கடன் முடித்து, ஸ்நானம்செய்து, விபூதி அணிந்து, நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்து, மயிலையம்பதியில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிராநின்ற கபாலீஸ்வரரையும் கற்பகத்தம்பாளையும் வணங்கி, அங்கிருந்து வேகமாக நடந்து, சென்னைமாநகர் வந்து சேர்ந்தார்கள்.

## (13) திருப்போரூர் முருகன் சென்னை மாநகர் வந்து அமர்தல்.

தொண்டை நன்னாட்டினில் எல்லாவளங்களு மொருங்கே அமையைப்பெற்றது சென்னைமா நகரம். அந்நகரில் பெத்தி

நாய்க்கனது காவலுக்குட்பட்ட பெத்துநாய்க்கன் பேட்டையில், இராசப்ப செட்டி வீதியில், முத்துநாய்க்கனுக்குச் சொந்தமான பூங்காவனத்தினில், பஞ்சானம் கந்தப்பாசாரி என்னும் பக்தசிரோன்மணியால் பிரதிஷ்டைசெய்யப்பெற்ற சர்வசத்தி விநாயகர் ஆலயத்தில்,




ஸ்ரீ கந்தப்பெருமானுர் கோயில் என்னும்

ஸ்ரீ முத்துக்குமாரஸ்வாமியார் மூலஸ்தானம்

"அருவமு முருவுமாகி யநாதியாய்ப் பலவா யொன்றாய்ப்
பிரமமாய் நின்றசோதிப் பிழம்பதோர் மேனியாகக்
கருணைகூர் முகங்களாறுங் கரங்கள் பன்னிரண்டுங்கொண்டே
யொருதிரு முருகன் வந்தாங் குதித்தன னுலகமுய்ய"

"ஏவர்தம் பாலுமின்றி யெல்லைதீ ரமலற்குள்ள
மூவிரு குணனுஞ் சேய்க்கு முகங்களாய் வந்ததென்னப்
பூவியல் சரவணத்தண் பொய்கையில் வைகுமையன்
ஆவிக ளருளு மாற்ரு வறுமுகங் கொண்டானன்றே."

"மறைகளின் முடிவால் வாக்கான் மனத்தினு லளக்கொணமல்
நிறைவுடன் யாண்டுமாகி நின்றிடு நிமலமூர்த்தி
அறுமுக வுருவாய்த் தோன்றி யருளொடு சரவணத்தின்
வெறிகமழ் கமலப் போதின் வீற்றிருந்தருளினனே."

(கந்தப்புராணம்)

எனக் கந்தப்புராணம் கூறியபடி, போரூரிலிருந்து கொண்டுவந்த கந்தப்பெருமான் திருவுருவத்தை அமர்த்தி, கற்பூர ஆராதனைசெய்து,

"முருகா வென வுனை யோதுந் தவத்தினர் மூவுலகி
லருகாத செல்வ மடைவார் வியாதி யடைந்து நையா
ரொருகாலமுந் துன்ப மெய்தார் பரகதி யுற்றிடுவார்
பொருகாலனுடு புகார் சமராபுரிப் புண்ணியனே"

(திருப்போரூர்ச் சந்நிதி முறை)

அப்பனே! ஆறுமுகத்தையனே! பன்னிருகையனே! போரூர் முருகையனே! நின் திருவருணோக்கப்படி எல்லாம் நன்மை யாகவே முடிந்தது; உனது தமயனுர் விநாயகப்பெருமான்

ஆதரவில் இங்கு வீற்றருள்வீர். இனி, மேல் நடக்கவேண்டியது திருவருட்சித்தம் அடியேங்கள் பாக்கியமாகும் என்று தொழுதுவணங்கி செட்டியாரும் ஆசாரியரும் தத்தம் இல்லத்துக்குச்சென்றார்கள்.(☞ முருகன் திருவுருவம் சென்னைவந்து சேர்ந்த தினம்:—ஸ்வஸ்திஸ்ரீ விஜயார்ப்புத கலியுகாதிவூ 4774-க்குச் சாலிவாஹன சகாப்தம் 1595-க்குச் செல்லாநின்ற பிரமாதீசவூ மார்கழிமாதம் 16-ந்தேதி சோமவாரம், திருவாதிரை நக்ஷத்திரம், தசமி திதி யாகும்.) இந்த சுபதின முதல் சென்னைமாநகரம் அஷ்டயிஸ்வரிய சம்பத்தோடு விளங்குகின்றது.

தத்தம் இல்லம் சென்ற மாரிசெட்டியாரும் கந்தப்பா சாரியும், ஜென்ம தரித்திரன் பெரும்புதையலைக் கண்டாற்போல் குதூகலமடைந்து, கற்புக்கரசிகளாகிய தம்மனைக்கிழத்திகளோடு, தாங்கள் கிருத்திகைக்குப் போரூருக்குச்சென்றது முதல், அங்கு நடந்த அற்புத அதிசயங்களையும், கந்தன் திருவுருவத்தைக் கொண்டுவந்த ஆச்சரியத்தையும், சாங்கோபாங்கமாகச் சொல்ல ஆரம்பித்தார்கள். இந்த விருத்தாந்தத்தை அக்கம்பக்கமுள்ள வைசிய மக்களும் ஆசாரிய மக்களும் கேட்டு பெரும் வியப்பு கொண்டு, தத்தம் மனைவிமக்களோடு சர்வசித்தி விநாயக ராலயஞ் சென்று, அங்கு அற்புதக் கோலமாய் எழுந்தருளியிராநின்ற கந்தப்பெருமான் திருவுருவத்தைத் தரிசித்து வணங்கிப் பேராநந்தம் அடைந்தார்கள். அன்றுமுதல் சென்னையம்பதியிலுள்ளார் யாவரும், தினசரி காலை மாலைகளில் கூட்டம் கூட்டமாகச்சென்று, சர்வசித்தி விநாயகருக்கும், கந்தப்பெருமானுக்கும் ஆராதனைகள்செய்து வரத்தலைப்பட்டார்கள். இச்சிறுஆலயம் தெய்வ சபையாய் விளங்கிற்றென்று சொல்வது மிகையாகாது.

(14) சென்னைமா நகரத்தில் முருகப்பெருமானை
பிரதிஷ்டை செய்வதற்கு வக்குவ மரபினர்
வணிக வைசியகுல ஆயிர கோத்திரத்
தவ பெரியார்கள், தம்முள் பதினெண்
வகுப்பிற்கு எஜமானராய் விளங்கும்
உயர் திருவாளர்கள்:—தம்பு செட்
டியார், இலிங்கி செட்டியார் பரம்
பரையாரிடம் விண்ணப்பித்
தல். வெகு ஜனக்கூட்டம்
ஆமோதித்தல்.

அக்காலத்தில் உலகஅநுபவமுதிர்ச்சியும், தத்தம் வருணாசிரம ஒழுக்கங்களிற் சிறிதும் மாறுததன்மையும் வாய்ந்த வயது முதிர்ந்த வைசியமரபினர்கள், தம்மரபினர்கள் பலரை ஒன்று கூட்டி, "அன்பர்காள்! இச்சமயத்தில் பெரிய விஷயம் ஒன்று ஆலோசித்து முடிவு செய்யவேண்டியகாலம் நேர்ந்திருக்கிறது; அதை நாம் யாவரும் தீர்க்கமாக ஆலோசித்து நடத்தவேண்டியது நம்மனோர் கடமையாகும். நாம் யாவரும் அன்பு, அடக்கம், பொறுமை, காருண்யம், ஈஸ்வரபக்தி, அடியார்பக்தி, குருபக்தி, சாந்தம், சமத்துவம், சத்தியம் முதலிய நற்குண நற்செயல்களிற் கீர்த்தி பெற்றவர்கள் என்பது ஆன்றோர்களது அபிப்பிராயம். அத்தகைய நாம் வாழும் இச்சென்னைமாநகரில் நம்குலதெய்வமாகிய ஸ்ரீ முத்துக்குமாரசாமி ஆலயம் ஒன்று நிர்மாணித்து, அதில் அப்பெருமானது திருவுருவமொன்றமைத்து, தினசரி வழிபடவேண்டு மென்னும் அவா, நமக்கு வெகுகாலமாக உண்டு என்பதும் யாவரும் அறிந்த விஷயம். இப்போது நம் எண்ணம் நிறைவேறுங்காலம் நேர்ந்திருக்கிறதைப்பற்றி நாம் யாவரும் சந்தோஷமடைய வேண்டும். புண்

ணியமே ஒருருக்கொண்டாற்போன்ற நமது வேளூர் மாரி செட்டியாரும், பஞ்சானம் கந்தப்பாசாரியரும் திருப்போரூரி லிருந்து கந்தப்பெருமான் திருவுருவமொன்றைத் தெய்வீக மாகக் கொணர்ந்து, முத்தியாலு நாய்க்கன் பூஞ்சோலையிற் கொண்டுவந்து சேர்த்திருக்கிறார்கள். அந்தசிலாவிக்கிரகம் வந்த நேரம் தொடங்கி, இச்சென்னையம்பதியானது தெய்வப்பதியாக விளங்குவதோடு, நம்மை யறியாமலே நமக்கோர்வித சந்தோஷம் உண்டாகிறது. இப்போது நாம் யாவரும் ஒரு மனத்தினராய், வேளூர் மாரிசெட்டியாரது அநுமதிபெற்று, கந்தப்பெருமானு க்கு ஆலயம் ஒன்று அமைத்து, நித்திய நைமித்திகபூஜை குறை வின்றி நடத்த, தக்கவாறு ஏற்பாடு செய்தல் வேண்டும். நம்மர பினர் யாவரும் சத்தியம் தவறாதவர்களென்பது வாஸ்தவம். ஆயினும், காலமாறுபாட்டினால் நம்மனோர் மனமும் ஓர் கால் மாறுதல் அடையுமென்பது உலக வியற்கை; மனம் மாறுதல் டையும்போது, அசூயையாதிகள் தோன்றும்; அதனால் தெய்வ வழிபாட்டுக்கு லோப முண்டாகும். இவற்றை யெல்லாம் முன்ன தாக யோசித்து, நம் குலதெய்வமாகிய ஸ்ரீ முத்துக்குமரனுக்கு எக்காலத்தும்குறைவில்லாமல் ஆராதனை நடந்து வரவேண்டும். ஆதலால், நம் முன்னோர் அநுஷ்டித்துவந்த முறைப்படி இவ்வி ஷயத்தை நம்முள் 18-வகுப்பிற்கு எஜமானராய் விளங்கும் உயர் திருவாளர்கள்:—தம்புசெட்டியார், இலிங்கசெட்டி யார் பரம்பரையாரிடம் விண்ணப்பிப்போம். அவரது யோசனையைக் கேட்டு நடப்போம்" என்றார்கள். பெரியார்கள் உரைத்த அமுத வாக்கினை, அங்கு கூடியிருந்த வைசிய மக்கள் ஆமோதித்து, அவ்வாறே செய்யலாம் என்றதும், வேளூர் மாரி செட்டியாரும் கந்தப்பாசாரியும், மற்றுமுள்ள வயது முதிர்ந்த வைசியர்கள் பலரும் ஒன்றுகூடி, எஜமானரிடம் சென்றார் கள். அந்த எஜமானர் வந்தவர்களை அன்புடன் வரவேற்று,

மரியாதையோடு உபசரித்து, நாடிவந்த காரியம் யாதெனக் கேட்க, வேளூர் - மாரிசெட்டியார் திருப்போரூர் கிருத்திகைக்குப்போனதுமுதல் கந்தப் பெருமானை சென்னைமா நகருக்கு அழைத்து வந்த வரை, சாங்கோபாங்கமாக விஷயங்களைத்தெளிவுபட உரைத்து, மேல் நடக்கவேண்டிய காரியங்களைத் தாங்களே முன்னின்று நடத்தி, எங்கள் கோரிக்கையை ஈடேற்ற வேண்டுமென்று, எல்லோரும் ஒரு மனத்தினராய்க் கேட்டுக் கொண்டார்கள்.

அக்காலத்திலிருந்த எஜமானர்கள், கல்வி கேள்விகளிற் பெரியராய், பயபக்தி விஸ்வாஸத்திற் சிறந்தாராயிருந்தாரதனால், தம்மரபினர்கள் விரும்பியதைப் பூர்த்திசெய்யவிரும்பி, மாரிசெட்டியார்-கந்தப்பாசாரியார் ஆகிய இரு பக்த சிரோன் மணிகளின் தவப்பெருமையைப் புகழ்ந்தார் ; தம்குல தெய்வமாகிய கந்தப்பெருமானே நம் நகர் நாடிவந்த பெருங்கூற்றை நினைந்து நினைந்துருகினர். இச்சென்னைமாநகர் செய்த பாக்கியமோ அல்லது நம் வணிக வைசியமரபினர்கள் செய்த புண்ணியமோ என மகிழ்ந்தார். தம் பணியாளரை அழைத்து, வெகு ஜனக்கூட்டம் கூடவேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார். அவரிடம் வந்தபெரியார்களுக்கு வந்தனோபசாரம் சொல்லி, வெகு ஜனக்கூட்டத்தில் தங்கள் அபிப்பிராயத்தைப் பூர்த்திசெய்யலாமென்று சொல்லி அவர்களை அனுப்பி, கூட்டத்தில் நடத்த வேண்டிய விஷயங்களைப் பற்றித் தம்முடைய அமைச்சர்களிடம் யோசித்தார்கள்.

அன்றிரவு வணிக வைசிய மரபினர்கள் யாவரும் ஒன்று கூடினர்கள். வெகுஜனக்கூட்டத்தில் வேளூர் மாரிசெட்டியாரும் கந்தப்பாசாரியும் திருப்போரூரிலிருந்து கொண்டுவந்த கந்தப் பெருமான்சிலாவிக்கிரகத்தைப்பற்றியும், இதற்குஆலயம்அமைத்தல், நித்திய நைமித்திகாதி பூஜைகள் நிறைவேற்றுதல் பற்றி

யும் பேசினார்கள். முடிவில், கூட்டத்தினர் கந்தப்பெருமான் விஷயமாக, தத்தம்மாலியன்ற அளவு உதவிபுரிவதாக வாக்களித்தார்கள். எஜமானர்கள் இருவரும் மாரி செட்டியார் மூலமாக நந்தவனத்துக்குச் சொந்தக்காரராகிய முத்துநாய்க்கனை வரவழைத்து, "அன்பனே! கலியுகத்தில் பிரத்தியக்ஷ தெய்வமாகியும், எங்கள் மரபினருக்குக் குல தெய்வமாகியும் விளங்கும் கந்தப்பெருமான் உமது பூங்காவனத்தின்கண் அமர்ந்திருத்தலினாலேயே, அந் நந்தவனம் கற்பகச்சோலைபோற் பிரகாசிக்கிறதை நீங்கள் அறிவீர்கள்; அந்த வினைதீர்க்கும் பெருமான், நம்மனோரை அநுக்கிரஹிக்கும் பொருட்டு, நம் நகர் வந்து சேர்ந்திருக்கிறார். நாம் அவரை எந்நாளும் வழிபடுமார்க்கத்தைத் தேடவேண்டுவது நமது கடமையாகும். அதனால் தங்களை இங்கு வரவழைக்க நேர்ந்தது; தங்கள் அபிப்பிராயம் அறிய விரும்புகின்றோம்" என்றார். நாய்க்கர் புன்சிரிப்போடு, "பிரபோ! தங்கள் இஷ்டத்துக்கு மாறுசொல்லாதவன் யான்; நம் நகரைநாடி நம்மை ரக்ஷிக்க வலிய வந்திருக்கும் கந்தனுக்கு எனக்குச் சொந்தமாயும் என்னுடைய அநுபவத்திலுமுள்ளதாயுமுள்ள நந்த வனத்தை அந்தக் கந்தஸ்வாமிக்கே தத்தம் செய்கிறே"னென்று மனமுவந்து கூறி, மாரிசெட்டியார் பேருக்கு அந்தப் பூஞ்சோலையைத் தானபத்திரம் எழுதிக்கொடுத்துச்சென்றார்.

## (15) வேலூர் - மாரிசெட்டியார் மனைவி ஆதிலக்ஷ்மி அம்மாள் கந்தப் பெருமான் ஆலயம் கட்டுவதற்கு, தன் ஆபரணங்களை எல்லாம் தானம் கொடுத்தல்

சேட்டியார் தானபத்திரத்தைப் பெற்றுக்கொண்டு, எல்லாம் முருகன் திருவருளென்றெண்ணி, தம் மரபினர்களுக்குத்

தாம் பெற்றுவந்த பத்திரத்தைப்படித்துக்காட்டி, இனி ஆலயம் நிர்மாணிக்கவேண்டிய முயற்சியில் இறங்கவேண்டு மென்று சொல்ல, தம்மரபினர் யாவரும் சம்மதித்தார்கள். கற்புக் கரசியாய் விளங்கும் செட்டியாரது மனைவியார் ஆதி லக்ஷ்மி அம்மாள், தமது நாயகரது பக்தி வைராக்கியத் துக்கும், கந்தஸ்வாமியின் திருவருளுக்கும் வியந்து, தான் அணிந்திருந்த திருமங்கல்யம் தவிர மற்றைய ஆபரணங் கள் யாவற்றையும் களைந்து, செட்டியாரிடம் கொடுத்து, "கந் தப்பெருமான் ஆலயத் திருப்பணிக்காக இதன் விற்கிரய பணம் முதலில் உபயோகிக்க வேண்டும். நாம் வாழும் இல்லத்தையும் விற்கிரயம் செய்து திருப்பணிக்கு வைத்துக்கொள்ளுங்கள்" என்று மனமுவந்து சொன்னாள். செட்டியார் தம் மனைவி யின் பக்தி வைராக்கியத்துக்கும் திடசித்தத்துக்கும் சந்தோ ஷித்து "பெண்ணே! உன்னாபரணங்களை என்னிடம் கொடுக்க வேண்டாம்; என் உயிர்த்தோழர் கந்தப்பாசாரியிடம் கொடு த்து விற்கிரயம் செய்து, அந்தப் பணத்தைக்கொண்டு திருப் பணி ஆரம்பிக்கலாம். அவர் விஸ்வப்பிரம குலத்தவராதலால், ஆலய திருப்பணி செய்யவேண்டிய நியதிகள் அவருக்குத் தெரியும்" என்று சொல்ல, அம்மையார் நாயகர் இஷ்டப்படி சம்மதித்து, தன்னாயகனது பாதத்தில் விழுந்து நமஸ்கரித்து, "பர்த்தாவே! பிறப்புண்டானால் இறப்பு நிச்சயம்; இன்றைக் கிருப்போர் நாளைக்கிருப்ப ரென்கிற நிச்சயம் கிடையாது; இக் காயம் நீரிற்குமிழி; பந்து மித்திரர்கள் உற்றார் உறவின்முறை யார் சந்தையிற் கூட்டம்; வீடு-மாடு-மனை-தோட்டம்-துறவு முதலிய உலகவாழ்க்கை வெறும் இந்திர ஜாலக்கோலம்; இவை யாவும் வழிக்குத் துணையாவதில்லை; நமக்குள்ள துணை நாம் செய்யும் பாவ புண்ணியமே யாகும்; எனது தாய் தந்தையர் கள் செய்த புண்ணிய பரிபாகத்தினால், தங்களுக்கு நான் பாரி

யாளானேன்; உங்களைச் சார்ந்ததினால், எனக்கு இத்தகைய திடமனது உண்டாச்சுது; ஆகையால் காலந்தாழ்த்தாமல் என்னுடைய ஆபரணங்களை யெல்லாம் விற்கிரயித்து, திருப்பணி ஆரம்பியுங்கள்; மேல் நடக்கவேண்டியதுக்குக் கந்த ஸ்வாமி துணையிருப்பார்'' என்றாள்.

மனைவியின் தர்ம சிந்தையினையும், திட சித்தத்தையும் அறிந்த மாரி செட்டியார் சந்தோஷமுற்று, எல்லாம் கந்தன் திருவிளையாடல் என்றுணர்ந்து, பஞ்சானம் கந்தப்பாசாரியை யும்,பூங்காவனத்தைக் கந்தனுக்குத் தானம் செய்த முத்தியாலு நாய்க்கரையும் அழைத்துக்கொண்டு,

''மகந்தனைப்புரிதல் மிக்க
மறைதனை யோதலீதல்
சகந்தனிலுள மருந்துச்
சரக்கொடு மணிபொன் வெள்ளி
உகந்த வாணிபங்கள் செய்த
லழலொடு பசுக்கள் காத்தல்
அகந்தையில் வணிகர்தங்க
ளறு தொழிலாகு மன்றே''

(சாதிபேத விளக்கம்)

என்னும் பாசுரப்படி,பெருமை பொருந்திய வக்குவ மரபி னர் வணிக வைசிய ஆயிரங் கோத்திரத்தவர்கட்குப் பதினென் வகுப்பிற்கு எஜமான ஸ்தானம்பெற்ற உயர் திருவாளர்கள்:— தம்புசெட்டியார், இலிங்கிசெட்டியார் பரம்பரையினராகிய எஜ மானர் செட்டியார் இருவரிடம் சென்று, கோயில் திருப்பணி ஆரம்பிக்க வேண்டித் தன் மனைவி கொடுத்த பேருதவியையும் சொல்ல, எஜமானர் செட்டியார் இருவரும் மாரி செட்டியார் மனைவியின் பக்தி வைராக்கிய சித்தத்தினைப்புகழ்ந்து, கிராம

புரோகிதர்களை வரவழைத்து, கந்தராலய திருப்பணிதொடங்கு வதற்கு சுபமுகூர்த்தம் பார்த்து நிச்சயிக்கும்படி சொன்னார். அவ்வாறே புரோகிதர்குறித்த சுபதினத்தில், மாரி செட்டியார் தம் வணிக வைசிய ஆயிரவர்கள் புடைசூழ, முதலில் சர்வ சித்திவிநாயகருக்கு அபிஷேக அலங்கார தூபதீப நிவேதன ஆராதனைகள்செய்து, பின்னர் பிராமணர்களைக் கொண்டு, சுப நக்ஷத்திர சுப யோக சுப லக்கினத்தில், கந்தராலய திருப் பணியை உபாயமாகச் செங்கல்லினால் ஆரம்பித்தார். இலக் கின மஹிமையால் திருப்பணியானது யாதொரு விக்கின மின்றி நிறைவேறிற்று. ஆயிரவர்களாகிய நமது வணிக வைசிய மரபினர்கள் ஒவ்வொருவரும் தத்தம்மாலியன்ற உதவியைப் பொன்னாலும் பொருளாலும் வாக்கு சஹாயத் தினாலும் செய்து கொண்டே வந்தார்கள். ஆலயக்கட்டடம் அமைக்கும் சிற்பிகள் கந்தப்பெருமானிடம் பயபக்தி விஸ்வாச மாய் ,கடவுளுக்குப் பயந்து, லோபமின்றி, திருப்பணி வேலை யைச் செய்தார்கள். உன்னதமுள்ள கோபுரங்கள், கர்ப்பக் கிருக மண்டபம், ஸ்தபன மண்டபம், நிருத்த மண்டபம், வாத்திய மண்டபம், முக மண்டபம், ஸ்தாபன மண்டபம், கோபுரத்துவாரசாலா மண்டபம், ஆஸ்தான மண்டபம், யாக மண்டபம்,புஷ்ப மண்டபம், கந்த மண்டபம்,சுகந்த மண்டபம், சொர்ண மண்டபம், நமஸ்காரமண்டபம், அபிஷேக மண்டபம், அலங்கார மண்டபம், வசந்த மண்டபம், உபசார மண்டபம், சகஸ்தம்ப மண்டபம், சகஸ்ர ஸ்தம்பமண்டபம்,நிலக்கண்ணாடி சேவை, மணிப்பந்தல், சரவணப்பொய்கை, வாகனக்கிடங்கு கள், யாகசாலை, பாகசாலை முதலிய யாவும் சிற்பவிதி தவறாது கட்டி முடித்தார்கள்.

## (16) * ஸ்ரீ வள்ளி தேவஸேனா ஸமேத கந்தப் பெருமானுர் மஹா கும்பாபிஷேக வைபவம்.



ஸ்ரீ கந்தப்பெருமானுர் கோயில் என்னும்
ஸ்ரீ முத்துக்குமார சுவாமி ஆலயம்.
விநாயகர், சோமசுந்தரக் கடவுள், மீனுட்சியம்பாள், வள்ளி தேவஸேனை முதலிய சிலா விக்கிரகங்களுடன் திருப்போரூரினின்று கொண்டுவந்த ஸ்ரீ வள்ளி தேவஸேனா ஸமேத கந்தப் பெருமானுர்.

கந்தப்பெருமான் ஆலயக்கட்டடம் முடிந்ததும், திருவுருவத்தைப் பிரதிஷ்டைசெய்வான்வேண்டி, மாரிசெட்டியாரும் கந்தப்பாசாரியும் எஜமான் செட்டியார்களை அணுகி, கும்பாபி

* இற்றைக்கு 63 வருஷங்களுக்கு முன், அதாவது சென்ற சுக்ல வருஷம் தைமாதத்தில் மஹா கும்பாபிஷேகம் மிக விமரிசையாக நடந்தது இற்றைக்கு 22 வருஷங்களுக்குமுன் அதாவது சென்ற சாதாரணஞு வைகாசி மீ 9-உ மஹா கும்பாபிஷேகம் மிக விமரிசையாக நடந்தது.

ஷேகம் நடத்தவேண்டிய விதானங்களைக்குறித்து விண்ணப்பித்தார்கள். செட்டியார் தம்மாபினர் யாவருடைய ஆலோசனையையும்கேட்டு, சுபதினம் நியமித்து, சர்வஜெனங்களும் வந்து தரிசிக்கும் பொருட்டு, பட்டிணமுழுதும் விளம்பரப்படுத்தினார். வேதாகம விதிப்படி நவகுண்டபக்ஷ யாகசாலைகள் அமைக்கப்பெற்றன. ருக்வேதிகள் யசுர்வேதிகள் சாமவேதிகள் அதர்வணவேதிகள் ஆகிய நான்கு வகையாரது வேதபாராயண கோஷங்கள் நாலாபக்கமும்ஒலித்துக்கொண்டிருந்தன. தேவார பாராயணம் ஒருபக்கம் கோஷித்தன. ஆதிசைவாசாரியர்கள் பிரவேச பலி, ரக்ஷக்கோக்ந ஓமம், வாஸ்துசாந்தி மிருத்சங்கிரகணம், அங்குரார்ப்பணம், இரஷாபந்தனம், பஞ்சகவ்வியம், மண்டப சமஸ்காரம், சயனம், ஜலாதிவாசம், தான்யாதிவாசம், நயனோன்மீனஸம், பிருதிவிமாசுத்தி, கிராமப்பிரதக்ஷிணம் யாக சாலைபூஜை, ஓமகர்மம், தத்துவார்ச்சனை முதலாக * 22 நியாஸங்கள் கும்பத்திற்கும் மூர்த்திக்கும் கிரமப்படி அர்ச்சனை செய்து, ஆதிசைவர்களாகிய குருக்கள்மார் யாகசாலையில் வேதாகம மந்திரங்களைச் சொல்லிக்கொண்டே, ஹோமாக்கினியில் நெய்யைச் சொரிந்தார்கள்.

---

*1 ஏகத்திரிம்சத்கலாநியாஸம்
2 அஷ்டத்ரும் சத்கலாநியாசம்
3 ஷடத்வம் நியாஸம்
4 தண்டபங்கி நியாஸம்
5 முண்டபங்கி நியாஸம்
6 கலாபங்கி நியாஸம்
7 வக்த்ரபங்கி நியாஸம்
8 அந்த்ரமாத்ருகா நியாஸம்
9 பஹிர்மாத்ர நியாஸம்
10 ஸ்ரீகண்ட நியாஸம்
11 கௌரிகலா நியாஸம்
12 நிஷ்களம்ஸகள நியாஸம்
13 ஸகள நிஸ்களஷடத்வநியாஸம்
14 கலா நியாஸம்
15 தத்வ நியாஸம்
16 புவன நியாஸம்
17 வர்ண நியாஸம்
18 பதவின் நியாஸம்
19 சதுர்வர்ணமதவின் நியாஸம்
20 மந்தரான்நியாஸம்
21 அக்ஷர நியாஸம்
22 கர்ப்பக்காஹபதவின்நியாஸம்

ஆகிய 22-துநிகா நியாஸவிதானங்களால் மஹாகும்பாபிஷேகம் சிறப்பாக நடத்தினபடியால், அன்றுமுதல் இன்று வரையும், இவ்வாலயம் வளர்பிறைச்சந்திரன்போல் வளர்ந்து விருத்தியாகி, எங்கும் பிரபல்யப்பட்டு விளங்குகிறது.

முதலில் சர்வ சித்திவிநாயகரைப்பூஜித்துவிட்டு, சோம சுந்தரக் கடவுள், மீனாட்சி யம்பாள், வள்ளி தேவசேனை முதலிய சிலா விக்கிரகங்களுக்கும் திருப்போரூரிலிருந்து கொண்டு வந்த கந்தப்பெருமானுக்கும் ஜலாதிவாசம் தான்யாதிவாசம் செய்து, சுபவேளையில் அப்பெருமானுக்கென அமைத்துள்ள பீடத்தில் பிரதிஷ்டைசெய்து, அஷ்டபந்தனம் சாற்றினார்கள். ஆகமவிதிப்படி வேள்விகளைக் காலாகாலத்தில் செய்து, கும்பாபிஷேகம் நடத்த ஏற்பட்ட சுபலக்கின தினத்தன்று, ஹோமாக்நிக்குப் பூர்ணாகுதிகொடுத்து, பின்னர் கும்ப ஜலத்தை சர்வ சித்திவிநாயகர்முதல் சண்டிகேஸ்வரர் பரியந்தம் சகல தேவதைகளுக்கும் தூதிகா நியாச பூர்வமாக அபிஷேகம்செய்து, கந்தப்பெருமானுக்கு மஹா கும்பாபிஷேகம் செய்தார்கள். யாகம் ஆரம்பித்த தினமுதல் கும்பாபிஷேகதினம் வரையும், அங்கு கூடிய பிராமணாள் யாவருக்கும் பஞ்சபக்ஷிய பரமான்ன போஜனம் அளித்ததோடு, சாதுக்களாயுள்ள பிராமணரல்லாதார்க்கும் குறைவின்றி அன்னமளித்தார்கள். தவிர, வணிக வைசிய மரபினர் ஆயிரகோத்திரத்தவர் யாவருக்கும் மரியாதையோடு போஜனம் செய்விக்கப்பட்டது. எஜமானர்களாகிய செட்டியார் இருவரும் தமது ஆமைச்சர் புடைசூழ தினசரி யாகசாலைக்கு தசாங்க விருதுகளோடு விஜயஞ்செய்தார்கள். கும்பாபிஷேக தினத்தன்று அவர்களுக்கு சகல மரியாதையுடன் உபசாரங்கள் நடைபெற்றன.

கும்பாபிஷேகம் முடிந்ததும், மஹாபிஷேகம் நடந்தது; அன்றிரவு பஞ்சமூர்த்திகள் பெரிய வீதி உற்சவம் மிக வைபவமாக நடந்தேறிற்று. மறுதினம் வேதபாராயணம் செய்தோர்க்கெல்லாம் மரியாதை செய்யப்பெற்று, அவரவர்கள் தத்தம் ஊர்சென்றார்கள். பின், 48-நாள் மண்டலாபிஷேகம் கிரமமாக நடைபெற்றது; சென்னை வாசிகள் யாவரும் கந்தப்பெருமானது மஹா கும்பாபிஷேக உற்சவவைபவத்தைக்கண்டு உற்சாகமடைந்தார்கள். அன்றுமுதல் சென்னமா நகர முழுதும், லக்ஷ்மி நிவாசமாயிருந்த தென்று சொல்வது மிகையாகாது.

## (17) வேளூர் மாரிசெட்டியார், கந்தப்பெருமான் ஆலய பரிபாலனத்தை வணிக வைசிய ஆயிரவர்களிடம் ஒப்படைத்து, அவர்களுக்கு ஹிதோபதேசம் செய்தல்.

இந்த கந்தப்பெருமான் ஆலயத்தினிடத்து வணிக வைசிய ஆயிரவர்களும் மற்றுமுள்ளோரும், பக்தி சிரத்தைகொண்டு, இவ்வாலய நித்திய நைமித்திக பூஜைகளை சந்திர சூரியர் உள்ள வரையும் தவறாது நடைபெறும் பொருட்டு, மூலதனம் சேர்க்க வேண்டுமென்று திடசித்தங் கொண்டு, வைசிய வணிக ஆயிரவர்களது எஜமானரிடம் விண்ணப்பித்தார்கள். அவர் வெகு ஜனக்கூட்டம் கூட்டுவித்து, இந்த விஷயத்தைப் பிரஸ்தாபித்தார். அக்கூட்டத்தில் விஜயம் செய்துள்ள மாரி செட்டியார் எழுந்து, சபையோருக்கும் பெரியதனச் செட்டியாருக்கும் நமஸ்காரஞ்செய்து, "அறிவிற்சிறந்த கனதனவான்களே! அறிவினிற் சிறியவன், தனத்தினில் ஏழையன், ஆயினும் அடியேனை ஓர் ஆளாகக்கொண்டு, கந்தப்பெருமான் திருப்போரூரினின்றும் நமது சென்னைமாநகர் வந்து அமர்ந்தது, நாம் செய்த பாக்கியமென்றே சொல்ல வேண்டும். அடியேனது மனைவியின் தாராள திடசித்தத்தினால், ஆலயத் திருப்பணி ஆரம்பிக்கப் பெற்று, பிரபுக்களது உதவியால் ஒருவாறு முடியப் பெற்றுள்ளது. இனி, இவ்வாலய சம்பந்தமான சகல காரியங்களையும்சபையோர் வசம் ஒப்புவிக்கத் திடசித்தங் கொண்டுள்ளேன். நமது கந்தஸ்வாமி முன்பாக இந்த ஆலய தருமாதிபத்தியத்தை பதினெட்டு வகுப்பினர்களாகிய நம்மவர்களுக்குத் தத்தம் செய்கின்றேன். தாங்கள் எல்லவரும் சூரிய சந்திரர் உள்ளவரையும்,

அலைகடல் ஒலிக்கிறவரையும்,ஹரிஹரன் உள்ளவரையும், இந்த தர்மத்தை காலதேசவர்த்தமான மறிந்து, தங்கள் அபிப்பிராயப் படி நடத்தச் சம்மதிக்கிறேன்'' என்று சொல்லவும்,சபையில் வீற்றிருக்கும் வைசிய மக்கள் யாவரும், புண்ணிய சொரூபி யாய் விளங்கும் மாரி செட்டியார் திருவடிகளில் வீழ்ந்து நமஸ் கரித்து, "ஞானமூர்த்தி! இதுவரையும் தங்களை எங்கள் வை சிய மரபினருள் ஒருவராக மதித்து வந்தோம்; இப்போது கந்தஸ்வாமியே பிரத்தியக்ஷமாக எங்களை அனுக்கிரகிப்பதற்கு இம்மானிட உருவங்கொண்டு வந்திருப்பதாக எங்கள் சித்தந் தெளிந்துவிட்டது; தாங்கள் செட்டியாரல்ல; சிவமுகூர்த்தம்; தங்களைக் கனவிலும் மறக்கமாட்டோம்;தங்களுடைய மஹிமை யை எடுத்துரைக்க இவ்வுலகிலொருவரு மிரார் என்பது திண் ணம்; தேவரீரை அணுகுகிறவர்கள் பாக்கியவான்களே யாவர்; எங்களுக்குத் தாயும் நீரே; தந்தையும் நீரே; குருவும் நீரே; தெய்வமும் நீரே; இந்தப் பிரபஞ்சம் மாயை; இந்த சரீரம் அநித்தியம்; நாங்கள் கடைத்தேறு மார்க்கத்தை அநுக்கிர கிக்க வேண்டும்; நமது வைசிய குலத்துக்குச் சிரோன்மணி யாய் விளங்குகின்ற தாங்கள், இப்பூவுலகில் பாச பந்தத்தினிற் கட்டுண்டு, பிறவிக்கடலுள் மூழ்கிப் பரதவிக்கும் எளியோங் களுக்கு, உண்மை நிலையை அடைவதற்கு வழி காட்டவேண் டும்;புண்ணியசொரூபா!'' என்று பிரார்த்தித்தார்கள்.மாரி செட் டியார் தம் மரபினர்கள் வேண்டுகோளை அங்கீகரித்து,"சத்தியம் பிறழா எமது சகோதரர்களே! நான் என்ன சொல்ல வேண்டி யிருக்கிறது? அடியேன் கந்தப்பெருமானிட்ட பணிவிடையைச் செய்த கூலியாளனே தவிர, கல்விச் செல்வத்திலாவது, அருட் செல்வத்திலாவது யான் மூடன்; ஆயினும், தாய் சொற்றுறந் தால் வேறு சாஸ்திரமில்லை; தந்தை சொன்மிக்க மந்திரமில்லை;

"சுருதியின் றுணிவா னினைவு கொண்டு லகம்
துச்சமென் றுணர் தனிச்சயமாங்
கருதுறு நினைவை யடக்கி யிவ்வுலகங்
கானலென் றுணர்ந்திடல் சமாதி
யிருவகையாய் முன் னுரைத்தவை யின்றி
யிலங்கறி வுருவ மாயிருத்தல்
பொருவறு சகசஞான மென்றிசைத்தான்
போரிவா ழாறுமா முகனே"

"அறிவு தன்னினைவிற் கலந்துறு போதி
லரும்பர முயிர்சக முளவாம்
பிரிவிலவ் வறிவந் நினைவினை யகன்றுற்
பேதா பேதங்க ளொன்றின்றி
நெறியுறத் தானே தன்னிடத் திருக்கு
நிச்சய மென்றெனக் கிசைத்தான்
பொறிமறு மார்பன் மருகவே ளெனையாள்
போரிவா ழாறு மாமுகனே"

(திருப்போரூர்ச் சந்நிதிமுறை)

இந்தப் பிரபஞ்சம் மாயா விலாசம்; கானல் நீர்; கந்தர்ப்ப நகர்; பஞ்சபூதத்தாலாகிய இந்த சரீரம் நீர்மேற் குமிழி; பக்தி செய்தால் முக்தி பெறலாம்; இல்லறமே நல்லறம்; பசியார்க்கொன்றீவதே காருண்யம்; குருவில்லான் கொண்டவித்தை ஆப்பிலாச் சகடுபோல அழியும்; சற்குருவார்த்தையின்படி நடந்து, தாமரையிலை ஜலம்போல, உலகில் வாழவேண்டும்; கடவுள் ஒருவரே; அவரது அநந்தகோடி மாயா சக்திகளினுல் உலகம் தோன்றுகிறது; மறுபடியும் அந்த கடவுளிடமே ஒடுங்குகின்றது; ஆகலால் சகலமும் கடவுள் மயமென்றறியவேண்டும்; ஜீவர்கள் தாம் தாம் செய்த வினைப்பயனுல், நன்மை தீமைகளை அநு

பவிக்கிறார்கள்; அதற்கநுகுணமாக நவக்கிரகங்களும் தம் செல்வாக்கை நடத்துகின்றன; இவ்வுண்மை அறிந்து, ஜீவர்கள் சத்தியம் - சாந்தம்-சமாதானமாகிய முறைகளில், ஈஸ்வர பக்தி அடியார் பக்தி குருபக்தி செய்துகொண்டு, அன்பு அடக்கம் பொறுமை காருண்யம் முதலிய நற்குணங்களோடு வாழ்ந்தால், உண்மைப்பொருளை அடையலாம்; இது வேதாகம சாஸ்திரங்களின் கருத்து; தவிர, சென்னைமா நகர்செய்த தவப்பயனாலோ, அல்லது வைசியமக்கள் செய்த புண்ணிய பரிபாகத்தினாலோ, நமது குலதெய்வமாகிய கந்தஸ்வாமி, கருணைகூர்ந்து, திருப்போரூரிலிருந்து நம் நாட்டுக்கு நம்மையெல்லாம் ரக்ஷிக்கும்பொருட்டு வலிய வந்தெழுந்தருளியிருக்கிறார். அடிமையின்பாரியாள் தனது தவப்பயன்நிறைவேறுங்காலத்தறிந்து, தன்னுபரணங்களை யெல்லாம் அப்பெருமானது ஆலய நிர்மாணத்துக்கு அளித்தாரதனால், தற்போதுள்ள இச்சிறு ஆலயம் நிர்மாணிக்கப்பெற்றது; தர்மகுணவள்ளல் முத்தியாலு நாயக்கர் தமது நந்தவனத்தை கந்தப்பெருமானுக்குத் தானம் அளித்தார்; இந்தத் தரும பரிபாலனத்தை இப்போது உங்கள் எல்லோருக்கும் கந்தப்பெருமான் அறிய, தானம் கொடுத்து விட்டேன்; இனி அப்பெருமான் ஆலயத்தை நிர்வகித்து, மந்திரலோபம் கிரியாலோப மின்றி, பக்திவைராக்கியத்தோடு கந்தஸ்வாமியை பூஜித்து வணங்கினால், இம்மையில் நீங்கள் அடையவேண்டிய சாம்ராஜ்யமடைந்து, மறுமையில் உண்மைநிலையை அடையலாம். இதுதான் உங்கள் வேண்டுகோளுக்குப் பதிலாகும்" என்றார்.

மாரிசெட்டியாரது ஹிதோப தேசமொழிகளைக்கேட்டு, பெரியதனச் செட்டியார், ஆச்சரியமும் மகிழ்ச்சியுமடைந்து, இவர் தெய்வப்பிறவியே யன்றி மானிடப்பிறவியல்ல; கந்தப் பெருமான் திருவருள் இவருக்குப் பூரணமாக இருக்கிறது;

இவர் மனைவியோ பெரும் புண்ணியவதி; அருட்பாக்கியவதி; இவ்விருவரது தவப்பெருமையினால், நமது சென்னைமாநகரில் கந்தப்பெருமான் ஆலயம் அமையப்பெற்றது என்று உள்ளம் பூரித்து, கூட்டத்தினரை விளித்து, "சகோதரர் மாரிசெட்டியாரால் நம்மரபினர் யாவருக்கும் இக்கந்தராலய பரிபாலனம் தத்தம் செய்யப்பெற்றது; இனிநமது பதினெட்டு வகுப்பினரும் இந்த தரும பரிபாலனத்தை ஏற்றுக்கொண்டு, சிறப்பாக நடத்தல் வேண்டுவது நமது கடமை யாகும்" என்று கூறினர்.

கூட்டத்திலிருந்த வைசியமக்கள் யாவரும் பெரியதனச் செட்டியார் ஆக்ஞைப்படி, கந்தப்பெருமான் ஆலய தருமபரிபாலனத்தை ஒப்புக்கொண்டு, மாரிசெட்டியாரைத் தம்மரபு விளங்கவைத்த தெய்வமெனக்கொண்டு, மாரிசெட்டியாரது சிலா உருவத்தை இவ்வாலயத்தின் கோபுரவாயிலுக்கடுத்த கல் ஸ்தம்பத்தில் ஸ்தாபிதம் செய்து, தினசரி கந்தப்பெருமான் நித்திய பூஜைகள் யாவும் முடிந்தபின், அச்செட்டியார் சிலா விக்கிரகத்துக்கும் பூஜை செய்யும்படி ஏற்பாடு செய்தார்கள்; பாக்கியுள்ள திருப்பணிகளை அப்போதப்போது ஒழுங்காக முடித்து வந்தார்கள்; கந்தப்பெருமானை அலங்கரித்து அழகு பார்ப்பதற்கு நவரத்தினங்களாலிழைத்த ஆபரணங்களைச் சேகரித்தார்கள்; கோயிலுக்குவேண்டிய வாகனாதிகள், இரதம், கைலாச பர்வதம், கந்தமாதன விமானம், கண்ணாடி பல்லக்கு, கொடி சீலை, ஆலவட்டம் முதலியவற்றோடு, அபிஷேக தூப தீபாராதனை சாமான்களும், சமையல் பாத்திரங்களும் சிறுகச் சிறுகச் சேர்த்தார்கள்.

## (18) வேளூர்-மாரி செட்டியார் மனைவி ஆதிலக்ஷ்மி அம்பாள் கந்தன் திருவடி சேர்தல்.

இவ்வாறு கந்தராலயம் சீரும் செல்வமுமாய் செழித்தோங்கி வருவதை நோக்கி, மாரி செட்டியாரும் அவர் மனைவி

யாரும் கந்தப்பெருமா னிடத்துத் தம் உடல் பொருள் ஆவி மூன்றையும் தத்தம் செய்து, அப்பெருமானது சடாக்ஷர மந்திரத்தை ஜெபித்துக்கொண்டே வாழுநாளில், மாரி செட்டியார் மனைவி, கற்புக்கரசி ஆதிலக்ஷுமு அம்மாள் சிவபதம் அடைந்தாள். அவ்வம்மையாருக்குச் செய்யவேண்டிய ஈமக் கடன்களை வருணாசிரம தருமப்படி முடித்து, மாரி செட்டியார் இல்லந் துறந்து, கந்தப்பெருமானே கதியென்று நம்பி, கந்தராலயத்திலேயே, தியானயோக சமாதியில் வீற்றிருந்து, காலங் கழித்து வந்தார்.

## (19) சோழதேசத்துப் பிராமணர்கள் மூலமாகக் கந்தர் உற்சவ விக்கிரகம் பெறுதல்.

கந்தராலய நிர்வாகத்தைச் சிறப்பாக நடத்தும் பதினெண் தருமகர்த்தாக்கள், இச்சிறப்புள்ள ஆலயத்துக்கு உற்சவ விக்கிரகம் இல்லையே யென்று மனக்குறை அடைந்தவர்களாய், கந்தன் திருவருள் யாதோ வென யோசித்துக்கொண்டிருக்கும் போது, சோழநாட்டு மறையோர்கள் வடதேச யாத்திரையாக, பற்பல க்ஷேத்திரங்களைத் தரிசித்துக்கொண்டு, சென்னையம்பதி வந்தார்கள். அப்பதியில் கந்த கோட்டத்தின்கண் வணிகவைசிய ஆயிரவர்களால் பரிபாலிக்கப்பெற்று வரும் கந்தராலயத்துட் சென்று, அங்கு திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் போரூர் ஆண்டவனைத் தரிசித்தார்கள். அத்திருவுருவம் இம்மறையோர்கள் மனதைக் கவர்ந்தது. மகிமை பொருந்திய இவ்வாலயத்தில் உற்சவவிக்கிரகம் ஒன்றில்லாமை பெருங்குறையென உணர்ந்து, அவ்வாலய பரிஜனங்களால் மாரிசெட்டியாரது அருண் மஹிமையை அறிந்து, அந்த செட்டியாரைத் தரிசித்து, "புண்ணிய சொரூபமுள்ள செட்டியாரே! தங்களுடைய தவப் பெருமையினல் இக் கந்தராலயம் சகல செல்வாக்கோடு நிர்மாணிக்

கப்பெற்று விளங்குகின்றதெனக் கேள்விப்படுகிருேம். இப் பெரிய ஆலயத்துக்கு உற்சவ விக்கிரகம் இல்லாமை பெருங் குறையாகும். தெய்வீகமாய் எங்களுக்குக்கிடைத்த உற்சவ விக்கிரகம் உபய நாச்சியாருடன் கொண்டு வந்திருக்கிருேம். அதை இவ்வாலயத்துக்குத் தானமாகக்கொடுக்க நிச்சயித்து விட்டோம். தயவுசெய்து தாங்கள் ஏற்றுக்கொண்டு, உற்சவாதிகள் செய்யுங்கள்'' என வேண்டினர். மாரிசெட்டியார் ஆலய பரிபாலகர்களைக் கலந்து ஆலோசித்து, மறையோர்கள் தானமாகக்கொடுத்த கந்தர் உற்சவ விக்கிரகத்தைப்பெற்று, வேதாகம விதிப்படி, சத்பிராமணர்களைக்கொண்டு கும்பாபிஷேகம் செய்து, அம்மறையோர்களுக்கு மனேதிருப்தியான சன்மானங்கொடுத்து அனுப்பிவிட்டு, அன்றுமுதல் கிருத்திகை முதலிய பஞ்ச பருவ உற்சவங்களைக் கிரமமாகச்செய்து வந்தார்கள்.

## (20) வேளூர் மாரி செட்டியார் விதேக மூத்தி அடைதல்.

"உவமையறு பவசலதி கடத்தியிம் மானிடப்பிறப்பி லுதிக்கச் [செய்து
நவமருவு முனதுபத நாடவைத்தாயதை மறந்தேனு யினேனே
கவலையெலா மற்றுனது திருவடிக்கீழிருக்க வினிக்கருணை [செய்யாய்
புவனைகரதலமணியே போரூர்வாழாறுமுகப் புனிதவேளே''

(திருப்போரூர்ச் சந்நிதிமுறை)

மாரி செட்டியாரென்னும் புண்ணிய சீலர், கந்தராலய வைபவங்கள் சிறப்பாக நடைபெற்று வருவதைக் காணுந்தோறும் பெரு மகிழ்ச்சி கொண்டு, கந்தர் நாமமே பாச பந்தத்தை நீக்கும் தந்திரமாகுமென்னும் திடநம்பிக்கையோடு, அம்மந்திர

த்தையே உச்சரித்துக்கொண்டு காலம் கழித்து வந்தார். இத் தறுவாயில், தனக்கு மரணகாலம் நெருங்கி வருகிறதை யுணர்ந்து, தன் உயிர்த்தோழராகிய கந்தப்பா சாரியையும், கந்தராலய தர்ம பரிபாலகர்களையும் வரவழைத்து, கந்தராலயம் சிறப்புற்று நடந்துவரவேண்டு மென்னும் தன் அவாவினை வெளியிட, அவர்கள் செட்டியாரை நோக்கி, "புண்ணிய சீலரே! எங்கள் குலதெய்வமே! இவ்வாலயத்தை எங்கள் குலச்சொத்தாகப் பாவித்திருக்கிறோம். நம் மரபினர் யாவரும் இவ்வாலய அபி விருத்தி விஷயமாக வேண்டியதைச் செய்வோம். இது சத்தியம்; தாங்கள் கவலைப்படவேண்டாம். எங்கள் உறுதிமொழிக்குக் கந்தப்பெருமானே சாக்ஷி" என்றுரைத்ததும்,மாரி செட்டியார் மனம் ஆறுதலடைந்து, எல்லாம் முருகன் செயலென்று,

"மாண்டு பிறவா நெறியருளு
மன்னு! வானோர் முதலெவரும்
வேண்டும் பொருளே! பொய்யவனேன்
மெய்யாந் துணையே நாயடியே
னீண்டிங் கிழைத்த குற்றங்க
ளெல்லாம் பொறுத்தே யெளியேனை
ஆண்டு கொளல் வேண்டும் போரு
ரையா வுன்ற னடைக்கலமே."

(திருப்போரூர்ச் சந்நிதிமுறை)

கந்தா! கடம்பா! கார்த்திகேயா! மயூரவாகனா! வள்ளிதேவ சேனாபதி மணவாளா! அடியேனை நின் திருவடி நீழலின்கண் சேர்த்துக் கொள்ளவேண்டும்; முருகையனே! என்று உச்சரித்துக்கொண்டு, அகண்ட பரிபூரண சச்சிதாநந்த சுயஞ்ஜோதிப் பிரகாசத்தினுள்ளே தேகோபாதியின்றி ஜோதிமயமாய்க் கலந்தார். அந்த சமயத்தில் கந்தப்பெருமான் ஆலய மூலமூர்த்தியி

னிடத்து ஒரு ஜோதி தோன்றி மறைந்ததைக்கண்டு, பக்த கோடிகள் ஆச்சரியமுற்றூர்கள்.

உடனே ஆலயபரிபாலகர்களும், மற்றுமுள்ளவணிகவைசிய ஆயிரவர்களும், மாரி செட்டியாரது பூத உடலை அபிஷேகஅலங்காரம் செய்வித்து, மிக்க வைபவத்துடன் அடக்கஞ் செய்து, வருணுசிரம தருமப்படி ஈமக்கடன்களை முடித்தார்கள். அன்று ஆலயத்தில் அபிஷேக அலங்கார தூபதீப ஆராதனைகள் சிறப்பாகச்செய்து, செட்டியாரது அந்தராத்மா கந்தன் திருவடிகளிலேயே ஐக்கியமாக வேண்டிப் பிரார்த்தித்தார்கள். தவிர, செட்டியாரது திருவுருவம் ஒன்று ஆலயத்தின் ஓர் புறத்தில் பிரதிஷ்டைசெய்து, தினசரி பூஜைநடந்து வருவதாக முன்னர் தெரிவித்துள்ளோம். அந்த உருவத்துக்கும் அன்று விசேஷ பூஜை நடைபெற்றது.

## (21) கந்தப் பெருமான் பிர்ம்மோற்சவ விக்கிரகம் நூதனமாகச்செய்து, சுத்தமாகஸ்ரமயமால் க்ஷேமத்தில் வைத்தல்.

மாரி செட்டியார் ஐக்கியமான சிலகாலம் சென்ற பின், இவ்வாலயத்தில் பிர்ம்மோற்சவம் நடத்த உத்தேசித்து, பெரிய திருவுருவமுள்ள உற்சவமூர்த்தியை ஏற்பாடு செய்வதற்கு, பதினெண் தர்மகர்த்தாக்களும் யோசித்து, சிற்ப சாஸ்திர வல்லுநர்களை அழைப்பித்து, தங்கள் விருப்பத்தை முடிக்கும் படி கேட்டுக் கொண்டார்கள். அந்த சிற்பிகள், மூல உருவத்தைக் கவனித்து, அதற்கிணையாக ஓர் உருவம் அமைக்கவேண்டி, மெழுகினுல் கருவொன்று அமைத்து, அதற்கு மேல் மண் கட்டி, சுப லக்கினத்தில், பஞ்சலோகத்தினுல் திருவுருவத்தை வார்த்து, சூடு ஆறியபின், கருவைத் திறக்க, எம்பெருமான் கந்தப்பன் திருவுருவம், சிரசுமுதல் திருவடி வரையும் ஜெகஜ்

ஜோதியாய் சுந்தர மிக்க விளங்குவதைக் கண்டு, சிற்பி முதல் யாவரும் பேரானந்தம் அடைந்தார்கள். அத்திருவுருவத்தின் சில முக்கிய பாகங்களைச் சுத்தம் செய்வான் வேண்டி, சிற்ப வல்லுநன், ஆயுதங்களை அவ்வரிய திருமேனியில் வைத்ததும், அக்கினியிற் றகிப்போன்போல், சிற்பியின் தேகம் எரிச்சல் கண்டு, மெய் சோர்ந்து, தரையினில் வீழ்ந்தான். அருகிருந்தோர் யாவரும் நடுக்க முற்று, சைத்யோப சாரம் பல செய்ய, சிற்பியானவன் நித்திரையினின்றும் விழித்தவன்போல் மயக்கந்தெளிந்து மெல்லெனக் கண்விழித்து, "அன்பர்களே! இந்தத் திருவுருவத்தை பய பக்தியோடு கவனித்தல்வேண்டும்; இது நீறுபூத்த நெருப்பு; இதைத்தொட்டு சுத்தம் செய்ய அடியேனுக்கு யோக்கியதை யில்லை" என்று அம்மூர்த்தியைப் பன்முறை வணங்கி, தர்ம கர்த்தாக்களிடம் விடைபெற்று, அவர்களால் சன்மானிக்கப்பட்டதைப் பெற்று சென்றார். சிற்ப சுத்தமாகாத திரு உருவத்தைக்கொண்டு உற்சவம் நடாத்துதல், ஆகம சாஸ்திர விதிக்கு மாறென நினைத்து, அவ்வுருவத்தை க்ஷேம அறையில் வைத்திருந்தார்கள்.

## (22) க்ஷேமத்திலிருந்த கந்தப்பெருமான் உற்சவ விக்கிரகத்தை, சந்நியாசி சாம்பையர் ஆத்ம சக்தியினால் சுத்தம் செய்து பிரதிஷ்டை செய்தல்.

சுமார் இரண்டு வருடம் கழித்து, தென் தேயத்தினின்றும் சாம்பையர் என்னும் பிராமண சந்நியாசி, யாத்திரா மார்க்கமாகக் காசிக்குச் சென்று திரும்பு காலையில், சென்னைமா நகர் வந்தார்; கந்தர் ஆலயம் உட்புகுந்து பெருமானைத் தரிசித்தார். அம்மூலமூர்த்தியின் அற்புத வடிவமானது இந்த சந்நியாசியின் மனதை வசீகரப்படுத்திற்று. ஆலயத்தைவிட்டு வெளி

வந்து, அங்குள்ள பரிஜனங்கள் மூலமாக, கந்தராலய மஹிமை களை விசாரித்தார்; உற்சவ திருவுருவம் சுத்தமாகாமல் க்ஷேம அறையிலிருப்பதை அறிந்தார்; தர்மகர்த்தாக்களைக் கண்டு, சிற்ப சுத்தமாகாத உற்சவ விக்கிரகத்தைப்பார்த்து ஆச்சரிய மும் சந்தோஷமும் அடைந்து, "பிரபுக்களே! உங்கள் புண்ணி யமே புண்ணியம்! மூல விக்கிரகத்துக்கமைந்த அற்புதத்தோற் றத்துக்கீடாக,இவ்வுற்சவ விக்கிரகம் அமைந்தது பெரும்பாக் கியமாகும். இது என் மனதுக்கு ஆச்சரியத்தை உண்டு பண் ணுகிறது. சென்னைமா நகருக்கே குபேர சம்பத்தைக்கொடு க்கவல்ல இந்த திருவுருவத்தைத் தரிசிப்போர் பாக்கியசாலிக ளாவார்; இந்த ஆலயம் சொற்பகாலத்துக்குள் சென்னையம் பதியில் வாழும் ஆலயங்கட்கெல்லாம் மேம்பா டடைந்து, பிர பல்யப்பட்டு விளங்கு மென்பது சத்தியம். பக்தர்களே! நீங்கள் ஒவ்வொருவரும் இத்திருவுருவத்தைப் பக்தி சிரத்தையோடு வழிபடுவீர்களாயின்,உங்கள் குலம் விளங்கும்; அஷ்டலக்ஷ்மி கள் உங்கள் கிரகத்தில் வாசம் செய்வாள். உங்களுக்கு அஷ்ட யிஸ்வரியங்கள் கிடைக்கும். இந்த உண்மையைச் சீக்கிரம் அறி வீர்கள். இத்தனை மஹிமையும் இந்தத் திருவுருவின் அமைப்பி லடங்கி யிருக்கிறது.இவ்வுருவத்கை ஆயுதங்களால் சுத்தம்செய் யப்படாதென்பது உண்மைதான்; யான் மந்த்ர சக்தியினல் சுத்தம் செய்து தருகிறேன்" என்றார். அவ்வாறே அவ்வுருவத் தைச் சுத்தமான அறையில் வைத்துத் திரையிட்டார்கள். பிராம்மண சந்நியாசி சாம்பய்யர் திரைக்குள்ளிருந்து,வேத மந் திரங்களினலும் ஆத்ம சக்தியினலும் அவ்வுருவத்திலுள்ள அசுத்தங்களை நீக்கித் திரையைநீக்கி வெளிவந்தார். தர்மபரி பாலகர்களும், மற்றுமுள்ளோரும் அத் திருவுருவத்தைப் பார் த்து ஆச்சரியமும் சந்தோஷமும் அடைந்து, பிராம்மணசந் நியாசிக்கு நமஸ்காரம்செய்து, சுப லக்கினத்தில் வேதாகம

விதிப்படி, நற்குல சிவாசாரியார்களைக்கொண்டு கும்பாபிஷேகம் செய்வித்து, பிரம்மோற்சவத்தை நடத்தினார்கள்.

## (23) கந்தப் பெருமான் ஆலயம் வடலூர் சிதம்பரம் ஸ்ரீ இராமலிங்க சுவாமிகளின் அருள் வாக்கினால் மேம்பாடு பற்றிருத்தல்.

அந்நாள் முதல் இந் நாள்வரையும் சந்யாசி சுவாமிகளின் அநுக்கிரகத்தினாலும், அருட்பிரகாச வள்ளார் வடலூர் சிதம்பரம் இராமலிங்க சுவாமிகளது "திருவோங்கும்" என்னும் முதலடியாகக்கொண்ட தெய்வமணிமாலை என்னும் அருட்டிருவாக்கினாலும், இந்த கந்தர் ஆலயம் வளர் பிறைச்சந்திரன் போல் விருத்தியடைந்து, வக்குவ மஹரிஷியின் வமிசத்தினுதித்த வணிக வைசிய ஆயிரவர்களது ஆதீனத்துக்குட்பட்டு, சென்னைமாநகருக்கே ஓர் திலகம்போல் விளங்கிவருகின்றது; இவ்வாலய பிரம்மோற்சவ வசந்தோற்சவாதிகளும் மேற்படி வைசிய மரபினர்களாலேயே நடத்தப்பட்டு வருகிறது. தவிர, கிருத்திகை, சஷ்டி தோறும் விசேஷமான ஜனக்கூட்டத்தோடு பிரார்த்தனைகளும் உண்டிகளும் செலுத்தப்பட்டு வருகிறதை நாம் எல்லோரும் பிரத்தியக்ஷமாய்ப் பார்க்கலாம்.

தற்காலமுள்ள ஆலயத்துக்கு தென்மேற்கு மூலையில் சரவணப்பொய்கைக்குக் கீழ்பாகத்தில், ஆதியில் முத்தியாலு நாய்க்கன் பூந்தோட்டத்தில் கந்தப்பாசாரியாரால் பிரதிஷ்டை செய்து பூஜித்துவந்த சர்வ சித்திவிநாயகர் அமர்ந்திருக்கக் காணலாம். இந்த இடந்தான் முத்தியாலு நாய்க்கன் பூந்தோட்டம் எனப்படும்.

எல்லாம் கந்தன் திருவருளால் சிறப்பாக நடைபெற்று வருவதைக்கண்டும் கேட்டும் ஆநந்த மடைவோமாக.

"வேல் வாழி மயில் வாழி சேவல் வாழி வேறுமுள படை
வாழி விளங்கு தண்டைக்
கால் வாழி யருள் பொழியும் விழிகள் வாழி கவின்குலவு
மீராறு கரங்கள் வாழி
மால் வாழி வாழி யெனப் பணிந்து வாழ்த்து மலைமாது
தருமுருகன் மகிழ்ந்த வாறு
பால் வாழி யெனை யாளுங் கருணை வாழி பங்கிருந்த
மங் கையர்தம் பதங்கள் வாழி"

"ஆதிவாழிய வஞ்செழுத் தோடுவெண்
பூதி வாழிய புண்ணியர் வாழிய
நீதி வாழிய நீள்புவி வாழிய
கோதில் சைவக் குலமிக வாழியே"

(கந்தப்புராணச் சுருக்கம்)

"ஆறுமுகம்வாழி ஆறிரண்டு தோள்வாழி
தேறுபதம்வாழி தேவிமார்—வீறுபுடை
வாழிவேல் வாழிமயில் வாழி போரூரர்
வாழி சகம் வாழி மகிழ்ந்து"

(திருப்போரூர்ச் சந்நிதிமுறை)

ஓம். சுபம். சுபம்.

**சென்னைக் கந்தப்பெருமானுர் கோயில் என்னும்**
**ஸ்ரீ முத்துக்குமார சுவாமி ஆலய வைபவம்**
**முற்றுப் பெற்றது.**

---

முதற் பதிப்பு] 15-11-1931 [1000, காப்பிகள்

ஸ்ரீ ஆதிமூலம் பிரஸ், ஜி. டி. சென்னை:—15-11-1931.

ஓம்

கந்தப்பெருமான் துணை.



சென்னை மாநகர்

கந்த கோட்டம்

# ஸ்ரீ முத்துக்குமாரக் கடவுள்

# *ஸ்தோத்திரம்.

## விநாயகர் துதி.

நேரிசை வெண்பா.

திங்கள் பயின்மாடச் சென்னைநகர் வாழ்கந்தர்
செங்கமலத் தாட்டோத் திரம்புகல—விங்கருளும்
தங்கவத்தி ரத்தான் சதுமுகத்தா னேத்துறுமா
தங்கவத்தி ரத்தான் சரண்.

---

* 1897-ம்வருஷத்தில் நாகலாபுரம் உயர்திரு:— தங்கவேலு செட்டியார் அச்சிட்ட பிரதி.

## ஆசிரிய விருத்தம்.

பிறைமுடிப் பெம்மானளித்த வாரணமுடிப்
பிறங்கு மோங் காரபீடப்
பெற்றியுறு மணிமகுடமுற்றமு விருமுடியும்
பெறுபூர்ண சந்த்ர முகமும்
நிறைமருவு பன்னிருபு யாசலமு மதுவூற்று
நீபமலர் மாலை மார்பும்
நிகரிலறு பதமுரல முருகொழுகு சலசமென
நிலவு செம் பதயுகளமும்
இறைமருவு ஸ்ரீவள்ளி தெய்வகுஞ் சரிமருவு
மெழின்மருவு மிருமருங்கும்
எளியனேன் கண்டுதரி சித்துய்ய சித்ரமயி
லேறிவந் தருள் புரிகுவாய்
திறைமருவு தண்கடற் புவிமகட் பிறைநுதற்
றிலகநேர் சென்னைநகர் வாழ்
செருவிலசு ரர்கணந்த மருவுமுமை யவடந்த
திருவளர்வை வேற்கந்தனே. (க)

மான்மழு கரத்தனிருமூவிழி வழிப்போந்து
வண்சரவ ணத்துமை தொட
வயங்கறு முகக்கடவு ளாகிப் பராசரன்
மதலையர்க் கருள்சுரந்து
கான்மருவு கமலனைச் சிறையிட் டரற்குமோங்
காரவுட் பொருள் விரித்துக்
கனமெழுந் தகலூர்ந்து கிரவுஞ்ச மொடுதொரு
கனைவென் றெழிற் செந்திலில்
வான்மருவு மகவானுளந் தேற்றி மாகேந்த்ர
மன்னுசூர் முதலழித்து

வள்ளியொடு தெய்வகுஞ் சரியை மணந்தமரர்
வன்சிறை தவிர்த்த குகனே
தேன்மருவு குழன்மாதர் மயலறுத் தாண்டருட்
சென்னைமா நகரின் வாழுஞ்
செருவிலசு ரர்கணந்த மருவுமுமை யவடந்த
திருவளர்வை வேற்கந்தனே. (௨)

சங்காழி கைக்கொண்ட நெடுமால்வை குந்தமுஞ்
சலசாசனத்தன் பதமும்
தருநீழ லரசுபுரி வோன்பதமு முற்பவந்
தருவற் கேதுவல்லாற்
பங்காரு மம்பிகா பதியாகு மெம்பிரான்
பக்ஷமுற் றினிது கேட்பப்
பரமகுரு வாய்ப்பிரண வார்த்தமுப தேசித்த
பன்னிரு கரத்தையநின்
கொங்கா ரெழிற்பதாம் புயமேத்து மெய்யன்பர்
கூட்டுணும் பெருவாழ்வினைக்
கொடுத்திடா வெனவெறுத் துனைவந் தடுத்தவிக்
கொடியனேற் கருள்வதென்றோ
சிங்கார மடமாத ரங்கேறு மேனிலைச்
சென்னைமா நகரில்வாழும்
செருவிலசு ரர்கணந்த மருவுமுடை யவடந்த
திருவளர்வை வேற்கந்தனே. (௩)

பார்பரவு ஸ்ரீகந்த கைலாய மேரகம்
பரங்குன்று மயிலாசலம்
பழமுதிர் சோலைதிரு வாயினன் குடிதணிகை
பன்றுசிரலை வாயெழிற்
பேர்பரவு கதிர்காமம் போரூர் விராலிமலை
பீடுறுபுண் ஞறுறையும்வேளூர்

பேசு முருகன் பூண்டி குன்றுதோ றூடற்
பிறங்குசெந் தில்வேங்கடம்
மார்பரவு செங்கோ டுடுப்பைசுப் பிரமணியங்
கவின்மேவு குமரகோட்டம்
கருதுமித் தலமேவு நீயென் மனத்தலக்
கண்ணும் வீற்றருளீகுவாய்
சீர்பரவு மெழில்வீதி யணியணி விளங்குறுஞ்
சென்னைமா நகரில்வாழுஞ்
செருவிலசு ரர்கணந்த மருவுமுமை யவடந்த
திருவளர்வை வேற் கந்தனே. (ச)

சாற்றுநின் தந்தைபெரு மலையைக் குழைத்தவன்
தாயுமலை யீன்ற வமலை
தமயனொரு மலையினைக் கையே டெனக்கொண்டு
சாற்று பாரத மெழுதினோன்
நாற்றிசைப் புகழுநின் மாமனோர் மலையினை
நண்ணுகைக் குடை யாக்கினோன்
நடவைபடு தடமலையை நொடியில்பொடி படகடவு
நடுவே லெடுத்த குகநீ
போற்றுறக் குன்றுதொறு நின்றுவிளை யாடுறும்
புண்ணிய னினக்கென்மனப்
பொருப்பை நெகிழ் வித்துவா சம்புரித லெளியதே
போக்கொன்று நவிலா தருட்
சேற்றிதழ்க் கமலமலர் நாப்பணஞ் சேவிலகு
சென்னைமா நகரில்வாழுஞ்
செருவிலசு ரர்கணந்த மருவுமுமை யவடந்த
திருவளர்வை வேற் கந்தனே. (ரு)

ஆராயின் மிகுதுயர்க் காழிபோ னிற்குமிவ்
வகிலப் பிரபஞ்ச வாழ்வை
ஐயனே மெய்யெனக் கொண்டுளத் தெழுசெருக்
காற்றடங் கண்ணிளமுலைத்
தாரார் குழற்றைய லார்மயங் குறுமாறு
தாழ்மலப் பீறலுடலைச்

சரிகையுடை யான்முடி மைப்பொட் டணிந்துநற்
சாந்து சவ்வாது பூசி
நேராக பெரியோர்கள் வரிலெழுந் தஞ்சலி
நிகழ்த்தாது காமுகரையே
நேசித் துழன்றவிக் கொடியனேன் தீமையை
நீக்கியாண் டருள் புரிகுவாய்
சீரார் வயற்செந்நெல் கன்னலென மன்னுறுஞ்
சென்னைமா நகரில்வாழுஞ்
செருவிலசு ரர்கணந்த மருவுமுமை யவடந்த
திருவளர்வை வேற்கந்தனே. (சு)

மருவுறு கடப்பமலர் மாலையணி மார்பனே
மருவு பன்னிரு கையனே
மாருப் பெரும்பிணிக் கருமருந்தே திவ்ய
மணமேவு கற்பதருவே
பருவரற் கொண்டு மதுரைச்சங்க வாணன்முன்
பாடுமாற்றுப் படைக்குப்
பக்ஷமுற்றுக் கற்கிமுகி யழியு மாறுவேற்
படைவிட் டடர்த்த குகனே
கருதரிய அரிபிரம ராதியெத் தேவருங்
கைகூப்பி நின்றிறைஞ்சுங்
கமல சரணம்புயக் கடவுளே யென்றுன்மேற்
கவிபாட வரமீகுவாய்
திருமக ளிருந்துநட னஞ்செயுங் கமலநிகர்
சென்னைமா நகரில் வாழும்
செருவிலசு ரர்கணந்த மருவுமுமை யவடந்த
திருவளர்வை வேற்கந்தனே. (எ)

வள்ளிமண வாளனே யுள்ளுமடி யார்க்கருளும்
வள்ளலே தெள்ளமுதமே
வடியாத கருணைவா ரிதியே சிவாநந்த
வடிவமே யளிகள் முரலுங்

கள்ளொழுகு நீபமலர் மாலிகா பரணனே
கருணு கடாக்ஷ குருவே
கண்ணி னுண்மணியே யம்மணியி னெளியேசிவ
காமிமகி ழிளைய குமரா
புள்ளிமயி லேறியொரு முருகா வெனக்கதறும்
பூவைமு னெழுந்தருளியே
புனேவளைக் கையுதவு புண்ணியா நின்புகழ்
போற்றுமெளி யேற்கருள் செய்வாய்
தெள்ளுதமிழ் வாணர்பயில் செந்தமிழ்க் கழகநிறை
சென்னைமா நகரில் வாழும்
செருவிலசு ரர்கணந்த மருவுமுமை யவடந்த
திருவளர்வை வேற்கந்தனே. (அ)

ஏதுமறி யாதசிறி பேனையாட் கொள்ளவிதி
யில்லையெனி லோவிடுகிலேன்
எழின்மேவு குமாருரு பரமுநிவ னுக்குவய
தெத்தனேகொ னீயாட்கொளும்
போதுரைத் தருள்கவன் னுன்சொலுங் கவிமாலே
புனேவிருப் பாலென்னிலோ
புகலுநான் மறைநின்னே வேண்டுதல் வேண்டாமை
பூண்டிலா னென விழுக்காம்
ஆதலால் வறுமைகொடு நோய்மனத் துயர்முதல
வணுகாம லாதரித் தீண்
டறுதினமு மறவாது னுறெழுத் தோதுமெய்
யன்புதந் தருள் புரிகுவாய்
சீதவய லிற்சங்கி னம்பிரண வத்தொனிசெய்
சென்னைமா நகரில் வாழும்
செருவிலசு ரர்கணந்த மருவுமுமை யவடந்த
திருவளர்வை வேற்கந்தனே. (கூ)

நிலமேவு செந்தமிழ்க் கல்விவேண் டுங்கற்ற
நெறிமுறையி னிற்றல் வேண்டும்
நிகரிலாத் திருமாதி னருள்வேண்டு மவ்வருளு
நிலைபெற் றிருத்தல் வேண்டும்
தலமேவு தானதரு மம்புரிதல் வேண்டுமது
சற்பாத்திரத்தில் வேண்டும்
தங்குநின் னன்பர் பெரி யோரன்பு வேண்டுமத்
தகையன்ப ருறவை வேண்டும்
புலனெனு மருவுமனை மக்களொ டெனக்குமுன்
பூரண கடாக்ஷம் வேண்டும்
புனவள்ளி தெய்வயானைத் தாயருள் வேண்டும்
புனிதநீ அருள் புரிகுவாய்
திகலநுத லார்குழற் றேனருவி பாய்வயற்
சென்னைமா நகரில்வாழும்
செருவிலசு ரர்கணந்த மருவுமுமை யவடந்த
திருவளர்வை வேற்கந்தனே. (௧0)

## வாழ்த்து.

### எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

வேதமுட னாகம புராணம் வாழி
மிகுசைவத் துறைவாழி வேள்விவாழி
மேதகைய வானவர் மானவரும் வாழி
வேல்வாழி மயில்வாழி விளங்கு சென்னை
மாதலக்கந் தகோட்டத் துறையு மெந்தை
மலர்ச் சரணம்வாழி இத்தோத்திரமும் வாழி
சாதகமாயிந்த அச்சிட்டுதவு சைதை
பாலசுந்த்ர வள்ள லென்றும் வாழ்க மாதோ.

முற்றிற்று.

---

ஓம்

அருட் பெருஞ்ஜோதி தனிப்பெருங் கருணை.

ஜனனம் : 5-10-1823. (கலி 4925ல் சுபாநுஸ்ரீ புரட்டாசி 21 ஆதிவாரம் சித்திரை நட்சத்திரம்.)



சின்மாத்திர சகஜ சமாதி கலி 4978ல் ஸ்ரீமுகஸ்ரீ தைமீ 19 சுக்கிரவாரம் புனர்பூச நக்ஷத்திரம்.

வடலூர்—சிதம்பரம் ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள்.

ஓம்

செட்டிக்குமரன் துணை.

அருட்பெருஞ் சித்தராய்

திருவருட் பிரகாச வள்ளலார்

என்னும்

வடலூர்—சிதம்பரம்

# ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள்

திருவாய் மலர்ந்தருளிய

# தெய்வ மணி மாலை.

இரட்டாசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

திருவோங்கு புண்ணியச் செயலோங்கி யன்பருட்
டிறலோங்கு செல்வ மோங்கச்
செறிவோங்க வறிவோங்கி நிறைவான வின்பந்
திகழ்ந்தோங்க வருள்கொடுத்து
மருவோங்கு செங்கமல மலரோங்கு வணமோங்க
வளர்கருணை மயமோங்கி யோர்
வரமோங்கு தெள்ளமுத வயமோங்கி யானந்த
வடிவாகி யோங்கி ஞான
உருவோங்கு முணர்வினிறை யொளியோங்கி யோங்குமயி
லூர்ந்தோங்கி யெவ்வுயிர்க்கும்
உறவோங்கு நின்பதமெ னுளமோங்கி வளமோங்க
வுய்கின்ற நாளெந்த நாள்

தருவோங்கு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. க

பரமேது வினைசெயும் பயனேது பதியேது
பசுவேது பாச மேது
பத்தியே தடைகின்ற முத்தியே தருளேது
பாவபுண் யங்க ளேது
வரமேது தவமேது விரதமே தொன்றுமிலை
மனம் விரும் புணவுண்டுநல்
வத்திரம ணிந்துமட மாதர்தமை நாடிநறு
மலர்சூடி விளையாடி மேற்
கரமேவ விட்டுமுலை தொட்டுவாழ்ந் தவரொடு
கலந்துமகிழ் கின்ற சுகமே
கண்கண்ட சுகமிதே கைகண்ட பலனெனுங்
கயவரைக் கூடா தருள்
தரமேவு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. உ

துடியென்னு மிடையனம் பிடியென்னு நடைமுகில்
துணையெனும் பிணைய லளகஞ்
சூதென்னு முலைசெழுந் தாதென்னு மலைபுனற்
சுழியென்ன மொழி செயுந்தி
வடியென்னும் விழிநிறையு மதியென்னும் வதனமென
மங்கையர்த மங்க முற்றே
மனமென்னு மொருபாவி மயலென்னு மதுமேவி
மாழ்கநான் வாழ்க விந்தப்

படியென்னு மாசையைக் கடியென்ன வென்சொலிப்
படியென்ன வறியா துநின்
படியென்ன வென்மொழிப் படியின்ன வித்தைநீ
படியென்னு.மென்செய் குவேன்
தடிதுன்னு மதில்சென்னை கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. ரு

வள்ளலுனை யுள்ளபடி வாழ்த்துகின் றோர்தமை
மதித்திடுவ தன்றி மற்றை
வானவரை மதியென்னி னனவரை யொரு கனவின்
மாட்டினு மறந்து மதியேன்
கள்ளமறு முள்ளமுறு நின்பதம லால்வேறு
கடவுளர் பதத்தை யவரென்
கண்ணெதி ரடுத்தைய நண்ணென வளிப்பினுங்
கடுவென வெறுத்து நிற்பேன்
எள்ளளவு மிம்மொழியி லேசுமொழி யன்றுண்மை
என்னையாண் டருள் புரிகுவாய்
என்றந்தை யேயெனது தாயேயெ னின்பமே
என்றனறி வேயெ னன்பே
தள்ளரிய சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. சு

பதிபூசை முதலநற் கிரியையான் மனமெனும்
பசுகரண மீங்க சுத்த
பாவனை யறச்சுத்த பாவனையி னிற்குமெய்ப்
பதியோக நிலைமை யதனுன்

மதிபாச மற்றதி னடங்கிடு மடக்கவே
மலைவின்மெய்ஞ் ஞான மயமாய்
வரவுபோக் கற்றநிலை கூடுமென வெனதுளே
வந்துணர்வு தந்த குருவே
துதிவாய்மை பெறுசாந்த பதமேவு மதியமே
துரிசறு சுயஞ்சோதியே
தோகைவா கனமீ திலங்கவரு தோன்றலே
சொல்லரிய நல்ல துணையே
ததிபெறுஞ் சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. ௬

காமவுட் பகைவனுங் கோபவெங் கொடியனுங்
கனலோப முழுமூ டனுங்
கடுமோக வீணனுங் கொடுமதமெ னுந்துட்ட
கண்கெட்ட வாங்கா ரியும்
ஏமமறு மாச்சரிய விழலனுங் கொலையென்
றியம்புபா தகனு மாவிவ்
வெழுவரு மிவர்க்குற்ற வுறவான பேர்களும்
எனைப்பற்றி டாம லருள்வாய்
சேமமிகு மாமறையி னோமெனு மருட்பதத்
திறனருளி மலய முனிவன்
சிந்தனையின் வந்தனையு வந்தமெய்ஞ் ஞானசிவ
தேசிக சிகார தனமே
தாமமொளிர் சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தல மோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. ௭

படியென்னு மாசையைக் கடியென்ன வென்சொலிப்
படியென்ன வறியா துநின்
படியென்ன வென்மொழிப் படியின்ன வித்தைநீ
படியென்னு.மென்செய் குவேன்
தடிதுன்னு மதில்சென்னை கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே.

வள்ளலுனை யுள்ளபடி வாழ்த்துகின் றோர்தமை
மதித்திடுவ தன்றி மற்றை
வானவரை மதியென்னி னனவரை யொரு கனவின்
மாட்டினு மறந்து மதியேன்
கள்ளமறு முள்ளமுறு நின்பதம லால்வேறு
கடவுளர் பதத்தை யவரென்
கண்ணெதி ரடுத்தைய நண்ணென வளிப்பினுங்
கடுவென வெறுத்து நிற்பேன்
எள்ளளவு மிம்மொழியி லேசுமொழி யன்றுண்மை
என்னையாண் டருள் புரிகுவாய்
என்றந்தை யேயெனது தாயேயெ னின்பமே
என்றனறி வேயெ னன்பே
தள்ளரிய சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே.

பதிபூசை முதலநற் கிரியையான் மனமெனும்
பசுகரண மீங்க சுத்த
பாவனை யறச்சுத்த பாவனையி னிற்குமெய்ப்
பதியோக நிலைமை யதனுன்

மதிபாச மற்றதி னடங்கிடு மடக்கவே
மலைவின்மெய்ஞ் ஞான மயமாய்
வரவுபோக் கற்றநிலை கூடுமென வெனதுளே
வந்துணர்வு தந்த குருவே
துதிவாய்மை பெறுசாந்த பதமேவு மதியமே
துரிசறு சுயஞ்சோதியே
தோகைவா கனமீ திலங்கவரு தோன்றலே
சொல்லரிய நல்ல துணையே
ததிபெறுஞ் சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. ௫

காமவுட் பகைவனுங் கோபவெங் கொடியனுங்
கனலோப முழுமூ டனுங்
கடுமோக வீணனுங் கொடுமதமெ னுந்துட்ட
கண்கெட்ட வாங்கா ரியும்
ஏமமறு மாச்சரிய விழலனுங் கொலையென்
றியம்புபா தகனு மாவிவ்
வெழுவரு மிவர்க்குற்ற வுறவான பேர்களும்
எனைப்பற்றி டாம லருள்வாய்
சேமமிகு மாமறையி னேமெனு மருட்பதத்
திறனருளி மலய முனிவன்
சிந்தனையின் வந்தனையு வந்தமெய்ஞ் ஞானசிவ
தேசிக சிகாம ணியே
தாமமொளிர் சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தல மோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. ௬

நிலையுறு நிராசையா முயர்குலப் பெண்டிரொடு
நிகழ்சாந்த மாம்பு தல்வனும்
நெறிபெறு முதாரகுண மென்னுநற் பொருளுமருள்
நீக்கு மறிவாந் துணைவனும்
மலைவறு நிராங்கார நண்பனுஞ் சுத்தமுறு
மனமென்னு நல்லே வலும்
வருசகல கேவல மிலாதவிட மும்பெற்று
வாழ்கின்ற வாழ்வருளுவாய்
அலையிலாச் சிவஞான வாரியே யானந்த
வமுதமே குமுத மலர்வாய்
அணிகொள்பொற் கொடிபசுங் கொடியிரு புறம்படர்ந்
தழகுபெற வருபொன் மலையே
தலைவர்புகழ் சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. எ

ஒருமையுட னினதுதிரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்த முறவு வேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
உறவுகல வாமை வேண்டும்
பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண் டும்பொய்ம்மை
பேசா திருக்க வேண்டும்
செருநெறி பிடித்தொழுக வேண்டுமெத மானபேய்
பிடியா திருக்க வேண்டும்
மருவுபெண் ணாசையை மறக்கவே வேண்டுமுனை
மறவா திருக்க வேண்டும்
மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டு நோயற்ற
வாழ்வினான் வாழ வேண்டும்

தருமமிகு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே.

ஈயென்று நானொருவ ரிடநின்று கேளாத
வியல்புமென் னிடமொ ருவரீ
திடுவென்ற போதவர்க்கி லையென்று சொல்லாமல்
இடுகின்ற திறமு மிறையாம்
நீயென்று மெனைவிடா நிலையுநா னென்றுமுன்
நினைவிடா நெறியு மயலார்
நிதியொன்று நயவாத மனமுமெய்ந் நிலையென்று
நெகிழாத திடமு முலகிற்
சீயென்று பேயென்று நாயென்று பிறர்தமைத்
தீங்குசொல் லாத தெளிவும்
திரமொன்று வாய்மையுந் தூய்மையுந் தந்துநின்
திருவடிக் காளாக் குவாய்
தாயொன்று சென்னையிற் கந்தகோட்டத்துள்வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே.

கரையில்வீண் கதையெலா முதிர்கருங் காக்கைபோற்
கதறுவார் கள்ளுண் டதீக்
கந்தநா றிடவூத்தை காதநா றிடவுறு
கடும்பொயிரு காத நாற
வரையில்வாய் கொடுதர்க்க வாதமிடு வார்சிவ
மணங்கமழ் மலர்ப்பொன் வாய்க்கு
மவுனமிடு வாரிவரை மூடரென வோதுறு
வழக்குநல் வழக்கெனினு நான்

உரையிலவர் தமையுரு துனதுபுகழ் பேசுமவ
ரோடுறவு பெறவ ருளுவாய்
உயர்தெய்வ யானையொடு குறவர்மட மானுமுள்
உவப்புறு குணக்குன் றமே
தரையிலுயர் சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. க0

நாம்பிரம நமையன்றி யாம்பிரமம் வேறில்லை
நன்மைதீ மைகளு மில்லை
நவில்கின்ற வாகியாந் தரமிரண் டினுமொன்ற
நடுநின்ற தென்று வீணாள்
போம்பிரம நீதிகேட் போர்பிரமை யாகவே
போதிப்பர் சாதிப்பர் தாம்
புன்மைநெறி கைவிடார் தம்பிரமம் வினையொன்று
போந்திடிற் போக விடுவார்
சாம்பிரம மாமிவர்கள் தாம்பிரம மெனுமறிவு
தாம்புபாம் பெனுமறிவு காண்
சத்துவ வகண்டபரி பூரண காரவுப
சாந்தசிவ சிற்பிரம நீ
தாம்பிரிவில் சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. கக

பார்கொண்ட நடையில்வன் பசிகொண் டுவந்திரப்
பார்முகம் பார்த்தி ரங்கும்
பண்புநின் றிருவடிக் கன்புநிறை யாயுளும்
பதியுநன் னிதியு முணர்வும்

சீர்கொண்ட நிறையுமுட் பொறையுமெய்ப் புகழுநோய்த்
தீமையொரு சற்று மணுகாத்
திறமுமெய்த் திடமுநல் லிடமுநின் னடியர்புகழ்
செப்புகின் றோரடைவர் காண்
கூர்கொண்ட நெட்டிலைக் கதிர்வேலு மயிலுமொரு
கோழியங் கொடியும் விண்ணோர்
கோமான்றன் மகளுமொரு மாமான்றன் மகளுமால்
கொண்டநின் கோலமற வேன்
தார்கொண்ட சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. கஉ

வன்பெருநெ ருப்பினைப் புன்புழுப் பற்றுமோ
வானையொரு மான்ற வுமோ
வலியுள்ள புலியையோ ரெலிசீறு மோபெரிய
மலையையோ ரீச்சி றகினல்
துன்புற வசைக்குமோ வச்சிரத் தூணொரு
துரும்பினாற் றுண்ட மாமோ
சூரியனை யிருள்வந்து சூழுமோ காற்றின்மழை
தோயுமோ வில்லை யதுபோல்
அன்புடைய நின்னடியர் பொன்னடியை யுன்னுமவர்
அடிமலர் முடிக்கணிந் தோர்க்
கவலமுறு மோகாமம் வெகுளியுறு மோமனத்
தற்பமும் விகற்ப முறுமோ
தன்புகழ்செய் சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. கா

கானலிடை நீருமொரு கட்டையிற் கள்வனுங்
காணுறு கயிற்றி லரவுங்
கடிதரு கிளிஞ்சிலிடை வெள்ளியும் பொன்னைக்
கதித்தபித் தளையி னிடையும்
மானலிற் கண்டுள மயங்கல்போற் கற்பனையை
மாயையிற் கண்டு வீணே
மனையென்று மகவென்று முறவென்று நிதியென்றும்
வாழ்வென்று மான மென்றும்
ஊனலி னுடம்பென்று முயிரென்று முளமென்றும்
உள்ளென்றும் வெளியென் றும்வான்
உலகென்று மளவறுவி காரமுற நின்றவெனை
உண்மையறி வித்த குருவே
தானமிகு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. கச

கற்றொளிகொ ளுணர்வினோர் வேண்டாத விப்பெருங்
கன்மவுட லிற்ப ருவநேர்.
கண்டழியு மிளமைதான் பகல்வேட மோபுரைக்
கடனீர்கொ லோகபடமோ
உற்றொளியின் வெயில்விட்ட மஞ்சளோ வாளிட்ட
வொருவிலோ நீர்க்கு மிழியோ
உலையனல் பெறக்காற்று ளூதுந் துருத்தியோ
வொன்றுமறி யேனி தனைநான்
பற்றுறுதி யாக்கொண்டு வனிதையர்கண் வலையினிற்
பட்டுமதி கெட்டு ழன்றே
பாவமே பயில்கின்ற தல்லாது நின்னடிப்
பற்றணுவு முற்ற றிகிலேன்

சற்றையகல் சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் தூய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. கரு

சடமாகி யின்பந்த ராதாகி மிகுபெருஞ்
சஞ்சலா கார மாகிச்
சற்றுகி வெளிமயற் பற்றுகி யோடுமித்
தன்மைபெறு செல்வ மந்தோ
விடமாகி யொருகபட நடமாகி யாற்றிடை
விரைந்துசெலும் வெள்ள மாகி
வேலையலை யாகியாங் காரவலை யாகிமுதிர்
வேனிலுறு மேக மாகிக்
கடமாய சகடமுறு காலாகி நீடுவாய்க்
காலோடு நீரா கியே
கற்பிலா மகளிர்போற் பொற்பிலா துழலுமிது
கருதாத வகைய ருளுவாய்
தடமேவு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. கசு

உப்பிட்ட பாண்டமென வொன்பது துவாரத்துள்
உற்றசும் பொழுகு முடலை
உயர்கின்ற வானிடையெ றிந்தகல் லென்றுமலை
உற்றிழியு மருவி யென்றும்
வெப்புற்றி காற்றிடைவி ளக்கென்று மேகமுறு
மின்னென்று வீசு காற்றின்
மேற்பட்ட பஞ்சென்று மஞ்சென்றும் வினைதந்த
வெறுமாய வேட மென்றும்

கப்புற்ற பறவைக் குடம்பையென் றும்பொய்த்த
கனவென்று நீரி லெழுதுங்
கையெழுத் தென்றுமுட் கண்டுகொண் டதிலாசை
கைவிடே னென்செய் குவேன்
தப்பற்ற சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. கஎ

எந்தைநினை வாழ்த்தாத பேயர்வாய் கூழுக்கு
ஏக்கற்றி ருக்கும் வெறுவாய்
எங்கள்பெரு மானுனை வணங்காத மூடர்தலை
இகழ்விற கெடுக்குந் தலை
கந்தமிகு நின்மேனி காணாத கயவர்கண்
கலநீர் சொறிந்த வழுகண்
கடவுணின் புகழ்தனைக் கேளாத வீணர்செவி
கைத்திழவு கேட்குஞ் செவி
பந்தமற நினையெணாப் பாவிகட னெஞ்சம்
பகீரென நடுங்கு நெஞ்சம்
பரமநின் றிருமுன்னர் குவியாத வஞ்சர்கை
பலியேற்க நீள்கொ டுங்கை
சந்தமிகு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. கஅ

ஐயநின் சீர்பேசு செல்வர்வாய் நல்லதெள்
அமுதுண் டுவந்த திருவாய்
அம்பநின் றிருவடி வணங்கினோர் தலைமுடி
அணிந்தோங்கி வாழுந் தலை

மெய்யநின் றிருமேனி கண்டபுண் ணியர்கண்கள்
மிக்கவொளி மேவு கண்கள்
வேலநின் புகழ்கேட்ட வித்தகர்தி ருச்செவி
விழாச்சுபங் கேட்குஞ் செவி
துய்யநின் பதமெண்ணு மேலோர்க ணெஞ்சமெய்ச்
சுகரூப மான நெஞ்சம்
தோன்றலுன் றிருமுன்கு வித்தபெரி யோர்கைகள்
சுவர்ணமிடு கின்ற கைகள்
சைவமுயர் சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. கசு

உழலுற்ற வுழவுமுத லுறுதொழிலி யற்றிமல
மொத்தபல பொருளீட் டிவீண்
உறுவயிறு நிறையவெண் சோறடைத் திவ்வுடலை
ஓதிபோல் வளர்த்து நாளும்
விழலுற்ற வாழ்க்கையை விரும்பினே னையவிவ்
வெய்யவுடல் பொய்யென் கிலேன்
வெளிமயக் கோமாய விடமயக் கோவெனது
விதிமயக் கோவ றிகிலேன்
கழலுற்ற நின்றுணைக் கான்மலர் வணங்கிநின்
கருணையை விழைந்து கொண்டெங்
களைகணே யீராறு கண்கொண்ட வென்றனிரு
கண்ணேயெ னப்புகழ் கிலேன்
தழைவுற்ற சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. உ௦

வானமெங் கேயமுத பானமெங் கேயமரர்
வாழ்க்கையபி மான மெங்கே
மாட்சியெங் கேயவர்கள் சூழ்ச்சியெங் கேதேவ
மன்னனர சாட்சி யெங்கே
ஞானமெங் கேமுனிவர் மோனமெங் கேயந்த
நான்முகன் செய்கை யெங்கே
நாரணன் காத்தலை நடத்தலெங் கேமறை
நவின்றிடு மொழுக்க மெங்கே
ஈனமங் கேசெய்த தாருகனை யாயிர
இலக்கமுறு சிங்க முகனை
எண்ணரிய திறல்பெற்ற சூரனைம றக்கருணை
ஈந்துபணி கொண்டி லையெனில்
தானமிங் கோ்சென்னை கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. உக

மனமான வொருசிறுவன் மதியான குருவையு
மதித்திடா னின்ன டிச்சீர்
மகிழ்கல்வி கற்றிடான் சும்மாவி ரான்காம
மடுவினிடை வீழ்ந்து சுழல்வான்
சினமான வெஞ்சுரத் துழலுவனு லோபமாஞ்
சிறுகுகையி னூடு புகுவான்
செறுமோக விருளிடைச் செல்குவான் மதமெனுஞ்
செய்குன்றி லேறி விழுவான்
என்சொல்கே ளானெனது கைப்படான் மற்றிதற்
கேழையே னென்செய் குவேன்
இனமான மாச்சர்ய வெங்குழியி னுள்ளே
இறங்குவான் சிறிது மந்தோ

தணீடு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. உஉ

வாய்கொண்டு டுரைத்தலரி தென்செய்கே னென்செய்கேன்
வள்ளலுன் சேவ டிக்கண்
மன்னுது பொன்னுசை மண்ணுசை பெண்ணுசை
வாழ்ந்துழலு மெனது மனது
பேய்கொண்டு கள்ளுண்டு கோலினுன் மொத்துண்டு
பித்துண்ட வன்கு ரங்கோ
பேசுறு குலாலனுற் சுழல்கின்ற திகிரியோ
பேதைவிளை யாடு பந்தோ
காய்கொண்டு பாய்கின்ற வெவ்விலங் கோபெருங்
காற்றினுல் சுழல்க றங்கோ
காலவடி வோவிந்த்ர ஜாலவடி வோவெனது
கர்மவடி வோவறி கிலேன்
தாய்கொண்ட சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. உங

கற்றமே லவரொடுங் கூடிநில் லேன்கல்வி
கற்குநெறி தேர்ந்து கல்லேன்
கனிவுகொண் டுனதுதிரு வடியையொரு கனவினுங்
கருதிலே னல்ல னல்லேன்
குற்றமே செய்வதென் குணமாகு மப்பெருங்
குற்றமெல் லாங்கு ணமெனக்
கொள்ளுவது நின்னருட் குணமாகு மென்னிலென்
குறைதவிர்த் தருள் புரிகுவாய்

பெற்றமேல் வருமொரு பெருந்தகையி னருளுருப்
பெற்றெழுந் தோங்கு சுடரே
பிரணவா காரசின் மயவிமல சொருபமே
பேதமில் பரப்பி ரமமே
தற்றகைய சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. உச

பாய்ப்பட்ட புலியன்ன நாய்ப்பட்ட கயவர்தம்
பாழ்ப்பட்ட மனையி னெடுநாட்
பண்பட்ட கழுநீரும் விண்பட்ட வின்னமுது
பட்டபா டாகு மன்றிப்
போய்ப்பட்ட புல்லுமணி பூப்பட்ட பாடுநற்
பூண்பட்ட பாடு தவிடும்
புண்பட்ட வுமியுமுயர் பொன்பட்ட பாடவர்கள்
போகமொரு போக மாமோ
ஆய்ப்பட்ட மறைமுடிச் சேய்ப்பட்ட நின்னடிக்
காட்பட்ட பெருவாழ் விலே
அருள்பட்ட நெறியுமெய்ப் பொருள்பட்ட நிலையுமுற
அமர்போக மேபோ கமாம்
தாய்ப்பட்ட சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. உரு

சேவலுங் கொடிகொண்ட நிலையன்றி வேறுசிறு
தேவரைச் சிந்தை செய்வோர்
செங்கனியை விட்டுவேப் பங்கனியை யுண்ணுமொரு
சிறுகருங் காக்கை நிகர்வார்

நாவலங் காரமற வேறுபுகழ் பேசிநின்
நற்புகழ் வழுத்தா தபேர்
நாய்ப்பால் விரும்பியான் றாய்ப்பாலை நயவாத
நவையுடைப் பேய ராவார்
நீவலந் தரநினது குற்றேவல் புரியாது
நின்றுமற் றேவல் புரிவோர்
நெல்லுக் கிறைக்காது புல்லுக் கிறைக்கின்ற
நெடியவெறு வீண ராவார்
தாவலஞ்சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. ௨௬

பிரமனினி யென்னைப் பிறப்பிக்க வல்லனோ
பெய்சிறையி லின்னு மொருகாற்
பின்பட்டு நிற்குமோ முன்பட்ட குட்டிற்
பெறுந்துயர் மறந்து விடுமோ
இரவுநிற முடையியம னினியெனைக் கனவினும்
இறப்பிக்க வெண்ண முறுமோ
என்னுரு னுதையுண்டு சிதையுண்ட தன்னுடல்
இருந்தவடு வெண்ணு றானோ
கரவுபெறு வினைவந்து நலியுமோ வதனையொரு
காசிக்கு மதியே னெலாங்
கற்றவர்கள் பற்றுநின் திருவருளை யானுங்
கலந்திடப் பெற்று நின்றேன்
தரமருவு சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகச் தெய்வ மணியே. ௨௭

நீருண்டு பொழிகின்ற காருண்டு விளைகின்ற
நிலனுண்டு பலனு முண்டு
நிதியுண்டு துதியுண்டு மதியுண்டு கதிகொண்ட
நெறியுண்டு நிலையு முண்டு
ஊருண்டு பேருண்டு மணியுண்டு பணியுண்டு
வுடையுண்டு கொடையு முண்டு
உண்டுண்டு மகிழவே வுணவுண்டு சாந்தமுறும்
உளமுண்டு வளமு முண்டு
தேருண்டு கரியுண்டு பரியுண்டு மற்றுள்ள
செல்வங்கள் யாவு முண்டு
தேனுண்டு வண்டுறு கடம்பணியு நின்பதத்
தியானமுண் டாயி லரசே
தாருண்ட சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. உஅ

உளமெனது வசநின்ற தில்லையென் தொல்லைவினை
ஒல்லைவிட் டிடவு மில்லை
உன்பதத் தன்பில்லை யென்றனுக் குற்றதுணை
உனையன்றி வேறு மில்லை
இளையனவ னுக்கருள வேண்டுமென் றுன்பால்
இசைக்கின்ற பேரு மில்லை
ஏழையவ னுக்கருள்வ தேனென்று னெதிர்நின்
றியம்புகின் றோரு மில்லை
வளமருவு முனதுதிரு வருள்குறைவ தில்லைமேன்
மற்றொரு வழக்கு மில்லை
வந்திரப் போர்களுக் கில்லையென்ப தில்லைநீ
வன்மனத் தவனு மல்லை

தளர்விலாச் சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. உ௯

எத்திக்கு மென்னுளந் தித்திக்கு மின்பமே
என்னுயிர்க் குயிரா குமோர்
ஏகமே யானந்த போகமே யோகமே
என்பெருஞ் செல்வ மேநன்
முத்திக்கு முதலான முதல்வனே மெய்ஞ்ஞான
மூர்த்தியே முடிவி லாத
முருகனே நெடியமான் மருகனே சிவபிரான்
முத்தாடு மருமை மகனே
பத்திக்கு வந்தருள் பரிந்தருளு நின்னடிப்
பற்றருளி யென்னை யிந்தப்
படியிலே யுழல்கின்ற குடியிலே யொருவனுப்
பண்ணும லாண்ட ருளுவாய்
சத்திக்கு நீர்ச்சென்னை கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. ௩0

நான்கொண்ட விரதநின் னடியலார் பிறர்தம்மை
நாடாமை யாகு மிந்த
நல்விரத மாங்கனியை யின்மையெனு மொருதுட்ட
நாய்வந்து கவ்வி யந்தோ
தான்கொண்டு போவதினி யென்செய்வே னென்செய்வேன்
தளராமை யென்னு மொருகைத்
தடிகொண் டடிக்கவோ வலியிலேன் சிறியனேன்
தன்முகம் பார்த்தரு ளுவாய்

வான்கொண்ட தெள்ளமுத வாரியே மிகுகருணை
மழையே மழைக்கொண் டலே
வள்ளலே யென்னிருகண் மணியேயெ னின்பமே
மயிலேறு மாணிக் கமே
தான்கொண்ட சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே. ௩௧

## தெய்வ மணி மாலை - முற்றுப்பெற்றது.

## அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை.

"உலகு குளிர வேமது மதியி லொழுகு மமுத கிரணமே
யுருகு மடிய ரிதய நெகிழ வுணர் விலெழு ந லுதயமே
கலையு நிறையு மறிவு முதிர முதிரு மதுர நறவமே
கழுவு துகளர் முழுக நெடிய கருணை பெருகுசல தியே
யலகில் புவன முடியும் வெளியி லளியு மொளியினி லயமே
யறிவு ளறிவை யறியு மவரு மறியவரிய பிரமமே
மலையின் மகள்கண் மணியை யனைய மதலை வருக வருகவே
வளமை தழுவு பரிதி புரியின் மருவு குமரன் வருகவே"

(முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழ்)

ஓம்

# அருணகிரி நாதர் திருப்புகழ்.

## திருப்போரூர்.

தனத்தா தானன தானு தானன
தனத்தா தானன தானு தானன
தனத்தா தானன தானு தானன தனதான

அனுத்தே னேர் மொழியாலே மாமய
லுடைத்தார் போலவு மோர்நா ளானதி
லடுத்தே தூதுகள் நூறுறுனதும் விடுவார்கள்

அழைத்தே வீடினிலே தா னேகுவர்
நகைத்தே மோடி களாவார் காதலோ
டடுத்தே மாமுலை மீதேமார்புற அணைவார்பின்

குனித்தே பாகிலை யீவார் பாதியில்
கடிப்பார் வாயிதழ்வாய் நீரானது
குடிப்பார் தேனெனை நானுலீலைகள் புரிவார்கள்

குறித்தே மாமய லாலே நீள்பொருள்
பறிப்பா ராசுகள் சூழ்மா பாதக
குணத்தார் மாதர்கள் மேலாசாவிட அருள்வாயே

வனத்தே வேடுவர் மாதா மோர்மினை
யெடுத்தே தான்வர வேதான் யாவரும்
வளைத்தே சூழவு மோர் வாளால் வெலும் விறல்வீரா

மலர்த் தே னேடையி லோர் மா வானதை
பிடித்தே நீள்கர வாதாடாழியை
மனத்தாலே விய மாமா லானவர் மருகோனே

சினத்தே சூரர்கள் போராய் மாளவு
மெடுத்தோர் வேல்விடு தீராதராணி
திருத்தோளா இரு பாதா தாமரை முருகோனே

திருத்தேர் சூழ்மதி ளேராா் தூபிக
ளடுக்கார் மாளிகை யேநீ ளேருள
திருப்போ ரூருறை தேவா தேவர்கள் பெருமாளே

ஓம்

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சென்னை

# சைவ சமய பக்தஜன சபை.

(1904-ம் வருடத்தில் ஸ்தாபிக்கப் பெற்றது.)

திருச்சிற்றம்பலம்.

சைவ சமயமே சமயஞ் சமயாதீதப் பழம் பொருளைக்
கைவந் திடவே மன்றுள்வெளி காட்டுமிந்தக் கருத்தை விட்டுப்
பொய்வந் துழலுஞ் சமயநெறி புகுத வேண்டா முத்திதருந்
தெய்வ சபையைக் காண்பதற்குச் சேர வாருஞ் சகத்திரே.

(தாயுமானவர்)

கலியுக வரதர் ஸ்ரீ கந்தப் பெருமானுர் ஆலயமென வழங்கும் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமியார் திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிராநின்ற, சென்னை மாநகரம் பெத்து நாய்க்கன்பேட்டை - தங்கசாலை வீதி 1/488 நெம்பர் கிருகத்தில் தற்காலம் அமைக்கப் பெற்றுள்ள சைவ சமய பக்தஜன சபையின் வரலாறு:—

(1) இச்சபை 1904-ஹு நவம்பர்மீ 17உக்குச் சரியான, தமிழ் குரோதிஹு கார்த்திகைமீ 3உ சோமவாரம், "செட்டிக் குமரன்" எனச் சிறப்புப்பெயர் பூண்ட, ஸ்ரீ கந்தப் பெருமான் திருவருள் நோக்கத்தோடு, நயினியப்ப நாய்க்கன்

வீதி, 62-வது நெம்பருள்ள கிருகத்தில், சைவத் திருவாளர்கள் கயப்பாக்கம்—சதாசிவ செட்டியார் B. A. அவர்கள், (தற்காலம் எருக்கஞ் சேரியில் வசிக்கும்) சென்னைநகர் கார்ப்பொரேஷன் கண்டிராக்டர் ப. கந்தசாமி செட்டியார் அவர்கள், இவ்விருவர் களது முயற்சியினுல் ஸ்தாபிக்கப்பெற்று, சிலநாள் பின்னர் ஷைநயினியப்ப நாய்க்கன்வீதி, 105-வது நெம்பருள்ள கிருகத் துக்கு மாற்றப்பட்டு, அன்று முதல் இன்று வரையும், சோம வாரந்தோறும், தமிழ் வேதமாகிய தேவார முதலிய பன்னிரு திருமுறைப் பாராயணம், ஆயிரவர்களாகிய வைசியகுல பேரி செட்டிகளால் சிறப்பாக நடைபெற்று வருகிற விஷயம் யாவ ரும் அறிந்ததே:—

(2) இச்சபையில் வயது வந்தவர்களே அங்கத்தினர் களாக விருக்கிறபடியால், சிறுவர் சிறுமியர்களுக்குத் தேவார பாடசாலைஒன்று அமைப்பது சிலாக்கியமெனத் தோன்றிற்று. அவ்வாறே, சிறுவர் சிறுமியர்களுக்குத் தேவார பாடசாலை 1905ஞு ஏப்ரல்மீ 17உ ஏற்படுத்தி, ஆதிவாரந்தோறும் இச்சபையின் ஸ்தாபகர், சைவத் திருவாளர். க. சதாசிவ செட்டியார் B. A. அவர்கள், சிறுவர் சிறுமியர்களுக்கு தேவார பாடம் கற்பித்து வந்தார். அச்சிறுவர்கள், அதனுல் அபிவிருத்தி அடைந்து, தற்போது இச்சபையில் தேவார பாராயணம் செய்து வருகிறுர்கள்.

(3) இச்சபையின் கருத்து:- சைவ சமயாசாரத்தை அபிவிருத்தி செய்து, அதற்குச் சாதனமாயுள்ள விபூதி-உருத் திராக்க மணிதல், சிவபுராண படனஞ் செய்தல், சைவ புரா ணம் பிரசங்கித்தல், சிவஸ்தல யாத்திரை செய்தல் முதலிய கயிங்கரியம் மோக்ஷ சாதனத்திற்குரியன வென்பதை இச்சபை யினர் அங்கீகரித்து நடத்தி வருகிறுர்கள்.

“எவ்வுயிரும் நீங்காதுறையும் இறை சிவனென்று



எவ்வுயிர்க்கும் அன்பாயிரு.”—சைவ சமயநெறி.

(1872) (1929)

(4) இச்சபையின் அக்கிராசனரும் ஸ்தாபகருமாகிய சைவத் திருவாளர். க. சதாசிவ செட்டியார் B. A. அவர்கள், சபை அங்கத்தினர்களைச் சென்ற 25-வருட காலத்திற்குள் சமய குரவர்களால் பாடப்பெற்ற சிவஸ்தலங்கள்—வைப்புத் தலங்கள் முதலிய 164-தலங்கள் வரை, யாத்திரையாக அழைத்துப் போனார். அந்தப் பெரும் புண்ணியப் பேற்றை இச்சபை அங்கத்தினர்கள் அப்புண்ணிய புருஷரால் அடைந்தார்கள்.

(5) இச்சபையின் அக்கிராசனர்-க. சதாசிவசெட்டியார் 1929ஞு ஜனவரிமீ 6உ சிவபெருமான் திருவடிநீழலை யடைந்தார். அவரது ஞாபகார்த்தமாக அவர் பெயரால் சதாசிவ தேவார பாடசாலை ஒன்று 1929ஞு மேமீ 19உ

ஸ்தாபிக்கப்பெற்று, அதில் வைசியகுல ஆயிரவர்களின் சிறுவர் சிறுமியர்களுக்குத் தமிழ் வேதமாகிய தேவார திருவாசகத் திருமுறைகளைக் கிரமமாகப் பண்ணுடன் கற்பித்துக்கொடுக்க, ஓர் ஆசிரியரை ஏற்படுத்தி, நாளது வரையில் நடந்து வருகின்றது யாவருக்கும் தெரிந்த விஷயம். இது யாவராலும் பாராட்டக் கூடியது.

(6) இச்சபை, தனக்கோர் நிரந்தரமான சொந்தக் கட்டடம் அமைக்கவேண்டி, அங்கத்தினர்கள் முயற்சித்துக்கொண்டிருந்த சமயத்தில், திருவாளர்—**பெரியபாளையம், தங்கவேலு செட்டியார்** அவர்கள் சபா கட்டிடத்திற்கு வேண்டிய பொருள் (சுமார் ரூ. 3,500-0-0) உதவி, தாமே கட்டிடத்தை முடித்துக் கொடுத்தார். அதனால், சொந்தக்கட்டடம் இந்தச் சபைக்கு 1920ஞு செப்டம்பர்மீ 15௳ ஏற்பட்டது; இதற்கு அவர்பால் நன்றி பாராட்டத் தக்கது. சபையினர் யாவரும் இச்சபா நிலயத்தில் ஆதிவாரந்தோறும் சிறுவர் சிறுமியர்களுக்கு தேவாரபாடம் கற்பிப்பதும், அறுபத்து மூன்று நாயன்மார்களது குருபூஜை நடத்தி வருவதும், ஸ்ரீ கந்தப் பெருமானுர் ஆலயத்தில் சைவ சமயாசாரியர்களது மஹோத்சவமும், தைமாதத்தில் நடக்கும் பிரம்மோற்சவ காலங்களில் தக்ஷிண தேசத்திலிருந்து தமிழ் வேதமாகிய தேவார திருவாசகங்களில் மிக்க பயிற்சிபெற்ற வித்வான்களாகிய ஓதுவார் மூர்த்திகளை வரவழைத்து இன்னிசைக் கருவிகளோடு தமிழ்வேத பாராயணமும்,ஸ்தல மஹிமைப் பிரசங்கமும் நடத்தி வருவது யாவரும் அறிந்த விஷயமே. நம்மவர் யாவரும் இதை அறிந்து புகழக் கடமைப்பட்டுள்ளோம்.

(7) இச்சபா நிலயத்தில் மின்சார விளக்கு இல்லாமை கண்டு,சில அங்கத்தினர்கள் வேண்டுகோளின்மேல்,திருவாளர் பெரியபாளையம் - சிங்காரவேலு செட்டியார் அவர்கள், மின்சார விளக்கு தன் சொந்த செலவில் அமைத்துப் பிரதிமாதம் செலவாகும் காரண்ட்சார்ஜை, தாமே உபகரித்துவருகிறார். அவர் யாவராலும் புகழக்கூடியவர்.

(8) இத்தகைய அரிய பெரிய கயிங்கரியத்தை ஊக்கத்தோடும் நல்லெண்ணத்தோடும் சிரத்தையோடும் நடத்தும் இச்சபைக் காரியதரிசியும், சென்னைநகர் கார்ப்பொரேஷன் கண்டிராக்டருமாகிய, தற்காலம் எருக்கஞ்சேரியில் வசிக்கும் ப. கந்தசாமிசெட்டியார் அவர்களுக்கு, நாம் எல்லோரும் மனம் - வாக்கு - காயம் என்னும் திரிகரணங்களின் வாயிலாக வந்தனம் செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம.

(9) தவிர, வைசியகுல இரத்தினங்களாகிய ஆயிரவர்கள் ஒவ்வொருவரும், இச்சபையில் அங்கத்தினர்களாகச் சேர்ந்து, சைவசமயப் பயிர்தழைத்தோங்க வளர்த்து, என்றும் நிலவும் பொருட்டு, முயற்சி செய்வார்களென்று, எங்கும் நிறைந்த கருணாகர மூர்த்தியாகிய பரம்பொருளைத் தியானிக்கின்றோம்.

திருச்சிற்றம்பலம்.

"வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாம் மரனுமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே."

ஓம்—தத்—சத்.

---

# திருமுருகாற்றுப்படை மூலமும், பரிமேலழகர் உரையும்

இதில் நக்கீரதேவர் வரலாறும், பரிமேலழகர் வரலாறும், தோத்திரப் பாக்கட்குப் புதிய உரையும், காப்புச் செய்யுளுக்குப் புதிய உரையும், ஸ்ரீமான் ஆசிரியர் கோ. வடிவேலு செட்டியாரவர்களால் எழுதப்பெற்று, ஷெ யாரால் பார்வையிடப் பெற்றது.
இதன் விலை அணு 8 தான் வெகுாயம்

கந்தர் அநுபூதி மூலமும் விருத்தியுரையும் அணு 8.

| | | | |
|---|---|---|---|
| விபூதி உருத்திராக்க மகிமை வசனம் | விலை | அணு | 4 |
| பிரதோஷ மகிமை வசனம் | விலை | அணு | 6 |
| ஞானோதய ஸ்தோத்திர திரட்டு | விலை | அணு | 12 |
| கந்தர் கலிவெண்பா மூலமும் உரையும் | விலை | அணு | 8 |
| கந்தர்அலங்காரம் மூலமும் விருத்தியுரையும் | விலை | அணு | 8 |

ஆயுர்வேத யூநாநி முறையில் செய்து முடித்த

## மலச்சிக்கல் நிவாரணி.

10-பலம் டப்பி 1-க்கு விலை ரூபா 2 0 0

(தபாற்கூலி யுட்பட ரூபா 2—8—0)

☞ இதில் சீமைஅத்திப்பழம், திராக்ஷி, சீனைகற்கண்டு, நெய் முதலியவற்றோடு, பச்சிலை-வேர் கொடி-கிழங்கு தினுசுகள் சேர்ந்து செய்யப்பெற்று, சாப்பிடுதற்கு மிக ருசிகரமாயிருக்கும். இரவில் நித்திரை செய்யுமுன், கெச்சைக்காயளவு சாப்பிட்டு, சுத்தஜலம் அல்லது பசும்பால் சாப்பிட்டு உறங்கினால், காலையில் சிக்கலின்றி மலம் கழியும். பலவித வாய்வு ரோகங்களைக் கண்டிக்கும். பசிதீபனம் உண்டாகும். இதுகைகண்ட அநுபவம். மலச்சிக்கல்கொண்ட சிலர், விளக்கெண்ணை சாப்பிடுகிறார்கள். அது சிலசமயம் குளிர்ச்சியைத்தந்து, சுரம்முதலிய உண்டாகும். மேலும் அந்த எண்ணை சிக்கலை ஒருவாறு நீக்கினாலும், வாய்வுகளைக் கண்டிக்காது.

## நவசக்தி உப்புகலந்த

"கர்மரோகஹரி" என்னும்

## மன்மத சிந்தாமணி லேகியம்.

10-பலம் டப்பி 1-க்கு ரூ. 3-8-0 தபாற்கூலி யுட்பட ரூ. 4 0 0

☞ எழானை பலங்கொடுக்கும். நீற்றுப்போன இந்திரியத்தை உறுதிப்படுத்தும்: தாது விருத்தியாக்கும்; தனிவாய்வைச் சேதிக்கும். பித்தரோகங்களைக் கண்டிக்கும்: சரீரம் புஷ்டியாகி வஜ்ரம் போலிருக்கும் சந்தான விருத்தி உண்டுபண்ணும் ஸ்திரீகளுக்குண்டாகும் பலவகை ருதக ரோகங்களைக் கண்டிக்கும்.

உப்பு சேர்க்காமலிருந்தால்

10-பலம் டப்பி 1-க்கு ரூ. 2 8 0 தபாற்கூலி யுட்பட ரூ. 3 0 0

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | திருக்கழுக்குன்ற ஸ்தலபுராணம் (40-பக்கம்) | 0 | 2 | 0 |
| 2. | ,, ,, (12-பக்கம்) | 0 | 0 | 6 |
| 3. | ,, ,, (400-பக்கம்) | 2 | 0 | 0 |
| 4. | ஸ்ரீதிரிபுரசுந்தரி ஸ்தோத்திரம் | 0 | 0 | 6 |
| 5. | பக்ஷிதரிசன தேவாஹலிபடம் 24=16 காகிதம் | 0 | 1 | 0 |
| 6. | படம் 8=4 | 0 | 0 | 3 |
| 7. | அட்டை 8=4 | 0 | 0 | 6 |

# ஹாப்பி (Happy) பவுடர்.

ஸூநாநி ஆயுர்வேத முறைப்படி செய்யப்பெற்று, காப்பிபொடிக்குப்பதிலாக உபயோகிக்கவும்.

10-பலம் பவுடர் ரூபா 1—0—0

(தபாற்கூலி ரூபா 1—8—0)

☞ சஹோதரர்களே! இக்காலத்தில் ஏழை மஹாஜனங்களும் கட்குடியை விலக்குவோம், காப்பிக்குடியை நிறுத்தமுடியாது என்று சொல்லுகிறார்கள். அதனால், காப்பிகுடியானது அன்றாடம் கூலிவேலைசெய்து சொற்ப,வருவாயினால் ஜீவிப்போர் முதல், தனவர்தரீராகச் சகலரிடத்தும் இந்தக் குடியானது எப்படி வேரூன்றியிருக்கிறதென்பதை அறியலாம். காப்பிகுடியானது சரீரத்துக்கு எவ்வளவோ கெடுதியை உண்டுபண்ணி, பலவித அசாத்திய ரோகத்துக்கு இடங்கொடுக்கிறதென்பதை அறியாமலிருக்கிறார்கள். காப்பிகுடியானது சரீரத்தைக் கெடுக்கின்றதென்று மேனாட்டு வயித்தியர்கள் அநேகர் சொல்லி, காப்பியை ஒழித்துவருகிறார்கள், நமது நாட்டினரோ, சுயமாக அறியமுடியாவிடினும், பிறர் சொல்வதையும் கேட்கப் பிரியப்படுகின்றார்களில்லை. அந்தோ! என் செய்யலாம். காப்பிகுடியினால் பணச்செலவு அதிகமாகிற தொருபுறமிருக்க, சரீரத்துக்கு கெடுதி, உண்டாகிற தென்பதை உணர்ந்து, காப்பிகுடியை அறவேஒழித்து காப்பிக்குப்பதில்ஹாப்பி பவுடரிட்டகியாழத்தில் பால் சக்கரை சேர்த்துச் சாப்பிடக்கேட்டுக் கொள்ளுகிறோம். இந்த பவுடரினால் வாத, பித்த, சிலேஷ்ம தூர்நீர்கள் நீங்கி, பசிதீபனம் உண்டாகும், ரத்தசுத்தியாகும்; சரீரத்துக்குப் பலம்கொடுக்கும். மூளைக்கொதிப்பு அடங்கும்; அஜீர்ணம், மந்தம், மலச்சிக்கல்முதலிய வியாதிகள் நீங்கும். இதை ஒவ்வொருவரும் அநுபவித்து உண்மை தெரிந்து கொள்ளவேண்டும்.

---



பண்டிட், S. R. நமசிவாய ராஜயோகி,

நேடிவ் டாக்டர்,

திருக்கழுக்குன்றம் (போஸ்டு)

சிவராஜயோக வைத்தியசாலை கேட்லாக் இனும்·